# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

உபயோகிக்கும் பெண்மணியுடன் தோற்றமளிக்க

# அவன் பெருமை கொள்ளுகிறான்




எண்ணெய்ப் பசையற்றதான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தைப் பாது காக்கவும், மரு, தழும்பு இவைகளைத் தெரியாமல் மறைக்கவும் செய்யும். இந்த அற்புதமான க்ரீமைத் தடவியபின் பவுடர் போட்டுக் கொண்டால், பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்!

**இலவச புஸ்தகம்**

அழகுபற்றிய குறிப்புகள் கொண்ட Lovelier with Pond's என்ற எமது புஸ்தகத்தை வரவழையுங்கள். பி. ஒ. பாக்ஸ் நம்பர் 1012, பம்பாய் 1 என்ற விலாசத்திற்கு எழுதவும்

P. 4439

மலர் 16 இதழ் 31 | கல்கி | துர்முகி ௵ மாசி 20

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



## பிரபல திருமணம்

தஞ்சை ஜில்லா 'பிரபல' மிராசுதாரும், பிரிமியர் பெர்ட்டிலைஸர்ஸ், பிரிமியர் ஆயில் மில்ஸ், (தஞ்சை, கோவை, உதகமண்டலம்) ஆகிய ஸ்தாபனங்களின் உரிமையாளருமான ஸ்ரீ எஸ். ஸ்ரீநிவாஸ ராகவ ஐயங்கார் அவர்கள் குமாரத்தி சௌ. சுந்தரவல்லிக்கும், ஹைதராபாத் அட்வகேட் ஸ்ரீ என். நரஸிம்ம ஐயங்கார் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி என். ராம்ராஜ், B.Sc., B.L., க்கும் தஞ்சையில் 25–1–57ல் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

திருமண விழாவில் கமலா லக்ஷ்மணன் நடன விருந்தும் அரியக்குடி, திருவெண்காடு சுப்ரமண்யம் முதலியவர்களின் இன்னிசை விருந்தும் மிக சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

ஸ்ரீநிவாஸ ராகவ ஐயங்கார் அவர்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தனது இதயபூர்வமான வந்தனத்தை அன்புடன் தெரிவித்துக் கொள்ளுகிறார்.

வாழ்க, மணமக்கள்!



மலர் 16
இதழ் 31

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

துன்முகி௵
மாசி௴ 20௳

# உங்கள் வாக்குரிமை

தேர்தல் தேதி நெருங்க நெருங்க வோட் சேகரிக்கும் முயற்சிகளைப் பற்றி நமக்குப் பலவிதமான தகவல்கள் வந்து கொண்டிருக்கின்றன.

சில அபேட்சகர்கள் ஏராளமாக லஞ்சம் கொடுத்து வாக்குகளைப் பெற்று விடத் திட்டமிட்டிருக்கிறார்களாம்!

இன்னும் சில அபேட்சகர்கள் தங்கள் தொகுதி மக்களை மிரட்டியும் உருட்டியும் பயமுறுத்தியும் வாக்குகளைக் கேட்டு வருகின்றனராம்!

இப்படிப் பலவிதமான நடவடிக்கைகளில் தேர்தலில் நிற்கும் அபேட்சகர்கள் ஈடுபடலாம். பலவிதமான பிரசாரங்களிலும் ஈடுபடலாம்.

ஆனால் பொதுமக்கள் — வாக்காளர்கள் இவற்றுக்கெல்லாம் இடம் தந்துவிட மாட்டார்கள் என்ற பூரண நம்பிக்கை நமக்கு உண்டு. இந்தப் பயமுறுத்தல்களுக் கெல்லாம் அஞ்சிவிட மாட்டார்கள் என்ற உறுதியும் நமக்குண்டு. ஆகவே, நமது நாட்டில் தேர்தல்கள் மிக அமைதியாக நிச்சயம் நடைபெறும்.

"உண்மையே அனைத்துக்கும் மேலான பொருள். அதுவே வெல்லும்" என்பது பாரத நாட்டின் ஆட்சி மந்திரம்.

நம்மை ஆளும் சர்க்காருக்கு இந்த விதியை வகுத்திட்ட நாம், அபேட்சகர் களைத் தேர்ந்தெடுக்கும் இந்தத் தேர்தலிலும் அதே கொள்கையைக் கடைப்பிடிப்பது தானே முறை.

குடியரசு என்பது என்ன?

மக்கள் தங்கள் மனச்சாட்சியையே அரசனாக ஏற்றுக்கொண்டு நடத்தும் ஆட்சி முறையே குடியரசு.

வாக்குரிமை பெற்ற ஒவ்வொரு மனிதனும், தனிமையான இடத்தில் மனச் சாட்சியின் கட்டளைப்படி வோட்டுப் போட்டு, அதில் பெருவாரியாக யார் தேர்ந்தெடுக் கப்படுகிறார்களோ அவர்களைக் கொண்டு ஆட்சி நடைபெறச் செய்வதே குடியாட்சி.

ஆகவே குடியரசு என்பது மக்களின் மனச்சாட்சியின் ஆட்சியாகும். வாக்கா ளர்கள் தங்கள் பொறுப்பை யுணர்ந்து வாக்குகளைப் பதிவு செய்ய வேண்டும்.

தேர்தலின் முடிவு எப்படியாகுமோ, எப்படி வோட்டுப் போட்டால் தனக்குக் கௌரவமாக இருக்கும் என்று எவருமே தாறுமாறாக எண்ணி மனச் சாட்சிக்கு விரோதமாக வோட்டுப் போடலாகாது. அப்படிச் செய்வது அரும்பாடு பட்டுப் பெற்ற வாக்குரிமையை இழப்பதற்கு ஒப்பாகும்.

தேர்தல் என்பது ஒரு சூதாட்டமல்ல. வோட்டுச் சாவடிக்குள் சென்று போடும் வாக்குச் சீட்டு வெறும் காகிதமல்ல. தங்கள் மனச்சாட்சியைத்தான் பெட்டிக்குள் போடுகிறார்கள். இதை வோட்டுச் சாவடிக்குச் செல்லும் ஒவ்வொரு வாக்காளரும் நன்றாக நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

அடுத்த ஐந்தாண்டுகளுக்கு நமக்கு ஆட்சியாளர்களாக யார் அமைய வேண்டும், எப்படிப்பட்டவர்கள் ஆட்சி பீடத்துக்கு வரவேண்டும் என்பதைத் தீர ஆலோசித்து வோட்டுப் போடவேண்டும்.

கடைசியாக ஒரு வார்த்தை கூற விரும்புகிறோம். இந்த வார்த்தையை ஏற் கனவே பன்முறை நாம் வற்புறுத்திக் கூறியிருந்தாலும் மீண்டும் இப்போது நினைவு படுத்த வேண்டியது நமது கடமை என்று கருதிச் சொல்லுகிறோம்.

நாடு வேறு மக்கள் வேறல்ல. தமிழ்நாடு தருமம் மலிந்த நாடு. தெய்வ பக்தி சிறந்து விளங்கும் நாடு. தமிழ்நாட்டில் சென்ற சென்ற இடமெல்லாம் வானளாவிய

கோபுரங்களைப் பார்க்கிறோம். இவை தமிழ் மக்களின் தரும நெறிக்கும் தெய்வ பக்திக்கும் அழியாச் சின்னங்களாகும். அந்த தேவாலயங்களில் காலையும் மாலையும் மற்ற நேரங்களிலும் நடைபெறும் பூஜைகளும் அங்கிருந்து எழும் மங்கள வாத்திய ஒலிகளும் நமது பண்பாட்டைக் காக்கும் காப்பாகும்.

இத்தகைய அருமையான பண்பாட்டை வளர்த்து முன்னோர்கள் நம்மிடம் தந்து விட்டுச் சென்றிருக்கிறார்கள். இதை இன்னும் போற்றி வளர்க்க நாம் எவ்வளவோ கடமைப் பட்டுள்ளோம். ஆனால் இன்றுள்ள சூழ்நிலையில் அதைச் செய்ய முடியவில்லை. ஆனால், ''செய்தாரில் பெரியர் சிதையாதவர்'' என்று நமக்கு ஆறுதலும் சொல்லியிருக்கிறார்கள்.

ஆகவே இன்றுள்ள நிலையில் 'சிதைக்காத' 'பெரியோர்'கள் நாட்டுக்கு வேண்டும்.

'சிதைப்பதே என்னுடைய நோக்கம்' என்று இடைவிடாமல் கூச்சமின்றிப் பேசும் ஒருவர் நம்மிடை செல்வாக்கடைந்து கூட்டத்தையும் சேர்த்துக் கொண்டு வருகிறார். தமிழ் நாட்டுக் காங்கிரஸையே தம் வசமாக்கிக் கொண்டு விட்டதாகத் திரும்பத் திரும்பப் பெருமையடித்துக் கொண்டு நாளது வரையில் பேசி வருகிறார்.

சென்ற வாரம் ஞாயிற்றுக்கிழமை ''சுதேசமித்திரன்'' பத்திரிகையில் வெளியான கீழ்க்கண்ட செய்தியை எல்லாரும் படித்திருப்பார்கள். பெரம்பலூர் அருகில் 22-ம் தேதி திரு ஈ. வே. ரா. அவர்களுடைய பிரசங்கம் நடந்தது. அங்கு அவர் பேசியதாவது:

''காமராஜர் பதவிக்கு வந்ததும் எங்களுடைய (தி. க.) ஆதரவை விரும்பினார். 'எங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்தால் உங்களுக்கு ஆதரவு கொடுக்கிறோம்' என்றோம். 'உங்களுக்கு (தி. க. வுக்கு) உதவி செய்வது தான் என் கடமை. அதை நானே செய்வேன்' என்று காமராஜர் சொன்னார்.''

முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் பிராமணர்கள் வீட்டுக்குள் புகுந்து அக்கிரமங்களைச் செய்து விட்டார்கள் என்று ஈ. வே. ரா. பெரியார் இப்போது கூறியிருக்கிறார். அதனால் அவர்களுக்கு வோட்டுப் போடாதீர்கள் என்றும் கேட்டுக் கொள்கிறார். இந்த அக்கிரமங்களுக்கெல்லாம் ஈரோடு பெரியார்தான் மூலகர்த்தா. அவருடைய தீவிர கொள்கையை அனுசரித்துத்தான் அவருடைய சீடர்கள் இந்த அக்கிரமங்களைச் செய்தார்கள். இனிமேல் நடக்கும் இத்தகைய அக்கிரமங்களுக்கும் ஈ. வே. ரா. அவர்கள்தான் முழுப் பொறுப்பு ஏற்றுக் கொள்ள வேண்டும். முதலைக் கண்ணீரைப் பார்த்து மக்கள் ஏமாந்து போகலாகாது. முதலை வாயினின்றும் தப்ப வேண்டும். திரு காமராஜர் அதில் சிக்கினாலும் தமிழ் மக்கள் தப்பிவிடவேண்டும்.

இதை யெல்லாம் நினைவிலிருத்தித் தமிழ் நாட்டு ஆண் — பெண் வாக்காளர்கள் அனைவரும் தங்கள் வாக்குகளை நாட்டின் பண்பாட்டைச் சிதைக்கும் வழியில் செலவிடாமல் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம். நாஸ்திகர்களும் வேண்டாம், நாஸ்திகர்களுக்கு இப்போது துணையாக நிற்பவர்களும் அவர்கள் துணையை நம்பிச் சரண் புகுந்தவர்களும் நமக்கு வேண்டாம்.

# தேர்தலில் பெண்மணிகள்

சென்ற இரண்டு மூன்று வாரங்களாகவே தமிழ் நாட்டுப் பெண்மணிகளிடமிருந்து நமக்கு ஏராளமான கடிதங்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. பொதுவாக எல்லாக் கடிதங்களிலுமே ''தேர்தலில் பெண்களின் கடமை என்ன? நாங்கள் யாருக்கு வோட்டுப் போடுவது? எங்கள் நிலைமை தர்மசங்கடமாக இருக்கிறதே!'' என்று கேட்டிருக்கிறார்கள். ஒரு பெண்மணி தம்முடைய இதயக் குமுறலை அப்படியே எழுத்தில் கொட்டியிருக்கிறார்:

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பாரத நாட்டு மக்கள் பக்தி செலுத்தி வணங்கி வழிபட்டு வந்த தெய்வம் ஸ்ரீராமன்.

வால்மீகியும், கம்பரும், துளஸிதாஸரும், தியாகராஜரும் பாடிப் பாடிப் பரவசத்துடன் போற்றிய தெய்வம் ஸ்ரீராமன்.

காந்தி மகான் பிறந்த நாள் தொட்டுத் தமது கடைசி மூச்சு நிற்கும் வரை சிந்தையில் போற்றி வந்த தெய்வம் ஸ்ரீராமன்.

வயிற்றில் குண்டு பாய்ந்து அந்த மகானின் புனித உடல் உயிரிழந்து தரையில் சாயுமுன் காந்தியடிகளின் வாயினின்றும் வந்த கடைசி வார்த்தை ''ஹே! ராம்!'' என்ற ஸ்ரீராம பிரானின் திருநாமம்தான்.

அந்த ஆராவமுதனை, அயோத்தியர் வேந்தனைப் பழித்துப் பழித்துத் தெருத் தெருவாக அவன் புனிதத்தைக் குலைத்து வரும் அநியாயத்தைக் கண்டு நாகரிகம் நிறைந்த தமிழ் நாட்டு மக்கள், தெய்வ பக்திகொண்ட தமிழ் மக்கள் நெஞ்சம் புண்பட்டு, உள்ளம் நைந்து, கண்ணீர் மல்கி ஏங்கி நிற்கின்றனர்.

பம்பாயில் வெளியான ஏதோ ஒரு புத்தகத்தில் ஒரு பகுதியில் முஸ்லிம் மதத்தைப் பழித்திருந்ததாகக் காணப்பட்டதாம். அதற்காகப் பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்கள் ஆயிரம் தடவைகள் மன்னிப்பு கேட்டுக் கொண்டார்.

ஆனால் தெய்வத் தமிழ் நாட்டிலோ, ராமபிரானையும் சீதா பிராட்டியையும் அனுதினமும் வழிபடும் லக்ஷோபலக்ஷம் ஆண்களும் பெண்களும் நெஞ்சு புண்படக் கூடிய காரியம் நித்திய நிகழ்ச்சியாக நடந்து வருகிறது.

'' கல்வி சிறந்த தமிழ்நாடு — புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு''

என்று பெருமிதத்தோடு பாடினார் கவியரசர் பாரதியார். அந்த உலக மகாகவியான கம்பரைப் பெற்ற தமிழ் நாட்டில் இன்று இந்தக் கோரக் காட்சியைக் காண்கிறோம்.

அப்பரையும், சுந்தரரையும் ஆளுடைய பிள்ளையையும், ஆழ்வாராதிகளையும் பெற்ற



திரு காமராஜ், தமக்குத் திரு ஈ.வே.ரா ஆதரவு அளிப்பதன் காரணம் என்னவென்பதைக் கூறிச் சமாதானப்படுத்த முயன்றிருக்கிறார். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியுமா?

7 ரூபாய்

5 ரூபாய்

சென்னை சர்க்கார், என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர்களுக்கு இடைக்கால கஷ்ட நிவாரணமாக ஏழு ரூபாய் தரப் போவதாக அறிவித்திருக்கிறார்கள். சென்ற வருஷம் நவம்பர் முதல் தேதி ஐந்து ரூபாய் பஞ்சப்படி உயர்த்தப் போவதாக அறிவித்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

தெய்வத் தமிழ்நாட்டிலே இன்று இந்த அலங் கோலத்தைப் பார்க்கிறோம்.

காந்தியடிகள் நம் நாடு சுயராஜ்யம் அடைய அரும் பாடுபட்டார். சுயராஜ்யம் அடைந்த பின் நாட்டில் ராம ராஜ்யம் நிலவ வேணும் என்று அனவரதமும் சொல்லி வந்தார். கடைசியில் அந்த ராம நாமத்தைச் சொல்லிக் கொண்டே உயிரையும் நீத்தார். இன்று அந்த ராமனின் திருவுருவப்படம் தெரு வீதிகளில் எல்லாம் எரிக்கப்படுகிறது. தமிழ்நாட்டு மங்கையரின் உள்ள மெல்லாம் கொதிக்கும்படி அன்னை சீதையின் பெயர் இழிவுபடுத்தப் படுகிறது:

சீதாப் பிராட்டிக்கு மாசு கற்பித்துப் பிதற்றும் கறுப்புக் கும்பலுடன் ஏன் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் சேர்ந்து விட்டது என்று அன்னை சீதையை அனுதினமும் வணங்கும் பெண்மணிகள் மனம் வருந்துகிறார்கள்.

ராமகிருஷ்ண மடத்துத் தெரு
மயிலாப்பூர் - 20—2—57

மீனாட்சி

# கண் துடைப்புத் திட்டமா?

"இரண்டு லட்சம் சிப்பந்திகளுக்கு யோகம்" என்ற தலைப்பின் கீழ் 17-2-57 "கல்கி" இதழில் வெளியான உப தலையங்கத்தைக் குறித்துப் பல அன்பர்கள் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். அக் கடிதங்களில் ஒன்றை மாத்திரம் இந்த இதழில் வெளியிட்டுள்ளோம். அவர்கள் எல்லோரும் பல ஆண்டுகளாக ரயில்வே இலாக்காவில் தொண்டு புரியும் ஸ்டேஷன்மாஸ்டர்கள் ஆவர். அப்பதவியுடன், அகில இந்தியா ஸ்டேஷன்மாஸ்டர்கள் சங்கத்தில் பொறுப்பு வாய்ந்த ஸ்தானங்களை வகிப்போரும் எழுதியிருக்கிறார்கள். தாங்கள் சென்ற ஒன்பது ஆண்டுகளாகப் பொறுமையுடன் சாத்துவிகமாகப் போராடி வரும் வரலாற்றை அவர்கள் மனம் உருகச் சித்திரித்திருக்கிறார்கள். "வருஷக்கணக்காக இரவில் கண்விழித்து, இயற்கைக்கு விரோதமான சூழ்நிலையில் உருவான பலனின்றிப் பணிபுரியும் எங்கள் கண் பார்வை வேலையிலிருந்து விலகுவதற்குள் மிகவும் பாதிக்கப்பட்டு விடுகிறது" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். மிகப் பொறுப்பு வாய்ந்த அவர்களுடைய அபிப்பிராயத்தை அலட்சியமாக ஒதுக்கி விடுவதற்கில்லை.

சமீபத்தில் ரயில்வே மந்திரி ஸ்ரீ ஜகஜீவன் ராம் வெளியிட்ட புதுத் திட்டத்தினால் 1,70,000 ரயில்வே சிப்பந்திகள் பலன் அடையப் போகிறார்கள் என்று தினசரிப் பத்திரிகைகளில் செய்திகள் வெளியாகி




"பாக்தாத் ஒப்பந்தம் போன்ற இராணுவ ஒப்பந்தங்களைச் செய்து கொண்டால்தான் பாகிஸ்தானுக்குப் பொருளாதார உதவி கிடைக்கிறது" என்று பாகிஸ்தான் பிரதமர் கூறுகிறார்.

விருந்தளைச் சகலரும் அறிந்திருக்கலாம். இந்தியாவில் உள்ள பல பத்திரிகைகளும் அச்செய்திகளை அடிப்படையாகக் கொண்டு தலையங்கங்கள் எழுதியிருந்தன. பொதுவாக, அத்திட்டத்தை எல்லாப் பத்திரிகைகளும் வரவேற்றிருந்தன.

ஆனால், பல ஸ்டேஷன்மாஸ்டர்களும் நமக்கு எழுதியுள்ள கடிதங்கள் கூறும் கதைமுற்றிலும் வேறு விதமாக இருக்கிறது. ரயில்வே மந்திரியின் புதிய திட்டத்தினால் அதிக பட்சம் ஐயாயிரம் பேருக்கு மேல் பலன் அடைவதற்கு இடமில்லை என்பதை அவர்கள் புள்ளி விவரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். இதில் மற்றொரு விந்தை என்னவெனில், பெரும்பாலான ஸ்டேஷன்மாஸ்டர்களும், புதிய திட்டத்தில் கண்டுள்ள உயர்ந்த சம்பளம் வாங்குவதற்கு முன்பே வயோதிகம் காரணமாக வேலையிலிருந்து விலகும்படி நேர்ந்துவிடும் என்பதுதான்! எனவே, புதிய திட்டம் புள்ளி விவரங்கள் அடங்கிய ஒரு செப்பிடு வித்தை என்றும், வெறும் கண் துடைப்பு வேலை என்றும் வர்ணித்துப் பல அன்பர்கள் கடிதம் எழுதியுள்ளனர். புதிய திட்டத்தினால் சில உயர்ந்த அதிகாரிகளுக்குத்தான் லாபமே ஒழிய, தங்களுக்கு அதனால் எவ்விதப் பலனும் இல்லை என்று 'பயர்மென்' போன்ற ரயில்வே சிப்பந்திகளும் எழுதியிருக்கிறார்கள்.

இத்தகைய புகார்கள் எழும்படியான ஒரு திட்டத்தை ரயில்வே மந்திரி வெளியிட்டிருப்பது வருந்தத்தக்கதாகும். மேற்படி திட்டத்தில் உள்ள புள்ளி விவரங்களை மேலெழுந்தவாரியாக நோக்குமிடத்து, ஸ்டேஷன்மாஸ்டர்கள் முதலிய ரயில்வே சிப்பந்திகளுக்கு மிகுந்த நன்மை ஏற்பட்டிருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால், உண்மை அதுவல்ல என்பதைப் பல ஸ்டேஷன்மாஸ்டர்கள் சுட்டிக்காட்டிக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். அவர்களுடைய அதிருப்தியும் கண்டனமும் ரயில்வே மந்திரியின் செவிகளுக்கும் எட்டியிருக்கலாம். இத்தகைய திட்டத்தினால் ரயில்வே சிப்பந்திகளுக்குத் திருப்தி ஏற்படாததுடன், அவர்களுடைய மனக்கொதிப்பு இன்னும் அதிகமாகியிருக்கிறது என்பதையே அக் கடிதங்கள் திருபிக்கின்றன. எனவே, இதையெல்லாம் ரயில்வே மந்திரி உடனடியாகக் கவனித்து, பெரும்பாலான சிப்பந்திகளுக்குத் திருப்தியளிக்கக்கூடிய விதத்தில் பரிகாரம் அளிக்க முற்படுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

## வோட்டினைப் போட்டிடுவோம்

ஜீ. கிருஷ்ணமூர்த்தி

தேர்தலும் நாட்டிலே வந்ததடி—நம்மைத்
திக்குமுக்காடிடச் செய்யுதடி
பார்த்தறி யாதபு துமுகங்கள்—நித்தம்
பார்க்கவே நாடி வருகுதடி

ராசாவைப்போலவே வாழ்ந்தவர்க்கும்—நடு
ராத்திரித் தூக்கமும் போச்சுதடி
கூசாமல் உன்னையும் என்னையுமே—கண்டு
கும்பிடு போடவே ஆச்சுதடி!

கள்ள மார்க்கெட்காரப் புள்ளிகளும்
—இன்று
காந்தியின் பேராற் பிழைக்குதடி!
உள்ளத்திலே கறுப் புள்ளவரும்—உயர்
உத்தமர் போலத் திரிவாரடி!

வெள்ளைய ராட்சியின் வீரர்களாய்—அவர்
வெற்றிக்கே நித்தமும் நின்றவர்கள்
வெள்ளைக் கதர்வேட்டி கட்டிவிட்டார்
—வெளி
வேடங்கள் போடத் தொடங்கி
விட்டார்!

கண்கட்டி வித்தைகள் செய்திடுவோர்—அவர்
காலம் மலையேறிப் போச்சுதடி!
கண்ணிய முள்ளவர் யாரென்று—நன்றாகக்
கண்டபின் வோட்டினைப்
போட்டிடுவாய்

# அபூர்வக் காதலர்கள்

மாவல்லியின் தியாகம் என்னும் சரித்திரத் தொடர்கதையைப் படித்துக் கொண்டு வரும் நேயர்களுக்கு இவ்வாரக் கல்கி இதழ் அட்டையை அலங்கரிப்பவர்கள் யார் என்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

தந்த விக்கிரகம் போன்ற அழகியும் இளம் கன்னிகையுமான மாலவல்லி ஏன் புத்த பிக்ஷுணிக் கோலம் பூண்டாள்? அதோடு மட்டுமா? துறவு நிலைமையைக் கைக்கொண்ட அவளுக்கு ஒரு காதலன் வேறு? எல்லாம் புரியாத புதிராகத்தானே இருக்கிறது? மாலவல்லி மாத்திரமல்ல, அவளுடைய காதலன் வீரவிடங்கனும் நமக்குப் புரியாத புதிர்தான்!

சாம்ராஜ்ய ஆசை கொண்ட பல்லவர், பாண்டியர் என்ற பேரரசுகளுக்கு இடையே அழிந்துபோன சோழ சாம்ராஜ்யம் மீண்டும் மலர்ச்சி கொள்ள வேண்டுமென்ற கனவில் மக்கள் துடித்தெழும் குழப்பமான காலத்தில் எத்தனை சூழ்ச்சிக்காரர்கள், எத்தனை வேஷக்காரர்கள், உளவாளிகள் கிளம்புவார்கள்? நாட்டுப் பற்று கொண்ட வீர இளைஞன் தான் பூதுகன். மாலவல்லியும், அவள் காதலன் வீர விடங்கனும்கூட நாட்டுப் பற்று கொண்டவர்கள்தான். இவர்கள் காதல் எப்படியாகிறது? சோழ சாம்ராஜ்யம் எப்படி உருவாகிறது என்பதை எல்லாம் மாலவல்லியின் தியாகத்தில் காணலாம்.

# வம்புச் சாவடி

"கொக்கி"

"உங்கள் பாடு யோகம்தான்! இராக்கிப் படியைச் சென்னை சர்க்கார் தாற்காலிகமாக ரூபாய் ஏழு வரை உயர்த்தி யிருக்கிறார்களாமே?" என்று எனது நண்பர் என். ஜி. ஓ. ஒருவரைக் கேட்டேன்.

"அப்படி ஒன்றும் பிரமாதமாக உயர்த்தி விடவில்லை. இந்த ஏழும், ஐந்தும் எந்த மூலைக்குப் போதும்? தேர்தலுக்குள் அரிசி விலையும் உயர்ந்த பட்ச எல்லையை அடைந்து விடப் போகிறது. ஏதோ கண் துடைப்புக்காக இந்த உயர்வு! தேர்தலில் வோட்டுக்காக அளிக்கும் பணம் என்று வைத்துக் கொள்ளுமே!" என்றார் அந்த என். ஜி. ஓ.

"ஒரு வோட்டுக்கு ஏழு ரூபாய் என்று சொல்லி விட்டீர்களே இலேசாக" என்றேன்.

"ஏதோ கிடைத்தது ஆதாயம். மறுபடியும் தேர்தல்கள் வராமலா போய்விடப் போகின்றன. போகிற போக்கைப் பார்த்தால், சென்னை ராஜ்யத்தில் காங்கிரஸ் பெரும்பான்மை பெறுமா என்பதை யோசிக்க வேண்டியதாகி வருகிறது. எது எது எப்படியாகுமோ பார்த்தசாரதி ஸ்வாமிக்குத்தான் தெரியும்!" என்று சொல்லி விட்டு, திருவல்லிக்கேணி பஸ் வந்ததும் அதில் என். ஜி. ஓ. நண்பர் ஏறித் தொத்திக் கொண்டார்.

*　　　*　　　*

என். ஜி. ஓ.க்களுக்குச் சென்னை சர்க்கார் அளித்திருக்கும் பஞ்சப்படி உயர்வை க. து. காரியம் என்றுதான் சொல்ல வேண்டும். க. து. காரியம் என்னும்போது கண் துடைப்புக் காரியம் என்ற அர்த்தத்திலேயே கூறுகிறேன். ஆனால் இதைப் பற்றி வீடு திரும்பும் போது மற்றொரு நண்பரை "க. து."க்கள் என்றால் என்ன?" என்று பரீட்சை வைத்தேன்.

"'க. து.'க்கள் என்றால் தி. மு. க.!" என்றார் அந்த நண்பர்.

"கண் துடைப்புக் காரியம் செய்பவர்களா?" என்று கேட்டேன்.

"இல்லை. இல்லை. கண்ணீர்த் துளிகள்" என்றார் நண்பர்.

"கண்ணீர்த் துளிகள் என்று கோஷ்டியார் இருக்கும் பட்சத்தில் கண்ணைத் துடைப்பவர்கள் என்று ஒரு சாராரும் இருக்கத்தானே வேண்டும்? சென்னை காமராஜர் மந்திரி சபையைக் க. து.க்கள் சபை என்று நான் கூறுகிறேன். ஏனென்றால், இது என். ஜி. ஓ.க்களுக்கு நிகழும் மார்ச்சு மாத தேர்தல் சுப முகூர்த்தத்தை முன்னிட்டு வரதட்சிணையாக ஏதோ கண் துடைப்புக் காரியம் செய்திருக்கிறார்கள். ஆகவே இதில் யார் நிஜமான க. து.க்கள்? தி. மு. க.வா—அல்லது காமராஜர் கோஷ்டி ஆட்சியாளரா சொல்லும்?" என்று கூறினேன்.

சிறிது நேரம், வரையில் பாவம்! அந்த நண்பர் பேந்தப் பேந்த விழித்தார். விழித்து விட்டு, "அதென்னமோ சார். கண்ணீர்த் துளிக்காரர்களுக்கும், காரியம் ஆக வேண்டுமே என்பதற்காகக் கண் துடைப்புக் கைங்கரியம் செய்பவர்களுக்கும் உள்ள தாரதம்யங்கள் எனக்குத் தெரியாது. க. து. என்பது தி. மு. க. என்றுதான் சொல்லுகிறார்கள். நீங்களோ காமராஜர் கோஷ்டியாருக்கும் 'க. து.' பட்டம் பொருந்தும் என்கிறீர்கள்! இதெல்லாம் எனக்கு ஒரே குழறுபடியா யிருக்கிறது. என்னைப் பொறுத்தமட்டில் நான் தேசியப் பற்றுள்ளவன். என் வோட்டை நான் மாட்டுக்குப் போட்டுவிடப் போகிறேன்!" என்றார்.

"என்ன மாட்டுக்குப் போட்டுவிடப் போகிறீர்களா? பசி தாங்காமல் எதைப் போட்டாலும் தின்னக் கூடிய சென்னை மாடுகள் விஷயத்தில் சற்று ஜாக்கிரதையாகவே, கவனித்துப் போடும்! மாடுகளில் நல்ல மாடுகளும் உண்டு. பசுத்தோல் போர்த்திய புலிகளும் உண்டு. தமிழ் நாட்டின் அரசியல் சமாசாரம் உமக்குத் தெரியாவிட்டால் என்னைக் கேளும். த. நா. கா.வுக்கும் (தமிழ்நாடு காங்கிரஸுக்கும்) தி. க.வுக்கும் உள்ள உறவு உமக்குத் தெரியாதா என்ன?" என்று கேட்டேன்.

"பேஷாகத் தெரியும். இவ்வளவு காலமாக (சில ஆண்டுகளாக) கதர்ச் சட்டையிலே கறுப்புச் சட்டை தி. க. வைப் பார்த்தோம். இப்போது தி. க. விலே கதர்ச்சட்டைகளைப் பார்க்கிறோம். திராவிடக் கழகம் காமராஜர் மூலம் அதிகாரத்தை அடையப் பார்க்கிறது" என்றார் நண்பர்.

"தெரிகிறதா? தெரிந்தால் சரி. தேர்தல் பிரசங்கங்கள் எல்லாம் ஒன்று விடாமல் நீங்கள் கேட்கிறீர்கள் என்று இதனால் எனக்கும் தெரிகிறது!" என்றேன்.

"உண்மைதான். நேற்றுக் கூடப் பாருங்கள்.... ஸ்ரீ காமசாமி நாயக்கர் .... இல்லை யில்லை .... ராமகாம நாயக்கர்.... இல்லை, இல்லை ராமராஜ காமசாமி...."

"போதும் ஐயா, போதும்! பெயர் எப்படி யிருந்தால் என்ன, எல்லாம் ஒன்றுதான் ஸ்ரீராமசாமி நாயக்கர் என்று சொல்லுவதற்கு இவ்வளவு தட்டுத் தடுமாற்றமா?"

"ஹாஹாம்! ஸ்ரீ ராமசாமி நாயக்கர் பெயரை நினைத்ததும் கூடவே ஸ்ரீ காமராஜ நாடார் பெயரும் தோன்றி விடுவதால் இந்தக் கூட்டுப் பெயர் குளறுபடிகள்..!"

"ஈ. வே. ரா. பிரசங்கத்துக்குப் போயிருந்தீரா? அதைச் சொல்லும்!"

"போயிருந்தேன். காங்கிரஸைத் தாம் ஆதரிக்க வில்லை யென்றும் காமராஜரையே ஆதரிக்கச் சொல்வதாகவும் அறிவித்தார். ரொம்ப சரி! என்று அடுத்த பேட்டை கூட்டத்துக்குச் சென்றேன்!" என்றார்.

"அடுத்த பேட்டைக்கு நாமும் அப்புறம் வருவோம். இப்போது நேரமாகி விட்டது!" என்று சொல்லி என் வீட்டுக்குள் நுழைந்தேன்; வேறு ஒருவர் வீட்டுக்குள் அல்ல.

புதிய சமூகத் தொடர் கதை

# மலைச்சாரல் மாதவி

ஆனந்தி




கல்கி இதழில் ஆரம்பமாகிறது.





# இந் நலன்களையும் நீங்கள் பெறலாம்!

சொந்தமாக ஒரு வீடு





உங்களுக்கென்று காணி நிலம்

உங்கள் குழந்தைகளுக்கு கல்வி வசதி





தேர்ந்த வைத்திய வசதி

வயோதிக காலத்தில் வளமான வாழ்க்கை



தேசீய சேமிப்பில் முதலீடு செய்யும் உங்கள் பணம் பத்திரமாயிருப்பதுடன் அதற்கு நல்ல வட்டியும் கிடைக்கிறது. அத்துடன் சமுதாய சுபீட்சத்திற்கான தேசீய திட்டத்திற்கும் செலவு செய்ய அந்தப் பணம் உதவுகிறது.

விவரங்கள் மற்றும் / அல்லது முதலீடு செய்வது பற்றியுள்ள நிபந்தனைகளுக்கு எழுதுங்கள்:—தேசீய சேமிப்பு கமிஷனர், சிம்லா, அல்லது ராஜ்ய பிரதேச சேமிப்பு அதிகாரி.

## சிறுகச் சேமித்து பெருக வாழுங்கள் நாட்டின் செழுமையில் முதலீடு செய்யுங்கள்.

DA-36/160 TM

# யார் இந்த சா. கணேசன்?

காரைக்குடி என்றாலே திரு சா.கணேசன் ஞாபகந்தான் வருகிறது. சென்ற முப்பது ஆண்டுகளில் தமிழ் நாட்டின் வரலாற்றிலே அரசியல் துறையிலும் சரி, இலக்கியத் துறையிலும் சரி, திரு சா. கணேசன் நிலையான ஒரு இடத்தைப் பெற்றிருக்கிறார்.

திரு சா. கணேசன் 'சட்டை' அணிவதில்லை. இதற்குக் காரணம் பொதுமக்களின் நலன் சம்பந்தப்பட்ட ஒரு விஷயமே. 1936 இறுதியில் இப்பகுதியில் ஜில்லா போர்டு தேர்தல் நடந்த போது, கானாடுகாத்தானில் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவருடைய வீட்டுக்கு முன் திரண்டிருந்த ஒரு கூட்டத்தைப் பார்த்து, ''சுட்டு விடுவேன்'' என்று பயமுறுத்தினார். அப்பொழுது தமது சட்டையை அகற்றி மார்பைக் காட்டியவர் திரு சா. கணேசன். இந்தச் சம்பவத்துக்குப்பிறகு சட்டை அணிவதே இல்லை. இடுப்பில் நாலு முழ வேஷ்டி; தோளில் மடிப்புக் கலையாத ஒருதுண்டு. திரு கணேசன் தமது பதினைந்தாவது வயதில் பள்ளிப் படிப்பை விட்டுப் பொதுவாழ்வில் ஈடுபட்டார். காந்தி பக்தி திரு சா. கணேசனை ஆட்கொண்டு விட்டது.



காரைக்குடி சிங்கம்

மகாத்மா காந்தி 1927-ல் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்த போது, அவருடன் கூடவேயிருந்து அவருக்கு வலது கரமாய் விளங்கினார் திரு சா. கணேசன். அப்போது மகாத்மா காந்தியைச் செட்டிமார் நாட்டுக்குள் நுழையவிடக் கூடாதென்று, தேசியத்துக்கே விரோதமாய் இருந்தவர்கள் மிகப் பாடுபட்டார்கள். அதை முறியடித்தவர்கள் ராய. சொ., சொ. முருகப்பா, சா. கணேசன் முதலான பழம்பெரும் தேச பக்தர்களாவர்.

காந்திஜியின் சத்தியாக்கிரகப் போராட்டங்களில் திரு சா. கணேசன், ஈடுபட்டு மும்முறை சிறை சென்றார். தனி நபர் சத்தியாக்கிரகத்தில், அவரைச் செட்டிமார் நாட்டுக்குள் போலீஸார் கைது செய்யாமல் விட்டனர். மகாத்மாவின் ஆணைப்படி அவர் சட்டத்தை மீறித் தில்லிக்குக் கால்நடையாகவே பாத யாத்திரையை மேற்கொண்டார். ஆனால், சென்னையை அடைந்ததும், திரு சா. கணேசன் கைது செய்யப்பட்டார்.

ஆகஸ்ட் போராட்டத்தின்போது, செட்டிமார் நாட்டுப் பகுதி, தமிழ்நாட்டிலேயே தலைசிறந்து விளங்கியது. இதற்கு மூலகாரண புருஷர் திரு கணேசன்தான். நகரத்தவர்களில் அநேகம் பேர்கள் தலைமறைவாகச் சென்னை நகரில் திரு சா. கணேசன் தலைமையில் பல ரகசியப் போராட்டங்களை நடத்தினர். அக்காலத்தில் திரு சா. கணேசனின் வீர தீரச் செயல்களைக் கண்டு தமிழ் நாட்டுத் தியாகிகள் அனைவரும் மூக்கின் மேல் விரல் வைத்து வியந்தனர்.

பொதுவாகக் காரைக்குடி, தேவகோட்டை, திருவாடானை, பூலாங்குறிச்சி, பனங்குடி ஆகிய செட்டிமார் நாட்டுப் பகுதிகள் 1942-ம் ஆண்டு ஆகஸ்ட் போராட்டத்தில் அரிய சேவைகள் புரிந்தன; தியாகம் பல செய்தன என்று கூறவேண்டும்.

அரசியல் துறையில் மட்டுமன்றி, சமுதாயத் துறையிலும் திரு சா. கணேசன் அரிய பல செயல்களைப் புரிந்திருக்கிறார். சூதாட்டங்களை 'ஷோ' என்ற பெயரில் நடத்தி, மக்களுக்குக் கேடு செய்து கொண்டிருந்ததை ஒழிப்பதற்காக, திரு சா. கணேசன் சத்தியாக்கிரகம் செய்து, நகரத்தார் பகுதியில் அவை நடக்க முடியாதபடி விரட்டி யடித்தார்.

சமீப காலமாக, காரைக்குடி என்றாலே கம்பன் விழா என்ற ஞாபகம் வரும்படி திரு சா.கணேசன்செய்திருக்கிறார். ஆண்டுதோறும், சாதி மத கட்சி பேதமின்றி, தமிழறிஞர் அனைவரையும் ஒரே மேடையில் திரட்டி, தமிழருக் கெல்லாம் தெவிட்டாத இலக்கிய விருந்தளித்து வருகிறார்.

கம்பன் விழா மட்டும் இருந்தால் திரு சா. கணேசனுக்குப் போதுமா? ஆகையால் கல்வெட்டு ஆராய்ச்சி, தமிழ் இலக்கண இலக்கிய வரலாற்று ஆராய்ச்சி ஆகிய துறையில் ஈடுபட்டிருக்கிறார்.

இந்தப் பொதுத் தேர்தல் திரு கணேசனுக்கு ஒரு சோதனையை உண்டாக்கியிருக்கிறது. ''அதர்மத்தை எதிர்த்துப் போராடவே நான் அபேட்சகனாய் நிற்கிறேன்'' என்று திரு சா. கணேசன் தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

சத்தியம் ஜெயிக்க வேண்டுமென்பது திரு சா. கணேசனின் கோரிக்கை. தமிழ் நாட்டில் தருமத்தையும் பண்பாட்டையும் காப்பாற்றி வரும் பெருமக்கள் காரைக்குடியில் வாழும் மக்கள் என்று சொன்னால் தவறாகாது. இன்றைய தினம் வளர்ந்திருக்கும் தமிழ் உணர்ச்சிக்கு அவர்களுடைய இடைவிடாத் தொண்டும் உழைப்புந்தான் காரணம் என்று துணிந்து கூறலாம். தமிழையும் தமிழர் பண்பாட்டையும் காப்பாற்றி வந்த காரைக்குடித் தொகுதி தமிழ் மக்கள் இந்த உன்னத லட்சியத்தைக் காப்பாற்றுவதற்காகவே தேர்தலில் நிற்கும் திரு சா. கணேசன் அவர்களை மறந்து விடுவார்களா?

தமிழ்நாட்டில் தருமம் தழைத்தோங்க வேண்டுமானால், சத்தியம் வெற்றி பெற வேண்டுமானால் காரைக்குடி தொகுதி மக்கள் மார்ச் மூதல் தேதி அன்று உத்தமத் தியாகி திரு சா. கணேசன் அவர்களின் சிங்கப் பெட்டியை மறந்து விடக் கூடாது.

# அக்கப்போர்

எஸ். வி. எஸ்.

தேர்தல் தேதி நெருங்க நெருங்க, தேர்தல் பிரசாரத்திலும் புதுவேகம் ஏற்பட்டு வருகிறது. அந்த வேகத்தில் கட்சிக்காரர்கள், தங்கள் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதைத் தூர மூட்டை கட்டி வைத்துவிட்டு, தங்கள் தேர்தல் சின்னங்களுக்குப் பிரமாத பிரசாரம் அளிக்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

யானைப் பெட்டிக்காரர்கள், யானைகளைத் தெருத் தெருவாய் அலையவிட்டு, 'யானைப் பெட்டிக்கே வோட்டுப் போடுங்கள்' என்று பிரசாரம் செய்கிறார்கள்.

ஒட்டகப் பெட்டிக்காரர்கள், ஒட்டகங்களைத் தில்லி தெருக்களில் வீதிவலமாகக் கொண்டு வருகிறார்களாம்.

குடிசைப் பெட்டிக்காரர்கள் குடிசை ஒன்று போட்டு, அதை ஒரு லாரியில் வைத்து வீதி வலம் வருகிறார்கள்!

ஆனால் சென்ற தேர்தலில் நடந்த ஒரு ரஸமான சம்பவம் நினைவுக்கு வருகிறது.

ஒரு கட்சிக்காரர், எதிர்க்கட்சியைக் கண்டிக்க ஒரு புதுமுறையைக் கையாண்டார்.

"என் கணவருக்கு வோட்டுப் போடாதீர்கள்! என் கணவரைப் பற்றி உங்களைவிட எனக்கு நன்றாகத் தெரியும்! ஜாக்கிரதை!"

இவ்வாறு எழுதிய துணியைப் பசு மாட்டின் மேல் போர்த்தித் தெருத்தெருவாய் அலையச் செய்தாராம்!

பசுவின் கணவன் எருது! எருதுப் பெட்டி யாருடைய பெட்டி என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

* * *

சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்த உலகப் பிரசித்தி பெற்ற சரித்திரப் பேராசிரியர் டோயன்பீ தாம் ஒரு பெரிய தவறு செய்து விட்டதாக ஒப்புக் கொண்டிருக்கிறார். பிரிட்டனில் சென்ற முறை நடந்த தேர்தலில் கன்ஸர்வடிவ் கட்சிக்கு வோட்டளித்தாராம். இதைத்தான் பெரிய தவறு செய்துவிட்டதாகச் சொல்லுகிறார். ஏனென்றால் கன்ஸர்வடிவ் கட்சி, ஸைப்ரஸ் தீவு விஷயமாக எப்படி நடந்து கொள்ளும் என்று யோசித்துத்தான் வோட்டுப் போட்டிருக்க வேண்டும். ஆனால் அப்படிச் செய்யவில்லை. அதற்கு வருந்துவதாகக் கூறியிருக்கிறார்.

பாரத நாட்டில் தேர்தல் நடக்கும் இந்தச் சமயத்தில் டாக்டர் டோயன்பீ, மேற்கண்ட செய்தியை அறிவித்து நமக்குப் பெரிய தொண்டு செய்திருக்கிறார்.

ஒவ்வொரு வாக்காளரும், தாம் வோட்டளிக்கும் கட்சியோ, நபரோ வெற்றி பெற்றால் என்ன எதிர்காலத்தில் செய்வார், அவர் சிந்தனை எப்படியிருக்கும் என்று யோசித்து வோட்டுப் போட வேண்டும் என்ற பொறுப்பைச் சுமத்தி விட்டிருக்கிறார்!

தமிழ்நாட்டில் திரு ஈ. வே. ரா. வின் கட்சி வெற்றி பெற்று வந்தால், அநாகரிகக் காரியங்களுக்குக் கொண்டாட்டந்தான்!

கட்சியைவிட மக்கள் தங்கள் தங்கள் தொகுதியின் அபேட்சகர் முன்பு செய்த தொண்டுகள், நடத்தை, குணம் முதலியவற்றைப் பார்த்துத்தான் பொதுவாக வோட்டு அளிப்பார்கள்!

சென்ற தேர்தலில் நடைபெற்ற ஒரு ரஸமான நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. முன்பு நிதிமந்திரியாக இருந்த ஸ்ரீ சி. டி. தேஷ்முக் தேர்தலில் நின்றார்.

அவர் ரிஸர்வ் பாங்கின் கவர்னராக இருந்த போதுதான் ஆயிரம் ரூபாய் நோட்டுக்கு மதிப்பில்லாமற் செய்தார். கறுப்பு மார்க்கட்காரர் ஒருவர், தேஷ்முக்கின் இந்தக் காரியத்தில் கோபங் கொண்டு ஒரு செல்லாத ஆயிரம் ரூபாய் நோட்டைத் தேஷ்முக்கின் பெட்டியில் போட்டிருந்தாராம்.

* * *

இந்தமாதிரி கூத்துகள் நம் நாட்டில் மட்டுமல்ல, அமெரிக்கா போன்ற நூற்றுக்கு நூறு படித்த மக்கள் வாழும் தேசத்தில்கூடத் தேர்தலின்போது நடக்கின்றன.

அமெரிக்காவில் ஒரு அபேட்சகரின் வோட்டுப் பெட்டியில் ஒரு வோட்டுச் சீட்டில் பின்வருமாறு எழுதியிருந்ததாம்!

"கடவுளே! எங்கள் தொகுதியை இந்த அபேட்சகரிடமிருந்து காப்பாற்றுங்கள்!"

இப்படி நம் நாட்டிலும் பலர் எண்ணி வருகிறார்கள் என்பதுதான் தெரியுமே!

* * *

'ஸ்வராஜ்யா' பத்திரிகையில் ஒரு ரஸமான கதை வெளியாகியிருக்கிறது.

அமெரிக்காவில் ஒரு தொகுதியில் நல்லவர் ஒருவரும், படு அயோக்கியர் ஒருவரும் போட்டியிட்டார்களாம்.

தெய்வ பக்தியும் சீலமும் நிறைந்த மாது சிரோமணி வோட்டுச் சாவடிக்குப் போய் வோட்டுப் போட்டுவிட்டு வந்தாள். ஒரு நண்பர் "தாயே, தாங்கள் யாருக்கு வோட்டுப் போட்டீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த அம்மையார், "நான் அந்த அயோக்கியருக்கே என் வோட்டைப் போட்டேன்" என்றார்.

இதைக் கேட்டவுடன் அந்த நண்பர் பிரமித்துப் போய் விட்டார்!

அவர் வியப்பைக்கண்ட அந்த அம்மையார், "ஒரு நல்ல மனிதர் தேர்தலில் வெற்றி பெற்று சட்டசபைக்குள் சென்றால் அங்கு அவர் அயோக்கியராக மாறிவிடுகிறார். அதனால் ஒரு நல்ல மனிதரைத் தேர்ந்தெடுத்து அவரை அயோக்கியராக்குவதைவிட, அயோக்கியருக்கு வோட்டளித்து விடுவது நலம் என்று தீர்மானித்தேன். நல்ல மனிதர் நல்ல மனிதராகவே வெளியில் இருந்துவிடுவாரல்லவா?" என்று விளக்கினாராம்.

பொல்லாத போடாக இருக்கிறதல்லவா?

எல்லோருடைய
பார்வையும்
உங்கள் மீது இருக்கும்



உங்கள் சட்டை **நியூ ஷோராக்** உயர்ந்த ரக
பாப்ளினல் தைக்கப்பட்டிருக்கும்பொழுது






ஸான்போரைஸ்ட்

★

தி நியூ ஷோராக் ஸ்பின்னிங் அண்ட் மான்புபாக்சரிங் கம்பெனி லிட்., நடியாட்



# மறுக்க முடியாத சம உரிமை...

மருத்துவசாலைகளிலும் கல்விக் கூடங்களிலும் பொதுமக்களுக்கு அளிக்கப்படும் சலுகைகளை எவரும் சமமாக அனுபவிக்க சம உரிமை உண்டு. இதை ஜாதி அல்லது தீண்டாமை என்னும் பெயரால் ஒருவருக்கும் மறுக்கக்கூடாது.

எந்தவொரு பிரஜையும் எந்தவொரு இடத்திலும் வீடு கட்டுவதையோ வீட்டை வாடகைக்கு எடுப்பதையோ எந்தவொரு தார்மீக அல்லது சமூக சடங்குகள் அல்லது பழக்கவழக்கங்களை கடைபிடிப்பதையோ எந்தவொரு ஆடை அல்லது ஆபரணத்தை அணிவதையோ, பொதுமக்கள் போக்குவரத்து வாகனங்களில் பிரயாணம் செய்வதையோ யாரும் தடுக்க முடியாது.

*இந்திய அரசியல் சட்டம் தீண்டாமையை ஒழித்து எல்லோருக்கும் சம ரீதியான சமூக, பிரஜா உரிமைகளை அளிக்கிறது.*

**தீண்டாமையை ஒழித்துக் கட்டுங்கள், சமத்துவத்தை நிலைநாட்டுங்கள்.**

# இலங்கைப் பிரதமரின் எச்சரிக்கை

**நா**ட்டில் வகுப்புவாதத்தைக் கிளப்பி விட்டுக் கலகத்தையும் குழப்பத்தையும் உண்டு பண்ண முயற்சிக்கும் சில தீவிர வகுப்பு வாதச் சிங்களவர்கள் மீது கடுமையான நடவடிக்கை யெடுக்கும் நிலைமை ஏற்படலாமென்று பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா ஒரு எச்சரிக்கையை விடுத்திருக்கிறார். தமிழ் மக்களின் "சிங்கள ஸ்ரீ" எதிர்ப்பு இயக்கத்துக்குப் பதிலாகச் சிங்கள ஜாதிக பெரமுன என்ற ஒரு சிங்கள வகுப்புவாத ஸ்தாபனம் இலங்கை முழுவதிலும் தமிழர் எதிர்ப்பு இயக்கத்தை ஆரம்பிக்கத் திட்டமிட்டு மூஸ்தீபுகளைச் செய்து வருகிறது. இந்த இயக்கத்தை வெற்றிகரமாக நடத்தத் தமிழர் கடைகளையும் ஓட்டல்களையும் சிங்களவர்கள் பகிஷ்கரிக்க வேண்டுமென்றும் தமிழர்களுடன் எந்தவிதமான வர்த்தகத் தொடர்புகளும் வைத்துக் கொள்ளக் கூடாதென்றும், தமிழர்கள் சிங்கள பாஷை எதிர்ப்பைக் கைவிடும் வரையில் சிங்களவர் தமிழர்களைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்றும் சிங்கள ஜாதிக பெரமுன தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகிறது.

இந்த நிலைமையைத் தடுக்க அரசாங்கம் என்ன செய்யப் போகிறது என்று இவ் வாரப் பத்திரிகை நிருபர்கள் மகாநாட்டில் பிரதம மந்திரியிடம் கேட்டபொழுது, வகுப்பு வாதத்தைக் கிளப்புகிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படுமென்று பிரதமர் எச்சரித்தார். தமிழர் கடைகளைச் சிங்களவர்கள் பகிஷ்கரிக்க ஆரம்பித்தால், அந்த இயக்கம் நிச்சயம் பலாத்காரத்துக்கும் கொந்தளிப்புக்கும் இடமளிக்குமென்றும், அரசாங்கம் இதைப் பார்த்துக் கொண்டு சும்மாயிருக்காதென்றும் அவர் சொன்னார். நாட்டில் குழப்பத்தை உண்டுபண்ணி, பார்லிமெண்டைக் கலைத்து, புதிய பொதுத் தேர்தலை நடத்த முன்னாள் ஆளும் கட்சியான யு. என். பி. கட்சி சதி செய்து வருகிறதென்றும் அந்தச் சதியை முறியடித்துச் சட்டத்தையும் சமா



சலன் இன்ஜினியரிங் கம்பெனி சேர்மன் திரு கே. ஆர். சுந்தரம் ஐயரின் குமாரர் திரு விசுவநாதனுக்கும், கல்லிடைக்குறிச்சி பிரமுகர் திரு ஏ. நடேச ஐயர் அவர்களின் செல்வக் குமாரி கோமதிக்கும், 12-2-57 கல்லிடைக்குறிச்சியில் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் நமது ராஜ்ய முதன் மந்திரியும் மத்திய சர்க்கார் நீதி மந்திரியும் வந்திருந்து மணமக்களுக்கு ஆசிகூறினார்கள்.

தானத்தையும் நிலைநிறுத்த அரசாங்கம் இயன்றதை யெல்லாம் செய்யுமென்றும் பிரதமர் பேரம் கூறினர்.

* * *

தமிழ் மக்களின் குறைபாடுகளைப் பற்றி ஆராயப் பிரதமந்திரி நடத்தவிருக்கும் வட்ட மேஜை மகாநாட்டுக்குச் சாதகபாதகமான அபிப்பிராயங்கள் இப்பொழுது தெரிவிக்கப் பட்டு வருகின்றன. சமஷ்டிக் கட்சியினரும் வேறு சிலரும் இந்த மகாநாடு வெறும் கண் துடைப்பு என்று கருதுகிறார்கள். பொறுப்பு வாய்ந்த வேறு சிலர் சமரச முயற்சிகள் எல்லாவற்றையும் செய்து பார்க்க வேண்டுமென்றும் வட்டமேஜை மகாநாடு நடத்திப் பார்ப்பதில் நன்மை ஏற்படாவிட்டாலும் தீமை ஏற்பட முடியாதென்றும் அபிப்பிராயம் தெரிவித்துள்ளனர்.

இந்த மகாநாடு பாஷைப் பிரச்னையைப் பற்றி மட்டும் ஆராயாமல், தமிழ் பேசும் மக்களின் பிரஜாவுரிமைப் பிரச்னை உள்படச் சகல பிரச்னைகளைப் பற்றியும் ஆராய்வதாயிருந்தால்தான் பயனளிப்பதாயிருக்குமென்று ஸ்ரீ எஸ். தொண்டமான் அறிவித்திருக்கிறார். இவ்வாரம் தலவாக்கொல்லியில் இலங்கை தொழிலாளர் காங்கிரஸின் மாவட்ட மகாநாடு ஒன்று நடைபெற்றது. அதற்குத் தலைமை வகித்துப் பேசிய ஸ்ரீ தொண்டமான் பிரதம மந்திரியின் வட்டமேஜை மகாநாட்டு முயற்சியைப் பொதுவாக வரவேற்று, தமிழ் பேசும் மக்களின் பிரச்னைகளைக் கூறு போட்டு ஆராய்வதில் உபயோகமில்லை என்றும், அவர்களுடைய சகல பிரச்னைகளுக்கும் ஒரு நிரந்தரப் பரிகாரம் தேட முயற்சி செய்ய வேண்டுமென்றும் வலியுறுத்தினர்.

* * *

தூத்துக்குடிக்குச் சமீபத்திலுள்ள தட்டப் பாறை சுகாதார முகாமை இந்திய அரசாங்கத்துக்கு விற்று விடுவது என்று இலங்கை மந்திரி சபை இவ்வாரம் தீர்மானித்திருக்கிறது. பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகள் இலங்கைக்கு இந்தியத் தொழிலாளர்களைக் கொண்டுவர ஆரம்பித்த காலத்தில் தட்டப் பாறையிலும் மண்டபத்திலும் இரண்டு சுகாதார முகாம்களை இலங்கை அரசாங்கம் ஏற்படுத்தியது. இலங்கையில் தொத்து நோய்கள் பரவுவதைத் தடுக்க இங்கு வரும் பிரயாணிகளைச் சோதனை செய்வதற்காகவே மேற்படி இரண்டு முகாம்களும் ஏற்பட்டன. இவற்றில் இந்தியப் பிரயாணிகள் அவமதிக்கப் படுவதாக நீண்டகாலமாகவே புகார் இருந்து வந்தது. இரு தேச அரசாங்கங்களின் புதிய பாஸ்போர்ட் சட்டதிட்டங்களினால் இந்த முகாம்களின் முக்கியத்துவம் குறைந்து விட்டதை முன்னிட்டு ; அந்த முகாம்களைத் தங்களிடம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று இலங்கையை இந்தியா கேட்டிருந்தது. இதைத் தழுவியே தட்டப்பாறை முகாமை ரூ. 4,30,000க்கு இந்திய சர்க்காரிடம் விற்றுவிடுவதென இலங்கை மந்திரி சபை தீர்மானித்திருக்கிறது. இதேபோல மண்டபம் முகாமையும் காலி செய்துவிட இலங்கை உத்தேசித்திருக்கிறது. — ரஜனி


The following particulars regarding the ownership of the 'KALKI', the weekly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.

**FORM IV**

1. Place of Publication ... Madras
2. Periodicity of its Publication... Weekly
3. Name of Printer, Publisher & Editor ... T. Sadasivam
   Nationality ... Indian
   Address ... 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras - 10
4. Name and address of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. ... ... Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Rd. Madras - 10. Sri R. Ananthanarayanan, 20, Dr. Guruswami Mudaliar Rd, Madras-10. Sri K. Rajendran, 62, Fourth Main Rd., Gandhinagar, Madras - 20. Kumari Vijaya, 20, Dr. Guruswami Mudaliar Rd., Madras-10. Srimathi M. S. Subbalakshmi, 20, Dr. Guruswami Mudaliar Rd., Madras - 10. Kumari Radha, 20, Dr. Guruswami Mudaliar Rd., Madras - 10. Sri M. P. Kalyanasundaram, 3. Water Works Colony, Madras - 10. Sri V. Vaidyanathan, 15, Ramanathan St., Thiagaraya Nagar, Madras - 17.

T. Sadasivam
*Publisher*

*Dated 1st March 1957*

# மும்மூர்த்திகளுக்குக் கல்கத்தாவின் காணிக்கை



கல்கத்தாவில் இருக்கும் தமிழ்ப் பெருமக்கள் ஆண்டுதோறும் பகுள பஞ்சமிக்கு அடுத்த வசந்த பஞ்சமி தினத்தன்று தியாகராஜ ஆராதனைத் திருவிழாவைக் கொண்டாடி வருகின்றனர். இந்த ஆண்டும் ஜனவரி 29வ. முதல் பிப்ரவரி 8வ. வரை ஆராதனைத் திருவிழாவைக் கொண்டாடினார்கள்.

விழாவில் திருவாளர்கள் செம்மங்குடி சீனிவாசய்யர், மதுரை மணி ஐயர், ஆலத்தூர் சகோதரர்கள், சேலம் செல்லமய்யங்கார், திருமதி டி. கே. பட்டம்மாள், திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஆகியோர்களின் இசைக் கச்சேரிகளும், திரு ஏ. கே. சி. நடராஜன் கிளாரினெட்டும், திரு விசுவநாதன் புல்லாங்குழலும், திருமதி பாலசரஸ்வதி, திருமதி கமலா லக்ஷ்மண் ஆகியோரின் பரதநாட்டியமும் நடைபெற்றன.

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரிக்கு மேற்கு வங்காள கவர்னர் ஸ்ரீமதி பத்மஜா நாயுடு தலைமை வகித்துச் சிறப்பித்ததுடன், திருவாரூர் மும்மூர்த்தி ஞாபகார்த்தக் குழுவின் பொக்கிஷதார் திரு சதாசிவம் அவர்களிடம் பத்தாயிரத்து ஓர் ரூபாய் மதிப்புள்ள செக் ஒன்றையும் கல்கத்தா தியாகராஜ ஆராதனைக் குழுவின் சார்பில் கொடுத்தார்.

இந்த விழாவின் சிறப்புக்கு அரும்பாடுபட்ட திரு வி. டி. சாமி, திரு வி. சீனிவாசன் ஆகியோர்களையும், ஐ அவர்கள் குழுவினரையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

5-2-1957

№ 56/A 803119

THE INDIAN BANK LIMITED

CALCUTTA.

Pay The Tiruvarur Music Trinity Commemoration Fund or Bearer

Rupees Ten Thousand and one only

SRI THYAGA RAJASWAMI UTSAVAM COMMITTEE

Treasurer Convener

Rs. 10001/-



# வட்ட மேஜை

## தேர்தல் விஷயம்

'நல்லவர்களுக்கு வோட்டுப் போடுங்கள்' என்று கல்கியின் தலையங்கத்தைப் பார்த்து, காமராஜர் காரைக்குடியில் பேசிய கூட்டத்தில் கல்கிப் பத்திரிகைமீது சீறிப்பாய்ந்தார். அதைப் பார்த்தால் நல்லவர்களே, இன்றைய காங்கிரஸ் அபேட்சகர்களாக இல்லையென்று நன்ருகப் புலப்படுகிறது.

பக்தவத்ஸலம் செங்கல்பட்டில் பேசும் பொழுது 'நல்லவர்களை எப்படிக் கண்டு பிடிப்பது' என்ருர். நல்ல தெளிந்த நீரில் முகம் தெரியும். சாக்கடைத் தண்ணீர் போன்ற அழுக்கடைந்த நீரில் முகம் தெரியாது. அது போல் நல்ல தெளிந்த மனம் படைத்தவர்களுக்கு நல்லவன் கெட்டவன் என்பது தெரியும். சுயநலம், பதவி வேட்டை போன்ற அழுக்குப் படிந்த மனத்துக்கு நல்லது கெட்டது கண்டு பிடிப்பது கஷ்டம்தான்.

1945-ம் வருஷம் புனு மகா பலேஸ்வரத்தில் காந்திஜியுடன் நான் ஒரு மாதம் தங்கியிருந்தேன். காந்திஜி முன்னுல் யார் வந்தாலும் நல்லவர் கெட்டவர் என்று உடனே படம் பிடிப்பதுபோலத் தன் மனத்தில் ஏற்றுக் கொள்வார். அவர் மனம் பரிசுத்தமானது. அந்தப் பரிசுத்த மனம் நமது மந்திரிகளில் சிலருக்கு இல்லை என்ருல், அது நமது நாட்டுக்கே அவமானம் அல்லவா?

சிதம்பரத்தில் காமராஜர் பேசுகையில், 'காங்கிரஸிலிருந்து விலகியவர்கள் மதிப்பை இழந்து விட்டார்கள். அவர்களுக்கு, காங்கிரஸில் இருந்தால்தான் மதிப்பு' என்று சொன்ஞர். அந்த வார்த்தை அவருக்கும் பொருந்தும் என்பதை மறந்து பேசி இருக்கிருர். சிவன் தலையில் இருக்கும் நாகம் 'கருடா க்ஷேமமா?' என்று கேட்டமாதிரி காமராஜர் பேசுகிருர். நாகம் கீழே இறங்கி வந்தால் என்ன கதியாகும் என்று நாகத்துக்குத் தெரியும். அதேபோல் காமராஜர் காங்கிரஸ் தேரில் ஏறிக்கொண்டு காங்கிரஸ்காரர்களைப் பற்றி ஏதேதோ பேசுகிருர். அவர் கீழே இறங்கி வந்தால் என்ன ஆவார் என்று அவருக்கே தெரியும்.

யானை தன் தலையில் மண்ணைவாரிப் போட்டுக் கொள்ளுவதுபோல் காமராஜர் கூடா நட்பினுல் காங்கிரஸை அழித்துக்கொண்டு வருவதல்லாமல், தன்னையும், தமிழ் நாட்டையும் அழித்துக் கொண்டு வருகிருர். வினை விதைத்தவன் வினைதானேயறுப்பான்.

ஆகையால் அரசியல் ஞானமுடையவர்கள் கண் மூடிக்கொண்டு மாட்டுப் பெட்டியில் வோட்டுப் போடுவது காமராஜருக்குப் போட்ட வோட்டே ஆகும். காங்கிரஸுக்குப் போட்ட வோட்டு ஆகாது. ஸ்தாபனத்தின் பெயரை நம்பி ஏமாந்துவிட வேண்டாம். ஒரு ஊரில் நல்லவர் கெட்டவர் என்பது அந்த ஊர்க்காரர்களுக்கு நன்ருகத் தெரியும். ஆகையால் அந்தந்த ஊரிலுள்ள நல்லவர்களுக்கு வோட்டுப் போட்டால் நாடு நலம் பெறும். நல்லவர்கள் இல்லாவிட்டால் யாருக்கும் வோட்டு செய்யாதிருப்பது நலம். சுயநலம் படைத்த பதவி வேட்டைக்காரர்கள் ஜெயித்து வந்தால் நாட்டுக்கு ஒருபோதும் நல்லது செய்ய மாட்டார்கள்.

சேலம் 19—2—57

தியாகி டி. என். பாலவெங்கடராமன்
முன்னுள் தலைவர், சேலம் தாலுகா காங்கிரஸ் கமிட்டி, காந்திஜி நிர்மாணத் திட்டப் பயிற்சிபெற்ற ஊழியன்.

## ஊழியத்துக்கு மதிப்பில்லை

சென்ற சில வாரங்களாகத் தேர்தலைப் பற்றிக் 'கல்கி' தலையங்கம் நேர்மைக்கு ஓர் இலக்கணமாக விளங்குகிறது என்று கூறுவது மிகையாகாது. தேர்தல் பற்றி இன்றைய நிலைமையைப் பாரபட்சமின்றி விளக்கிக் காட்டியது குறித்து அறிவு படைத்த தமிழக மக்கள் அனைவருமே போற்றிப் புகழ்ந்து பேசுகிருர்கள். 17—2—57 கல்கி இதழின் தலையங்கத்தில் ஏழை பாரத நாட்டில் தேர்தல் என்பது பணம் ஏராளமாகச் செலவு செய்து நடத்தும் ஒரு வியாபாரமாகி விட்டது என்று குறிப்பிட்டது மிகமிக உண்மையே! எங்கள் சாத்தான்குளம் தொகுதியிலே எத்தனையோ பழம் பெரும் காங்கிரஸ் தியாகிகளெல்லாம் இருந்தும் கூட, அவர்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளி விட்டு, மக்கள் மனத்துக்கு என்றுமே அறிமுகமில்லாத ஒரு நபரைப் பணம்படைத்தவர் என்ற ஒரே காரணத்துக்காகக் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தியிருக்கிருர்கள். இதையொட்டிப் பல காங்கிரஸ்காரர்கள் வெறுப் படைந்து வெதும்பிக் கொண்டிருக்கிருர்கள். வோட்டுக் கேட்டு வரும் காங்கிரஸ்காரர்களிடம் 'காங்கிரஸின் பெயரால் ஊழியத்துக்குப் பொருத்தமான ஒரு நல்லமனிதரை நிறுத்தினுல் என்ன?' என்று கேட்டால், 'பணம் இருந்தால் தானே வெற்றி பெற முடியும்? அதனுல் தான் ஒரு பெரும் பணக்காரரை நிறுத்தியிருக்கிரேம்' என்று பகிரங்கமாகவே கூறுகிருர்கள். எனவே தேச ஊழியத்துக்கும் உழைப்புக்கும் இன்று காங்கிரஸில் இடமில்லை. நல்லவர்களுக்கே வோட்டுப் போட வேண்டுமென்ருல் எங்கள் தொகுதியிலே காங்கிரசுக்கு வோட்டுக் கிடைக்காது.

20—2—57
சிருடையாபுரம்

எம்.கே.ஏ.என் அஹ்மதுமீரான்

## வாக்காளரின் குரல்

பூண்டி நீர்த் தேக்கத்துக்குச் 'சத்திய மூர்த்தி சாகரம்' என்று பெயர் வைக்காத சென்னை, நகரசபை அளிக்கும் வரவேற்புப் பத்திரம் எனக்கு வேண்டாம்' என்று மறுத்து மக்களின் மதிப்புக்குரிய சிறந்த தேசபக்தராகிய திரு காமராஜ் அவர்களைத் தலைவராய்க் கொண்டிருந்ததினுல் தமிழ் நாட்டு மக்கள் யாவரும் சென்ற பொதுத்தேர்தலின் போது ஒருமுகமாகக் காங்கிரசை ஆதரித்தனர்.

இன்றையத் தமிழ்நாட்டின் நிலை வேறு. நமது தேசப்பிதா மகாத்மா காந்தி அவர்கள் உயிரோடிருந்த பொழுது, அவரைக் கண்டபடி தூஷித்தும், நமது புனிதமான தேசியக்

கொடியை 'எரிப்பேன், எரித்தே தீருவேன்' என்றும் மார்பு தட்டிய திரு ராமசாமி நாயக்கருடன் கூடிக் குலாவி, கட்டித் தழுவி, ஒரே மேடையில் ஏறி வோட்டு கேட்கும் பதவிப் பித்து பிடித்த காமராஜ் அவர்களைத் தலைவராய்க் கொண்டிருக்கிறது இன்றையத் தமிழ் நாடு காங்கிரஸ். தான் பெற்று வளர்த்து ஆளாக்கிய மகன், கூடா நட்புக்கொண்டு கெட்டழிவதை விரும்பாத தகப்பன் தன் மகன்மேல் கண்டிப்பான நடவடிக்கை எடுப்பதுபோல், இன்று உண்மை தேசபக்தர்கள் பலர் காங்கிரசை விட்டு வெளியேறி அதை எதிர்த்து நிற்கின்றனர். இவர்களை நாடகத்துக்கு டிக்கட் கிடைக்காத ஆட்கள் வெளியிலிருந்து கல்லெறிந்து கலாட்டா செய்கிறார்கள் என்று சில பத்திரிகைகள் ஏளனம் செய்கின்றன. உண்மை யென்னவென்றால் டிக்கட் கிடைக்காத ஆட்களைவிட, தங்களுக்குக் கிடைத்த டிக்கட்டை வேண்டாமென்று கிழித்து எறிந்து விட்டு வெளியே வந்தவர்கள்தாம் அதிகம். இன்று காங்கிரஸ் கொட்டகையில் ஒழுங்கான 'ராமாயணம்' நடக்கவில்லை. அதற்குப் பதிலாக அங்கே இழிவான 'கீமாயணம்' தான் நடக்கிறது.

கோபாலபுரம்
18—2—57 எஸ். கந்தஸ்வாமி

## ஏமாந்தவர்கள் அல்ல!

தமிழ் நாட்டு மக்கள் தற்போது யாருக்கு வோட்டுப் போடுவது என்று குழம்பிக்கொண்டிருக்கும் சமயத்தில் தங்கள் தலையங்கம் சரியான வழிகாட்டியாக அமைந்திருக்கிறது. மக்களின் மனத்தையே காட்டி விட்டீர்கள். அர்த்த புஷ்டியுள்ள ஒவ்வொரு வாக்கியத்தையும் பல தடவைகள் படித்தேன்.

திரு ஈ. வே. ரா. பொதுக்] கூட்டங்களில் "நான் சொன்னதையெல்லாம் காமராஜர் செய்கிறார். அறுபது உயர்ந்த உத்தியோகங்களை நான் சொன்னபடி பிராமணரல்லாதாருக்குக்கொடுத்திருக்கிறார். ஆறு போலீஸ் சூபரண்டெண்டண்ட் பதவிகளையும் அவ்வாறே கொடுத்திருக்கிறார்" என்று பறைசாற்றி வருகிறார். இதை இல்லையென்று இது வரை திரு காமராஜர் மறுதளித்திருக்கிறாரா? திரு ஈ. வே. ராமசாமியார் சொல்வது உண்மை தானே? திரு ஈ. வே. ரா.வின் ஆதரவுக்குக் காமராஜர் காரணம் காட்டியிருப்பதை வெகு அழகாகக் கூறியிருக்கிறீர்கள். பள்ளியில் ஏழைச் சிறுவர்களுக்கு மத்தியானச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்ததினால் ஈ. வே. ரா இவரை ஆதரிக்கிறாராம். இந்தக் கண் துடைப்புப் பேச்சுக்களை நம்புவதற்குப் பொதுமக்கள் ஏமாந்தவர்களல்ல.

தாம்பரம்
22-2-57 நாகராஜன்

## யாருக்கு வோட்டு?

செங்கற்பட்டில் பிப்ரவரி மாதம் 14-ந் தேதியன்று நடந்த திராவிடக் கழகக் கூட்டத்தில் ஈ. வே. ராமசாமியார் பேசிய பேச்சு தங்கள் தலையங்கத்தைப் படித்தபோது நினைவுக்கு வருகிறது. ராஜாஜி பார்ப்பனக் கூட்டத்தைச் சேர்ந்தவராதலால் அவர் மந்திரியாக இருந்த காலத்தில் பிராமணர்களுக்கு நிறைய உயர்ந்த வேலைகளைக்கொடுத்தாராம். இதைப் பார்த்த பின்தான் ஈ. வே. ரா. தம் தோழர்களுக்கு ஒரு அறிக்கை விடுத்தாராம்: 'கண்ட இடத்தில் பார்ப்பனர்களைக்கத்தியால் சொருகுவது' என்று. இந்த அறிக்கையைக் கண்டு ராஜாஜி பயந்து மந்திரி பதவியை ராஜிநாமா செய்தாராம். கிழவரின் பேச்சு பொருள் இல்லா விடினும் மிகவும் ஹாஸ்யமாக இருந்தது. அன்று பௌர்ணமியாதலால் அவரது ஆவேசம் உச்ச நிலையை அடைந்தது. பிரசங்க மேடை கீழ்ப்பாக்கமாக மாறியது.

இந்தத் தமிழ் நாட்டில் ஒரு சாதியை ஏசித் திரியும் இந்தக் கழகம் காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு காட்டுகிறது. முன்பு காங்கிரசைத் திட்டிய கயவர்கள் இப்பொழுது காமராஜரின் கூஜாக்கள். அந்தோ! இந்தப் பரிதாபமான நிலை காந்திமகான் வளர்த்த காங்கிரஸ் கட்சிக்கா வர வேண்டும்? சென்னை தேர்தல் பொதுக் கூட்டத்தில் நேரு அவர்கள் இக் கழகத்தின் பெயர் என்ன என்று கேட்ட போது திரு காமராஜ், திராவிட முன்னேற்றக் கழகம் என்று சொல்லி விட்டார். திரு காமராஜ் அவர்கள் ஏன் தி. மு. க. வின் பெயரைச் சொல்லி தி. க.வை மறைக்க வேண்டும்? தமிழர்கள் அறிவாளிகள். தமிழகத்தில் காங்கிரஸ் கட்சியின் பெயரால் அதன் தலைவர்கள் செய்யும் அக்கிரமங்கள் அவர்களுக்குத் தெரியும். அவர்கள் தீர்ப்பளிக்க மார்ச்சு மாதம் காத்திருக்கிறது.

செங்கற்பட்டு
22—2—57 ஸ்ரீசைலம்

## அனுகூலமில்லை

பிப்ரவரி 17-ந் தேதி 'கல்கி' இதழில் "இரண்டு லட்சம் சிப்பந்திகளுக்கு யோகம்" என்ற தலைப்பில், 10—2—57 அன்று யாராலும் நம்பமுடியாத ஒரு சம்பவம் புதுதில்லியில் நிகழ்ந்தது என்று குறிப்பிட்டிருக்கிறது. வாஸ்தவம்தான்! முற்றிலும் நம்பமுடியாதது. ஏன்? அறிக்கையில் விடுத்துள்ள கெஜட் பதிவில்லாத 1,70,000 ரயில்வே தொழிலாளர்களுக்கு இதனால் அனுகூலம்ஏற்பட்டிருக்கிறது என்ற விஷயம் முற்றிலும் உண்மையல்ல.

ஸ்டேஷன்மாஸ்டர்கள் சுமார் ஒன்பது வருடகாலமாகப் போராடி வருகிறார்கள்: தங்கள் சம்பளம், தங்களின் கீழ் வேலை செய்யும் குமாஸ்தாக்களின் சம்பளத்தை விடவும், தங்களைவிடக் குறைந்த சர்வீஸ் உள்ள குமாஸ்தாக்களின் சம்பளத்தை விடவும் குறைவாக விருப்பதால் சர்க்காரிடம் பல தடவைகள் கோரிக்கைகளைச் சமர்ப்பித்தார்கள். இது வரையில் இருந்த முறையில் அதாவது ஸ்டேஷன்மாஸ்டர்களுக்கு ரூபாய் இருநூறும் உதவி ஸ்டேஷன்மாஸ்டர்களுக்கு ரூபாய் நூற்றைம்பதும் ஆக ஆரம்பச் சம்பளம் ஏற்படுத்த வேண்டியது என்ற நியாயமான திட்டம் கையாளப் படவில்லை.

ஆதலால் ஸ்டேஷன் மாஸ்டர், உதவி ஸ்டேஷன்மாஸ்டர் யாருக்கும் இதனால் கொஞ்சமும் அனுகூலம் இல்லை.

கமலாபுரம்
18—2—57 எஸ். கணபதி முதலியார்

★

உங்களுக்குத் தெரியுமா?

ஹத்திபாயின் 'தராசு மார்க்'
ஸ்டெயின்லெஸ்
ஸ்டீல் பாத்திரங்கள்
சிக்கனமானவை
நீடித்துழைப்பவை
பளபளப்பானவை

★





உத்தரவாதமுள்ளது!

# ஹத்திபாயின்

தராசு  மார்க்

## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

ஹத்திபாய் துள்சிதாஸ் & சன்ஸ், பம்பாய்-2.






எஸ்.ஜி.ஆர்.

சுந்தரம் அன்று காரியாலயத்திற்குள்ளே நுழைந்த பொழுது, வழக்கத்துக்கு விரோதமாகத் தலைமைக் குமாஸ்தா ஏகாம்பரத்தின் முகத்தில் தோன்றிய புன்னகையைக் கண்டு ஒருகணம் திகைத்து விட்டான்!

என்றைக்குமே கடுவன் பூனை போல் முகத்தை வைத்துக் கொண்டிருக்கும் ஏகாம்பரம் புன்முறுவல் பூக்கிறார் என்றால், நிச்சயம் தன்னால் ஆகக்கூடிய காரியம் ஏதோ இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளவா முடியாது சுந்தரத்தால்?

"வா, சுந்தரம்! இப்படி உட்கார்" என்று தமது அருகிலிருந்த நாற்காலியைக் காட்டினார் அவர்.

சாதாரணமாக எல்லோரையுமே நிற்க வைத்துப்பேசிக்கொண்டிருக்கும் அவர் பக்கத்தில் உட்காரச் சொல்லி உபசாரம் செய்கிறார் என்றால் அது முக்கியமான விஷயமாகத் தானே இருக்க வேண்டும்?

"ஆமாம், புது வீடு கட்டியிருக்கிறாயாமே? என்னிடம் மூச்சு விட்டாயா இது வரைக்கும்?" என்று ஆரம்பித்தார் அவர் மெள்ள.

சுந்தரத்துக்குத் 'திக்'கென்றது. அவருடைய உபசாரத்துக்குக் காரணம் ஓரளவு புரிந்து விட்டது அவனுக்கு.

"ஹி..ஹி.. ஏதோ சின்னதாகக் கட்டிக் கொண்டு குடி போயிருக்கிறேன்" என்றான் சுந்தரம் இளித்தவண்ணம்.

"என்னப்பா சும்மா அளந்து விடுகிறாய்! நீயும் இருந்து கொண்டு இன்னொரு குடித்தனத்துக்கும் விடுகிற அளவுக்குக் கட்டியிருக்கிறாயே. வாடகைக்குக்கூட விடப் போகிறதாக நம் வீரராகவன் சொன்னானே!"

வீரராகவன் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது அவனுக்கு. அன்றைக்கு அவனுடைய புது வீட்டைப் பார்த்துவிட்டுத் தானும் தன்னுடன் வசித்துவரும் பதின்மூன்று ஜீவன்களும் குடியிருக்க ஒரு இடம் வேண்டுமென்று கேட்டான். குசேலரைப்போல் வரம்பின்றிப் பெற்றுத் தள்ளிவிட்ட அவனுக்கா சுந்தரம் தன் வீட்டை வாடகைக்கு விடுவான்....? அதன் பலன்தான் தலைமைக் குமாஸ்தாவிடம் அவன் வைத்த வத்தி.

"ஆமாம், ஆமாம்....ஒரு சின்ன 'போர்ஷன்' வாடகைக்கு விடுவதாக எண்ணம். ஆனால் நேற்றுக் காலையில்தானே ஒருவர் வந்து பார்த்து விட்டுப் போனார். அவருக்குத் தருவதாக வாக்குக் கொடுத்து விட்டேனே?"

"வாய்ப் பேச்சுத்தானே?..எழுதி ஸ்டாம்பு ஒட்டிக் கொடுக்கவில்லையே. அவர்கள் திரும்பி வந்தால் நான் முன்பணம் கொடுத்து விட்டதாகச் சொல்லு!" என்று கூறிக் கொண்டே ஏகாம்பரம் ஜேபியினுள் கையை விட்டார்.

உடனே மிகுந்த பதற்றத்துடன், "அது தானே முடியாது...அவர் நேற்றே முன்பணம் கொடுத்து விட்டுக் குடும்பத்துடன் வந்து பாலும் காய்ச்சிக் குடித்து விட்டுப் போய் விட்டாரே.." என்று அலறினான் சுந்தரம்.

"அட ராமா..!" என்று ஏமாற்றத்துடன் ஜேபியிலிருந்து வெறும் கையை வெளியே எடுத்தார் அவர்.

நிம்மதியுடன் பெருமூச்சொன்றை விட்ட வண்ணம் அப்பால் நகர்ந்தான் அவன்.

சுந்தரம் அந்தப் புதிய காலனியிலே வீட்டைக் கட்டினாலும் கட்டினான், அவனுடைய நண்பர்களுடைய தொல்லை பொறுக்க முடியாமல் போய் விட்டது. "எனக்கு வாடகைக்குக் கொடு..எனக்கு வீட்டில் ஒரு பகுதி விடு" என்று பிய்த்து எடுத்து விட்டார்கள் அவனை.

அவன் கட்டும்பொழுதே தனக்கு ஒரு பகுதியும், வாடகைக்குவிட ஒரு பகுதியுமாக, இரண்டு குடும்பங்களுக்கு வேண்டிய வீடாகக் கட்டினான். ஆனால், வாடகைக்குக் கட்டிய பகுதியில் குடி வருபவர்கள் கணவன் மனைவி ஆக இருவர் மட்டுமாகவே இருக்க வேண்டும் என்பது அவன் கோரிக்கை.

சுந்தரத்தினுடைய கோரிக்கைக்கு முக்கிய காரணம் இருந்தது. தன்னுடைய புது வீட்டின் மேல் ஒரு ஈ உட்காரக்கூடச் சம்மதிக்க மாட்டான். சுவரில் எங்கேயாவது ஒரு மூலையில் கொஞ்சம் ஒட்டடை ஒட்டிக் கொண்டிருந்தாலும் அவன் மனம் பதறும்.

அப்படிப்பட்டவன் குழந்தை குட்டிகளுள்ளவர்களை வீட்டுக்குள் எப்படி நுழையவிடுவான்?

அவனுடைய ஆபீஸ் நண்பர்கள் அவ்வளவு பேரும் குறைந்தது அரை டஜனோ அல்லது அதற்கு மேலோ பெற்றுத் தள்ளியவர்களாகத்தான் இருந்தனர். அதிலும் தலைமைக் குமாஸ்தா ஏகாம்பரத்துக்கு இறைவன் சந்தான பாக்யத்தைத் தாராளமாக அருளியிருந்தார். இன்னும் ஒன்றுதான் பாக்கி ஒரு டஜன் பூர்த்தியாவதற்கு!

ஒருநாள் சுந்தரம் ஏகாம்பரத்தின் வீட்டுக்குச் சென்றிருந்தபொழுது அவர் புத்திர சிகாமணிகளின் திருவிளையாடல்களை நேரிலேயே கண்டுவிட்டான். ரேடியோ பெட்டியின்மேல் ஒன்றும், அலமாரியின்மேல் ஒன்றும் உட்கார்ந்து கொண்டு மும்முரமாகக் குடைவதில் ஈடுபட்டிருந்தன. இரண்டோ மூன்றோ வெந்நீர் அறையில் குழாயுடன் குஸ்தி போட்டுக் கொண்டிருந்தன. புகைபோக்கியின் மேல் இரண்டு நடனம் ஆடிக் கொண்டிருந்தன. பாக்கியுள்ளவைகள் அவன்மேல் தாவிப் பாய்ந்து ஜேபியைத் துழாவியும் சட்டைக் காலரைக் கடித்தும் முதுகிலே பலமாகக்

குத்தியும் விளையாடிய விளையாட்டை எத்தனை ஜன்மம் எடுத்தாலும் மறக்க முடியாதே!

அப்படிப்பட்ட ஏகாம்பரத்துக்கா அவன் வாடகைக்கு வீட்டை விடுவான்?

காரியாலயத்திலிருந்து வந்து கொண்டிருந்தபொழுது அவன் மனம் தீவிரமான சிந்தனையில் ஈடுபட்டிருந்தது.

தலைமைக் குமாஸ்தாவிடமிருந்து அன்று எப்படியோ தப்பித்துக் கொண்டான். ஆனால் அந்த ஏகாம்பரம் எமகாதகப் பேர்வழியாயிற்றே? ப்யூன் முனுசாமியை விட்டுப் புது வீட்டுக்குக் குடி வந்துவிட்டார்களா இல்லையா என்பதை வேவு பார்த்துக்கொண்டு வரச் சொன்னாலும் சொல்வார்.

அவரிடம் தப்பித்துக் கொள்ள வேண்டுமானால் ஒரே ஒரே வழிதான் தோன்றியது அவனுக்கு. உடனே 'போர்ஷனை' வாடகைக்கு விட்டுவிட வேண்டும் என்பதுதான் அது.

இரண்டு நாட்களுக்கு முன்பு குழந்தை குட்டி எதுவும் இல்லாத ஒருவர் தானும் தன் மனைவியுமாக இருவர் இருப்பதற்கு மட்டும் வீடு வேண்டும் என்று அவன் வீட்டைப் பார்த்துவிட்டுச் சென்றார். ஆனால் உடனே முன் பணம் கொடுக்கக் கையிலே பணமில்லாததால், 'ஒரு வாரம் கழித்து வருகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். நல்ல காலம்! அவன் அவர் விலாசத்தை வாங்கி வைத்திருந்தான். 'உடனே போய் மறுநாளே அவரைக் குடி வந்துவிடச் சொல்வது' என்று தீர்மானித்துக் கொண்டு புறப்பட்டான்.

வீட்டின் சொந்தக்காரரான சுந்தரமே தம்மைத் தேடிக் கொண்டு வந்து விட்டதைக் கண்டு உச்சி குளிர்ந்து விட்டது, வாடகைக்கு வர இருந்தவருக்கு. அட்வான்ஸ்கூடப் பிறகு தரலாம் என்று சொன்னதும் அவருக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது.

கரும்பு தின்னக் கூலியா கேட்கப் போகிறார் அவர்! மறுநாளே தம் மனைவியுடன் வந்து விட்டார் புது வீட்டுக்கு!

நான்கு நாட்கள் கழிந்தன.

வீட்டை அசுத்தம் செய்து பாழாக்காமல் வைத்துக் கொள்ளக் கணவன் மனைவி இருவர் மட்டுமேயுள்ள ஒரு சின்னஞ் சிறு குடும்பத்தைக் குடி வைத்து விட்டதில் சுந்தரத்துக்குச் சொல்ல முடியாத ஆனந்தம்.

வழக்கம்போல அன்றும், உற்சாகத்தை 'விசி'லின் மூலம் வெளியேற்றிய வண்ணம் தனது புதுவீட்டை நோக்கிக் காரியாலயத்திலிருந்து வந்து கொண்டிருந்தான் அவன்.

கேட்டை இழுத்துச் சாத்திக் கொண்டு திரும்பி வாசற்படியில் கால் வைத்தவனை நிலைகுலையச் செய்து விட்டது அடுத்த போர்ஷனிலிருந்து எழுந்த பயங்கரச் சத்தம்.

பக்கத்துப் போர்ஷனின் வாயிலை நோக்கிப் பாய்ந்தன கால்கள். உள்ளே....?

வானரங்கள்! அவன் அகராதிப் படி இரண்டு கால் வானரங்கள்.

மாடிப்படிக் கைப்பிடியைச் சுவரிலிருந்து, இரண்டு கால்களையும் பக்கவாட்டில் தேய்த்து, சுவரை அழுக்காக்கிக் கொண்டே வழுக்கிக் கொண்டிருந்தது ஒன்று. ஜன்னல் கதவுகளைப் 'படால், டமால்' என்று அறைந்து சாத்திக் கொண்டிருந்தது மற்றொன்று. வாசல் விளக்கைப் போட்டுப் போட்டு அணைத்தன சில. மற்றவைகள், வெள்ளை வெளேர் என்றிருந்த சுவரில் பென்சிலினால் தங்கள் மனம் போனபடி கிறுக்கிக் கொண்டிருந்தன.

எப்படி இருக்கும் அவனுக்கு? ஒரே பாய்ச்சலில் பாய்ந்து எல்லா வானரங்களையும் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளத் துடித்தன.

அப்பொழுது "ஆபீசிலிருந்து இப்போது தான் வராப் போலிருக்கு...இவர்களெல்லாம் என் அக்கா பசங்கள். அக்காவுக்கு வயிற்றிலே ஆபரேஷன். ஒரு மாசத்துக்கு அத்திம்பேரும் பசங்களும் இருக்க வந்திருக்கிறார்கள்" என்று கூறினார் குடித்தனக்காரர்.

அதே சமயம், "அங்கே யாரோடு பேசிக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்ட வண்ணம் உள்ளிருந்து வெளிப்பட்டது ஒரு உருவம். வெளியே வந்து சுந்தரத்தைப் பார்த்ததோ இல்லையோ; "அட நீ தானா....! நான் யாரோ என்றல்லவா பார்த்தேன்? இவன் தான் என்னுடைய மைத்துனன். இவனுக்குத் தான் உன்னிடம் வீடு வேண்டுமென்று கேட்டது...." என்று அலறியது அது.

அலறியது வேறு யாருமல்ல:—தலைமைக் குமாஸ்தா ஏகாம்பரமேதான்!

சுந்தரத்துக்குப் பிரக்ஞையே போய்விடும் போலிருந்தது. தன்னைச் சுற்றியுள்ள பொருள்களெல்லாம் கன வேகமாகச் சுழல்வது போன்ற பிரமை ஏற்பட்டது.

<u>அருள் வாக்கு</u>

ராமன் காட்டுக்குப் போவதற்கு முன்பு கௌஸல்யா தேவியிடம் விடை பெற்றுக் கொள்ளப் போனான். ஊருக்குப் போகும் குழந்தைக்குத் தாயார் பக்ஷணம் கட்டிக் கொடுப்பது வழக்கமல்லவா? பதினான்கு வருஷம் போயிருக்க வேண்டிய குழந்தைக்கு என்ன கொடுப்பது? அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. நிரம்ப ஆலோசித்துச் சொல்லுகிறாள்:

"ஏ, ராகவா! நான் உன்னை ரக்ஷிக்க ஒன்றும் சொல்வதற்கில்லை. தர்மம் ஒன்று தான் இருக்கிறது. தைரியமாகவும் ஒரே சீரியாகவும் நியமமாகவும் எந்தத் தர்மத்தை நீ பாதுகாத்து வந்தாயோ, அந்தத் தர்மம் நின்னைக் காக்கும். அது ஒன்றுதான் நான் செய்யும் அநுக்ரஹம்" என்றாள். ★★★

நாம் பெற்றிருக்கின்ற மனம், வாக்கு, சரீரம் என்னும் மூன்று கரணங்களாலும் செய்யும் செயல்களெல்லாம் தர்மங்களாக இருக்க வேண்டும். நம்முடைய பணங்களை யெல்லாம் தர்மமாகிய நோட்டாக மாற்றிக் கொள்ள வேண்டும். எல்லாவிதச் சக்திகளையும் அந்தத் தர்மத்திலே உபயோகிக்க வேண்டும். அப்படிச் செய்யும் தர்மம் எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் செல்லும். ராமனுக்குக் கௌசல்யாதேவி பாதுகாப்பாகச் சொன்னது அதுதான். ராமனுக்கு வந்த ஆபத்துக்கள் மிகப்பெரியவை. அவற்றையெல்லாம் அந்தத் தர்மத்தால்தான் கடந்தான்.

ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள், காஞ்சீ காமகோடி பீடம்.

# பாரதீய மியூஸிக் & ஆர்ட்ஸ் சொஸைடி (ரிஜிஸ்டர்டு)

**மாதுங்கா :: பம்பாய்-19**

## நான்காவது ஆண்டு விழா 1957

**சங்கீதப் பள்ளி உதவி நிதிக்காக**
**சங்கீதக் கச்சேரி, நாடகம், நடன நிகழ்ச்சிகள்**

15-3-57 வெள்ளி இரவு 7-30க்கு ஆரம்ப விழா
இரவு 8 மணிக்கு
பாய் கேசர்பாய்கேர்கர் - ஹிந்துஸ்தானி சங்கீதம்

16-3-57 சனி மாலை 5 மணிக்கு
டி. ராமஸ்வாமி சாஸ்திரிகள் - விகடம்

16-3-57 சனி மாலை 6-30 மணிக்கு
பாலக்காடு ராமபாகவதர் - பாட்டு
பாப்பா - வயலின்
பாலக்காடு மணி அய்யர் - மிருதங்கம்
கோதண்டராமய்யர் - கடம்

17-3-57 ஞாயிறு மாலை 6 மணிக்கு
மகாராஜபுரம் - பாட்டு
பாப்பா - வயலின்
பாலக்காடு மணி அய்யர் - மிருதங்கம்

18-3-57 திங்கள் இரவு 8 மணிக்கு
ஜி. என். பி. - பாட்டு
கிருஷ்ணன் - வயலின்
பழனி - மிருதங்கம்

19-3-57 செவ்வாய் இரவு 8 மணிக்கு
மதுரை மணி அய்யர் - பாட்டு
கிருஷ்ணன் - வயலின்
பழனி - மிருதங்கம்
கோதண்டராமய்யர் - கடம்

20-3-57 புதன் இரவு 8 மணிக்கு
டி. ஆர். மகாலிங்கம் & பார்ட்டி - புல்லாங்குழல்

21-3-57 வியாழன் மாலை 6 மணிக்கு
குற்றாலக் குறவஞ்சி - நாட்டிய நாடகம்
ஸ்ரீமதி ருக்மணி தேவி & பார்ட்டி.
கலாக்ஷேத்திரம், அடையாறு

22-3-57 வெள்ளி இரவு 8 மணிக்கு
பிருத்வி தியேட்டர்ஸ் 'பைசா' - ஹிந்தி நாடகம்
பிருதிவிராஜ் கபூர் & பார்ட்டி

23-3-57 சனி மாலை 6 மணிக்கு
குமாரி ஈ. வி. சரோஜா & பார்ட்டி - பரதநாட்டியம்
(வழுவூர் ராமய்யா பிள்ளையின் சிஷ்யை)

24-3-57 ஞாயிறு மாலை 6 மணிக்கு
கதகளி (கேரளாவின் புகழ்பெற்ற நடிகர்கள்) - கதகளி

25-3-57 திங்கள் இரவு 8 மணிக்கு
திருச்சி A. K. C. நடராஜன் & பார்ட்டி - க்ளாரினெட்

**பம்பாய்-மாதுங்கா நப்பு மைதானத்தில் விசேஷமாக அமைக்கப்பட்டிருக்கும் பந்தலில்**

தினசரி டிக்கெட்டுகள் : ரூ. 10/-, 3/-, 2/-
விருந்தினர்கள் : 65/-, 35/-, 15/-, 12/-

**அட்வான்ஸ் புக்கிங் : S. I. W. S. ஸ்கூல் & வெங்கடேஸ்வரா ஸ்டோர்ஸ், மாதுங்கா, பம்பாய்**




பிரமுகர் (ஹோட்டல் சிப்பந்திக்குப் பத்து ரூபாய் இனாம் அளித்து விட்டு):—ஏன், அப்பா! உனக்கு இதைக்காட்டிலும் யாராவது அதிகமாக இனாம் கொடுத்திருக்கிறார்களா?

சிப்பந்தி:—கொடுத்திருக்கிறாங்க. பதினைந்து ரூபாய் கொடுத்திருக்கிறாங்க.

பிரமுகர் (இன்னுமொரு பத்து ரூபாயை அவனிடம் கொடுத்தவாறே):—அவன் எவன் அப்பா கொடுத்தவன்?

சிப்பந்தி:—நீங்கள் தானுங்க! போன தடவை வந்து தங்கினபொழுது கொடுத்தீங்களே, நினைவில்லீங்களா?

★



"உங்கள் வோட்டை அவசியம் எனக்குக் கொடுக்கணும்!"

"ஆஹா! பேஷாகத் தருகிறேன். ஆனால் நான் வோட்டுப் போடுகிற கட்சி ஜெயிக்காதே!"

"அப்படியா? உங்கள் வோட்டைத் தயவு செய்து எதிர்க் கட்சிக்கே போடுங்க!"

★

கட்சிக்காரன் (தன் வக்கீலிடம்):—ஏன் எசமான்? எனக்கு நியாயம் வழங்கப் படுங்களா?

வக்கீல் (நேர்மையான வழக்குகளையே எடுத்துக் கொள்பவர்):—அப்படி நடக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை.

கட்சிக்காரன்:—என்னங்க அப்படிச் சொல்லி விட்டீங்க?

வக்கீல்:—பின்னே என்ன? நீ செய்திருக்கிற குற்றத்துக்கு உனக்குச் சவுக்கடி கொடுக்க வேண்டும். இரண்டு ஜூரர்கள் இந்தத் தண்டனையை அறவே வெறுப்பவர்களாயிருக்கிறார்கள். எப்படி நியாயம் கிடைக்கும்?

★

"தினம் தவறாமல் நீங்கள் 'லேட்'டாக வருகிறீர்களே? இனிமேல் ஒரு அலாரம் கடிகாரம் வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்?"

"வேண்டாம், ஸார்! நேற்று எனக்குக் குழந்தை பிறந்திருக்கிறது, ஸார்!"

★

"அதோ அந்தப் பேர்வழியைப் பார்த்தீர்களா! அவர் ஒரு 'பெரிய ஆசாமி'! என்னை இருபதாயிரம் ரூபாய்க்கு மேல் மோசம் செய்து விட்டார்!"

"என்ன, உன்னையா மோசம் செய்து விட்டார்?....எப்படி?"

"எனக்குத் தம்முடைய பெண்ணைக் கொடுப்பதாகச் சொல்லி விட்டுக் கடைசியில் கையை விரித்து விட்டார்!"

"பேனாவை அடக்க விலையைவிடக் குறைந்த விலைக்கு விற்கிறீர்களே? உங்களுக்கு அதில் லாபம் வருமா?"

"கவலைப்படாதீர்கள்! பேனாவின் ரிப்பேர் செலவில் எடுத்து விடுவேன்!"

★

பையன்:—அப்பா வீட்டில் இல்லையென்று உங்களிடம் சொல்லச் சொன்னார்.

வந்தவர்:—ரொம்ப சரி, நான் அவரைப் பார்க்க வரவில்லையென்று நீ போய் அவரிடம் சொல்லி விடு!

★



"வோட்டுக் கேட்கப் போனால் இந்த வீட்டு மனுசன் வள்ளென்னு விழுகிறான்!"

"அட, மனுசா! வாசலிலே 'நாய்கள் ஜாக்கிரதை'ன்னு போர்டு போட்டிருக்கிறதே! அதை நீங்கள் பார்த்து விட்டுப் போகப் படாதோ?"

★

"டேய், மணி! உன்னால் இந்தப் பவுண்டன் பேனாவை ஒடிக்க முடியுமா?"

"இதையா ஒடிக்க முடியாது? ஒடித்துக் காண்பித்தால் எனக்கு என்ன தருவாய்?"

"நீ அதை ஒடித்தால் அப்புறம் உனக்கே அதைக் கொடுத்து விடுகிறேன்!"



சைக்கிள் மோதி விழுந்தவர்: என்ன ஐயா, உமக்கு 'பிரேக்' இல்லையா?

சைக்கிள்காரர்: நீங்களெல்லாம் ரோட்டில் நடக்கிறபோது எனக்கு எதற்குப் பிரேக்கு?

# ஈழ நாட்டு பிரயாணம் 8

# தெய்வதரிசனம்

தமிழ்த்திரு நாடு என்றும் தெய்வ மணம் கமழும் பெருநாடு. 'ஒன்றென்றிரு; தெய்வம் உண்டென்றிரு' என்று நன்றாக அறிவுறுத்திய நாடு தமிழ் நாடு. அங்கு இங்கு எனாதபடி எங்கும் உள்ளது தெய்வம்; அன்று இன்று எனாதபடி என்றும் உள்ளது தெய்வம்; அதன் ஆணையின்றி ஓர் அணுவும் அசையாது என்பது தமிழ் நாட்டுப் பெரியோர்களின் கொள்கை.

தெய்வம் உண்டு என்று தெளிந்து தெய்வ நெறியிலே நின்று வாழும் உயர்ந்த பண்புடைய மக்கள் தமிழ் மக்கள். தங்கள் சமயமல்லாத பிற சமயங்களைப் பற்றிக் குறைகூற மாட்டார்கள். ஒவ்வொரு மதத்தின் தத்துவங்களையும் உண்மையாக உணர்ந்த பெரியவர்கள் வேறு மதங்களைச் சேர்ந்தவர்களை மரியாதையோடும், கௌரவத்தோடும் பார்ப்பார்கள். இந்தக் காலத்தில் உத்தியோக ஆசையில் தோன்றி வளர்ந்திருக்கிற அசூயையும், குரோதமும் சேர்ந்து சைவர்களும், பௌத்தர்களும், கிறிஸ்தவர்களும், முஸ்லிம்களும் ஒருவரையொருவர் சரியாகப் புரிந்து கொள்ளாமல் பிரிந்து நிற்கிறார்கள். சிற்சிலஇடங்களில் மதவெறிபிடித்தவர்கள் இந்தக் காரியங்களை வளர்த்தும் வருகிறார்கள்.

ஆனால் தமிழ் நாட்டில் மதங்கள் பல இருந்தாலும் மத வெறி அதிகமாக எப்பொழுதுமே இருந்ததில்லை. தமிழகத்தின் உயர்ந்த பண்பாடு சமய வெறிக்கு இடம் கொடுத்ததில்லை. ஒரே குடும்பத்திலேயே பல்வேறு சமயங்களைச் சேர்ந்தவர்கள் நன்றாகவே இருந்திருக்கிறார்கள். இந்தக் காட்சி இன்றையத் தமிழ் நாட்டிலே காண முடியாவிட்டாலும் தமிழ் நாட்டின் தொடர்பால் உயர்ந்த ஈழத்தில் இன்றைய தினமும் காண முடிகிறது. ஒரே குடும்பத்தில் ஒருவர் சைவராகவும், மற்றொருவர் பௌத்தராகவும், வேறொருவர் கிறிஸ்தவராகவும் இருக்கிறார்கள். மிக ஒற்றுமையாக இருக்கிறார்கள். கணவர் சைவ மதத்தவராகவும், மனைவி கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவராகவும், அவர்களின் குமாரன் பௌத்த மதத்தைச் சேர்ந்தவராகவும் இருக்கும் காட்சியைப் பார்க்க முடிகிறது.

இது போலவே நாலு மதங்களைச் சேர்ந்தவர்களும் ஒரு இடத்துக்குச் சென்று ஒன்றாக வழிபடும் திருக் கோயிலும் ஈழநாட்டில் இருக்கிறது. இந்த அற்புதமான கோயிலுக்குத்தான் நாம் இப்போது செல்லப் போகிறோம். சைவரும் பௌத்தரும் கிறிஸ்தவரும் முகம்மதியரும் சேர்ந்து வழிபடும் அபூர்வமான காட்சி 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்!' என்ற தமிழ் மறைக்கு விளக்கம் கூறுவது போலிருக்கிறது. இந்த விந்தைக் காட்சியைப் பார்க்காமல் இருக்கலாமா?

*** *** ***

ரத்தினபுரியிலிருந்து சிவன் ஒளிபாத மலை இருபது மைல். மல்வெல சாலை வழியாகச் செல்ல வேண்டும். இருபுறத்திலும் உள்ள இயற்கைக் காட்சியை, பச்சைப் பசேல் என்று இருக்கும் பரவசமூட்டும் காட்சியைப் பார்த்துக் கொண்டே பதினாறு மைல் தூரம் காரில் பிரயாணம் செய்யலாம். இதற்கு மேல் காரில் பிரயாணம் செய்ய முடியாது. நடந்துதான் செல்ல வேண்டும். சுமார் ஆறு மைல் தூரம் நடந்தே ஆக வேண்டும். மலையின் அடிவாரத்தைக் 'காரணி' என்று சொல்லுகிறார்கள். இங்கு கார்களை நிறுத்திவிட வேண்டியதுதான். அணி அணியாகக் கார்களை நிறுத்தி வைப்பதால்தான் காரணி என்று கூறுகிறார்களோ என்னவோ!



காரணியிலிருந்து மக்கள் சாரிசாரியாக இறைவனின் திருப்பாதத்தைத் தரிசிக்க மலை ஏறுகிறார்கள். சைவர்கள் உமையாள்பாகனின் உத்தமபாதம், சிவபிரானின் ஒளிவீசும் திருவடி என்று அன்புடன் அழைத்துக் கொண்டு மலை ஏறுகின்றனர்; பௌத்தர்களோ புத்த தேவனின் திருப்பாதம் என்று கூறி அதைத் தொழுது வரச் செல்லுகின்றனர். முகம்மதியர்களோ நபிநாயகத்தின் பாத கமலங்கள் என்று நம்பிச் செல்கின்றனர். கிறிஸ்தவர்களோ பகவான் ஏகநாதரின் திருப் பாதத்தைப் பார்த்துப் புனிதமடையப் போகிறோம் என்று பரவசத்துடன் போகின்றனர்.

சைவர்கள் சிவன் ஒளிபாத மலை என்றும், பௌத்தர்கள் ஸ்ரீபாத மலை என்றும், முஸ்லிம்கள் ஆதம்பாவா மலை என்றும், கிறிஸ்தவர்கள் ஆதாம் மலை என்றும் பக்தியுடன் கூறும் இயற்கைத் தெய்வத்தின் திருமலையின் சிகரத்துக்கு இப்பொழுது நாமும் செல்வோம்.

கேரள நாட்டில் இருக்கும் சபரி மலைக்குச் செல்வதற்கு மக்கள் விரதம் பூண்டு, நோன்பு எடுத்துச் செல்வது போலவே சிவன் ஒளிபாத மலைக்கும் மக்கள் பக்தியுடன் விரதம் பூண்டு, நோன்பு எடுத்துச் செல்லுகின்றனர். ஆனால் சபரி மலைக்குச் செல்வது போல அவ்வளவு பயங்கரமான வழியில்லை. ஆனாலும் அபாயம் இல்லை என்று சொல்லிவிட முடியாது.

மாலை நாலு மணிக்கே மலை ஏற ஆரம்பித்து விடுகிறார்கள். ஆறு மைல் தூரத்தையும் ஒரு இரவு முழுதும் கடக்க வேண்டியிருக்கிறது. மலைமீது ஒவ்வொரு படியாக ஏறுவதால்தான் இந்தக் காலதாமதம் ஏற்படுகிறது. மலை மீது ஏறுவதற்கு வசதியான வழிகள் இருக்கின்றன. ஆனாலும் சில இடங்களில் கொஞ்சம் சிரமமாகத்தான் இருக்கிறது. மக்கள் கூட்டமாக, ஆண்களும் பெண்களுமாகச் செல்லுகிறார்கள். ஆண்களைவிடப் பெண்கள் தான் அதிகம் செல்கிறார்கள். இராக்காலங்களில் செல்வதால் எல்லாரும் தீப் பந்தங்களையும், டார்ச் லைட்டுகளையும் தாராளமாக உபயோகித்துக் கொண்டு செல்கிறார்கள்.

மலைமீது ஏறும்போது வழியில் பல இடங்களில் ஒரு நதி குறுக்கும் நெடுக்குமாக வருகிறது. ஆகா! அது ஆடி வரும் அழகை எப்படி வர்ணிப்பது! சில இடங்களில் சின்னஞ்சிறு குழந்தை போல் தவழ்ந்து வருகிறது. சில இடங்களிலே காலில் சிலம்பு கொஞ்சும் பெண் மணிபோல் நடைபயின்று வருகிறது. இன்னும் சில இடங்களில் வீர புருஷன் போல் கம்பீரமாகவருகிறது. இத்தனைகோலங்களில் வரும் இந்த நதிதான் நாம் ரத்தினபுரியில் பார்த்த களுகங்கை. களுகங்கை ஈழ நாட்டில் உள்ள இரண்டாவது பெரிய நதி. இந்த நதி சிவன் ஒளி பாத மலையில் உற்பத்தியாகி ஈழத்தீவின் பல பல இடங்களையும் தழுவி அணைத்து, அந்த இடங்களையெல்லாம் வளம் கொழிக்கும் பூமியாகச் செய்துகொண்டு மேற்கு மாகாணத்துப் பாணந்துறையில் போய் அரபிக் கடலில் கலக்கிறது. இரண்டாவது பெரிய நதியான களுகங்கை உற்பத்தியாவதால்தானோ என்னவோ சிவன் ஒளி பாத மலையும் ஈழ நாட்டின் இரண்டாவது உயரமான மலையாகத் திகழ்கிறது. பூமி மட்டத்திலிருந்து சுமார் ஏழாயிரத்து முந்நூறு அடி உயரமுள்ள இந்த மலையில் ஏறும்போது களுகங்கையின் அழகையும் இன்னும் பல இயற்கையின் விந்தைக் காட்சிகளையும் பார்த்துப் பார்த்து அனுபவித்துக் கொண்டே செல்வதால் நீண்ட வழியின் சலிப்பும் கால் வலியும் தெரிவதில்லை; களைப்பும் தோன்றுவதில்லை.

மக்கள் நூறு அடி இருநூறு அடி வரையில் மிக உற்சாகமாகவே ஏறுகிறார்கள். உயரம் அதிகமாக அதிகமாக அவர்கள் உற்சாகம் குறைந்து அவர்களிடம் அமைதியும் பக்தியும் ஏற்படுகிறது. நடு நடுவில் சற்றுத் தங்கி ஓய்வெடுத்துக் கொள்வதற்கு வசதியாகப் பல சாவடிகள் இருக்கின்றன. அங்கெல்லாம் சற்றுக் காலை நீட்டிப் படுப்பதற்குக் கூட வசதியாக மரத்தாலான கட்டில்கள் இருக்கின்றன. சற்று வயது சென்றவர்களும் பலவீனமானவர்களும் இங்கெல்லாம் தங்கி ஓய்வு பெற்று மேலே வருகிறார்கள்.

நடு நடுவில் டீக் கடைகளும் இருக்கின்றன. இங்கு பால்



* * * * * * * * * * அருள் வாக்கு * * * * * * * * * *

ஒரு மலையடிவாரத்தில் நாம் இருக்கிறோம். நம்முடைய கையில் ஆயிரம் ரூபாய் பணம் இருக்கிறது. அவ்வளவும் அரையணாக் காசாக இருக்கிறது. அப்பொழுது திருடர்கள் வருகிறார்கள். பலமான கலகம் நடக்கும் போலிருக்கிறது. மலை மேல் ஏறி அப்புறம் போய் விட்டால் நமக்குப் பயமே இல்லை. அப்பொழுது ஒருவன் வந்து இந்த ஆயிரம் ரூபாய்க்கும் நோட்டு வேண்டுமா என்று கேட்கிறான்! நாம் என்ன செய்வோம்? உடனே அவனிடம் சில்லறை மூட்டையைத் தள்ளி விட்டு ஆயிரம் ரூபாய் நோட்டை வாங்கிக் கொண்டு மலைமேல் ஏறிப்போய் விடுவோம். ஆனால் அந்த நோட்டு மலைக்கு அப்புறமுள்ள தேசத்தில் செல்லும் நோட்டாக இருக்க வேண்டும்.

* * *

உடம்பிருக்கும் பொழுது உபயோகப்படக் கூடிய காரியங்களைத் தவிர அதற்குப் பின்பும், பல கோடி வருஷங்களுக்கும், எப்பொழுதும் உபயோகப்படக் கூடிய காரியங்களாக நாம் செய்ய வேண்டும். இந்த ஊர் நோட்டு ருஷியாவில் செல்லாது. எல்லா ஊருக்கும் ஒரு ராஜா இருந்தால், அவனுடைய முத்திரையுள்ள நோட்டு எங்கும் செல்லும். இந்தப் பதினான்கு லோகங்களுக்கும் ஒரு ராஜா இருக்கிறான். அவன்தான் பரமேஸ்வரன். அவனுடைய சகல ராஜ்யங்களிலும் செல்லும் நோட்டு ஒன்று இருக்கிறது. அது எப்பொழுதும் எவ்விடத்திலும் செல்லும். அது எது? அதுதான் தர்மம்.—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்.

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

கலப்பில்லாத டீ கிடைக்கிறது. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கிக் கொண்டு வியர்க்க விருவிருக்க மேலே ஏறி வருகிறவர்களுக்கு இந்த டீ தேவபானமாக இருக்கிறது. மலைமேல் ஏற ஏறச் சீதோஷ்ணம் மாறுகிறது. உஷ்ணம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வருவதை நன்றாக உணர்ந்து கொள்ள முடிகிறது. மலை உச்சியில் நல்ல குளிர் எடுக்க ஆரம்பித்து விடுகிறது. ஆனாலும் மலை அடிவாரத்தில் இருந்த களைப்பு மலை உச்சியை நெருங்க நெருங்க இருப்பதில்லை. நாலு பக்கங்களிலும் உள்ள பலவித மூலிகைகள் நிறைந்த வனத்திலிருந்து வரும் இளங் காற்று உடலுக்கு ஒரு தெம்பையும் மனத்துக்கு ஒரு இனிய சுகத்தையும் அல்லவா அளிக்கிறது?

மலை அடிவாரத்தில் இருந்து மலையின் சிகரம் வரையில் பல இடங்களில் டீக்கடை இருப்பதாகச் சொன்னேன் அல்லவா! மலை அடிவாரத்தில் மிகச் சுத்தமான டீ கிடைக்கிறது. அதன் விலையும் மிக மலிவாக இருக்கிறது. மலை ஏற ஏற டீயின் விலையும் ஏறிக்கொண்டே போகிறது. மலையின் உயரத்தில் உஷ்ணம் குறைவதுபோல அங்கு கிடைக்கும் டீயின் தரமும் குறைகிறது. வியாபாரிகள் எல்லா இடங்களிலும் தங்கள் லாபம் ஒன்றிலேதான் குறியாக இருப்பார்கள் போலும்!

மலை அடிவாரத்தில் தனித் தனிக் குழுவாகப் பிரிந்து பிரிந்து செல்லும் பக்தர்களின் கூட்டம் மலை ஏற ஏற ஒன்றி விடுகிறது. எல்லாரும் ஒரே குலத்தவர்கள் போல நேசபாவமாகப் பழக ஆரம்பித்து விடுகிறார்கள். ஈழ நாட்டில், தமிழ் என்றும் சிங்களம் என்றும் வெறி பிடித்து நிற்கும் மக்களா இப்படிச் சகோதரர்கள் போல் இருக்கிறார்கள் என்று எண்ணி வியக்க வேண்டியிருக்கிறது. தமிழும் சிங்களமும் சரிசமமாக ஒன்றுவதற்கு ஏழாயிரம் அடி அல்லவா உயரே செல்ல வேண்டியிருக்கிறது!

நட்ட நடுநிசியில் 'ஙய்' 'ஙய்' என்ற இரவுப் பூச்சிகளின் சத்தம் கருதிகூட்ட பக்தர்கள் "கருணாவாய்!" "கருணாவாய்!" என்று இனிய குரல் கொடுத்துக் கோஷிக்கிறார்கள். உடனே "சாது! சாது!" "சாது! சாது!" என்று இன்னொரு கூட்டம் சொல்கிறது. இந்தச் சத்தம் அதிகம் ஆக ஆக மலையின் சிகரத்தை நெருங்குகிறோம் என்ற விஷயத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது.

இரவெல்லாம் மலை ஏறி வந்தாலும் மலையின் சிகரத்தை நெருங்க, நெருங்க, மனத்திலே இதுவரையில் ஏற்படாத அமைதி தோன்றுகிறது. உடல் என்னவோ அபூர்வமான சுறுசுறுப்பைக் காட்டுகிறது. இருட்டாக இருந்தாலும் மலையின் சிகரத்திலே, சிவன் ஒளிபாதத்துச் சிகரத்திலே மின்சார விளக்குகள் பளீர் என்று ஒளி வீசி மின்னுகின்றன. அந்த வெளிச்சத்தைப் பார்த்தவுடன் மக்களின் "கருணாவாய்!" "சாது! சாது!" என்ற கோஷங்கள் துரித காலத்திற்குச் சென்று உச்சஸ்தாயியில் உயருகின்றன.

இதோ இறைவன் திருப்பாதத்தை நெருங்கி விட்டோம். இரவு முழுவதும் ஒவ்வொரு படியாக ஏறி வந்ததின் பலனை யடையப் போகிறோம். இரவும் கழிந்து விடுகிறது. கீழ் வானமும் வெளுக்க ஆரம்பித்து விடுகிறது. நம்முடைய இதயத்தில் இதுவரையில் குடி கொண்டிருந்த இருளும் வெளுத்து விட்டது போன்ற பிரமை ஏற்படுகிறது. மனம் விரிந்து விசாலம் அடைந்து விடுகிறது.

**ம**க்கள் வரிசை வரிசையாக ஆண்டவனின் பாதத்தைப் பார்த்துத் தரிசிக்கச் செல்கின்றனர். "ஆ! தெய்வத்தின் திருப்பாதம் எங்கே?", "சிவன் ஒளிபாதம் எங்கே?" "ஸ்ரீ பாதம் எங்கே?" "ஆதம்பாவா பாதம் எங்கே?" "ஆதாம் பாதம் எங்கே?" என்று ஆவலுடன் கேட்கத் தோன்றுகிறது. ஆனால் பக்தர்கள் தாங்கள் கொண்டு செல்லும் வெள்ளைத் துணியால் இறைவனின் திருப்பாதங்களை மூடி விடுகின்றனர். அதனால்தான் பாதத்தைப் பார்த்து வணங்க முடியவில்லை. அதோ அந்தத் துணிகளை எடுக்கிறார்கள். ஒன்று இரண்டு என்று எண்ணிக்கையில் அடங்காமல் இருக்கும் காணிக்கைத் துணிகளை ஒவ்வொன்றாக, இரண்டு இரண்டாக, அப்படியே மொத்தமாக எடுத்து அப்பால் வைக்கிறார்கள். அந்தத் துணிகளே மலையின் உச்சியில் சின்னஞ் சிறு குன்றாகக் காட்சிதருகிறது.

பக்தர்களுக்குப் பாத தரிசனம் கிடைக்கிறது. அவரவர்கள் மனக் கண்ணில் அவரவர்களின் ஆண்டவன் தோன்றுகிறான். சைவர்கள் நெற்றி ஒற்றைக் கண்ணையும் அவன் பாதகமலங்களையும் பார்த்துப் பரவசம் அடைகிறார்கள். பௌத்தர்களோ பகவான் புத்தரையும் அவர் பாத மலரையும் பார்த்



சென்ற 17-2-57 ஞாயிற்றுக்கிழமை காலை 11 மணிக்குமேல் இடபலக்கின சுபமுகூர்த்தத்தில் எனது திருநிறைச்செல்வன் ஸ்ரீதரனுக்கு வைத்தீஸ்வரன் கோவில் முன்றலில் சென்னை திருவல்லிக்கேணி பிரும்ம ஸ்ரீ சேதுராம சாஸ்திரிகள் தலைமையில் சௌள உபநயன பிரும்மோபதேசம், அன்பர்களும் சுற்றத்தவர்களும் சூழ இனிது நிறைவேறியது.

இப்படிக்கு
**ஸ்ரீ சிவசுப்பிரமணிய ஐயர்**
இல்லாள் : **செண்பகலெக்ஷ்மி அம்மாள்**
உயரப்புலம் உத்துங்க விநாயகராலயம்
கொக்குவில் ரோடு. ஆனைக்கோட்டை
போஸ்டு. யாழ்ப்பாணம். சிலோன்

# சுலேகா

லிமிடெட்
பேனக்கள்

திருப்திகரமான
சேவைக்கு




*Sole Distributors :*

**PENMAN'S INDUSTRIAL SERVICES**

**KANDIVLI, BOMBAY (S. D.)**



## கார்த்திகேயன் தியேட்டர் : ஆரணி

ஆரணி, சைதாப்பேட்டையில் எல்லாவித நவீன மின்சார சாதனங்களுடன் கூடிய மேற்படி புதிய தியேட்டர் 10–2–57 அன்று, வ. ஆ. ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் எஸ். பஞ்சாட்சர செட்டியார் B.A., B.L., M.L.A. அவர்கள் தலைமையில் ஆரணி நகரசபைத் தலைவர்



**A. S. சுப்பிரமணிய முதலியார்**
உரிமையாளர்

டாக்டர் வி. கே. தர்மராஜன் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. பல பிரமுகர்கள் விஜயம் செய்து தியேட்டரின் உரிமையாளரை மிகவும் பாராட்டினார்கள். 10–2–57 அன்று மாலை 4 மணிக்குத் தமிழ் சமூகப் படம் மாதர்குல மாணிக்கம் திரையிடப்பட்டது

# திருச்சி

## லோகசபை வாக்காளர்களுக்கு

### ஒரு வேண்டுகோள்

•

(திருச்சி தொகுதியில்

**திருச்சி, முசிரி, வாளாடி, ஸ்ரீரங்கம்**

முதலியவை அடங்கியன)

•



சி. எம். சீனிவாசன், பி.ஏ., பி.எல்.,

வோட்டர்களுக்கு,

எனது அன்பார்ந்த வணக்கம்.

நான் திருச்சி பகுதியிலிருந்து உங்கள் சார்பில் பார்லிமெண்டிற்கு அபேக்ஷகனாக நிற்கிறேன். கட்சிகளில் சேராத வண்ணம் சுயேச்சை முறையில் உங்களுக்குச் சரிவரத் தொண்டு செய்யவும், உங்கள் எண்ணங்களைத் தில்லி சபையில் தைரியமாக எடுத்துப் பேசவும் என்னால் முடியும்.

இப்பொழுது அரசாங்கம் நடத்தும் கட்சியானது பொதுஜனங்கள் யாவருக்கும் கவலையை உண்டு பண்ணுவதுடன், சரியான வழியில் போவதாகத் தெரியவில்லை.

தேசிய சுதந்திரத்துக்கும் பொதுமக்களின் உரிமைகளுக்கும் கேடு வராமல் பார்க்க வேண்டிய அவசியம் வந்து விட்டது. ஜனநாயகத்தைக் காப்பாற்றி எதேச்சாதிகாரத்தைத் தடுத்துத் துணிவுடன் பேச வேண்டியது அவசியமாகிறது.

இத்தேர்தலில் நீங்கள் என்னை ஆதரித்தால் நான் ஊக்கமுடன் தேசிய நல்வாழ்வுக்கு உழைத்துத் தொண்டு புரிவேன். எனவே நீங்கள் தயவு செய்து தேர்தல் நடக்குமிடத்திற்குத் தவறாமல் வந்து தங்களுடைய வோட்டுகளை **“இரண்டு இலைகள்”** அடையாளம் போடப்பட்ட பெட்டிகளில் போட்டு ஆதரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.



•

**வோட்டு போடும் நாள்**

**1957 மார்ச் 6-ந் தேதி புதன்கிழமை**

நேரம்: காலை 7 மணி முதல் 12 மணி வரை

மாலை 1 மணி முதல் 4 மணி வரை

வாழ்க நம் நாடு! — வாழ்க நம் மக்கள்!

ADVT.

துப்போற்றி வணங்குகிறார்கள். கிறிஸ்துவர்களும், முகம்மதியர்களும், ஏசுவையும், நபி நாயகத்தையும் அந்தப் புண்ணிய மூர்த்திகளின் பாதங்களையும் தரிசித்து மகிழ்கிறார்கள். அந்த உற்சாகத்தில் தங்களை மறந்து பரவசமடைந்து விடுகிறார்கள். மேலே செல்ல வேண்டும் என்பதையும் மறந்து அப்படியே நின்றுவிடுகிறார்கள். பின்னால் பக்தர்களின் கூட்டம் வந்துகொண்டே இருக்கிறது. அந்தக் கூட்டம் தங்களை மறந்து நிற்கும் பக்தர்களுக்கு உணர்வை அளிக்கிறது. அவர்கள் தங்கள் நிலையை உணர்கிறார்கள். அங்கிருந்து நகர்ந்து அப்பால் செல்லுகிறார்கள்.

'' மலை உச்சியில் இருக்கும் இறைவனின் திருப்பாதம் கேவலம் சிமிண்டால்தான் செய்யப்பட்டிருக்க வேண்டுமா ?''

'' இல்லை. கருங்கல்லால் இருந்த பாதங்கள் தான். பல ஆயிரக்கணக்கான பக்தர்கள் பகவானின் பாதங்களைத் தொட்டுத் தொட்டு வணங்கி அதன் அமைப்பே குறைந்துவிட்டது. அதனால் இப்பொழுது சிமிண்டைக் கொண்டு செப்பனிட்டிருக்கிறார்கள்.''

சுமார் இரண்டடி நீளமும், ஒன்றரையடி அகலமும் உள்ள இந்தத் திருவடி தரிசனத்துக்காகத்தான் ஏழாயிரத்து முந்நூறு அடி உயரத்தில் இருக்கும் இந்த மலையின் சிகரத்தைச் சுமார் ஆறு மைல் தூரம் இரவெல்லாம் நடந்தும் ஏறியும் வந்திருக்கிறோம்.

சிவன் கோயிலாயிருந்தாலும், விஷ்ணு கோயிலாயிருந்தாலும், மசூதியாக இருந்தாலும், மாதாகோயிலாக இருந்தாலும், புத்த விகாரமாக இருந்தாலும் எல்லாவற்றிலும் ஒரு உண்டி இருப்பதைக் காணலாம். எல்லாக் கோயில்களிலும் உண்டிகை மட்டும் இருக்கும். அந்த உண்டிகை இங்கேயும் இருக்கிறது. அதில் நிறையக் காசாகவும், நோட்டாகவும், தங்கமாகவும் காணிக்கை செலுத்துகிறார்கள். நான்கு மதத்தைச் சேர்ந்தவர்களும் காணிக்கை செலுத்துகிறார்கள். ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் உண்டிகையில் சேர்கின்றன. எவ்வளவு சேர்ந்தால் என்ன ? எல்லாம் சிங்களவர்களுக்கும், அவர்கள் அதிகமாக வழிபடும் பௌத்த மதத்துக்கும்தான் போய்ச் சேர்கிறதாம். பலமான போலீஸ் பந்தோபஸ்துகளுடன் சிவன் ஒளி பாத மலை உச்சியிலிருந்து காணிக்கை நிறைந்த உண்டிகையைத் தினந்தோறும் கீழே கொண்டுபோய் விடுகிறார்கள்.

## செங்கதிர்த் தேவன்

திருப்பாத தரிசனத்தைவிட மிக முக்கியமான தரிசனம் பால சூரிய தரிசனம்தான். உதய சூரியனின் தரிசனத்தைப் பார்ப்பதற்காகத்தான் மக்கள் இரவோடு இரவாக ஏறி உதயத்துக்கு மலைச்சிகரத்தை அடைகிறார்கள். கடுங் குளிரில், நம் மீது உராய்ந்து கொண்டு செல்லும் மேகக் கூட்டத்துக்கு மத்தியில் நின்று கொண்டு உதயசூரியனைப் பார்க்கும் போது இன்றுதான் பிறவி எடுத்த பயனையே பெற்று விட்டது போன்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஆண்டவன் ஜகஜ் ஜோதியாக நம்மை ஆசீர்வதிக்கத் தம்முடைய பொற் கரங்களை நீட்டுவது போலிருக்கிறது. காலைக் கதிரவனின் மிக நீண்ட செங்கதிர்கள்.

உலகில் வேறு எங்குமே காணமுடியாத அழகை இங்கு நின்று பார்த்து மகிழலாம். கீழ் வானத்தில் இந்திரஜால மகேந்திர ஜால வித்தைகள் நடக்கின்றன. ஒரு கணம் இருந்த தோற்றம், அற்புதக் காட்சி அடுத்த கணத்தில் இருப்பதில்லை. உலகில் உள்ள சித்திரக் கலைஞர்கள் அத்தனைபேரும் ஒன்று சேர்ந்து வர்ணக் காட்சிகள் ஏற்படுத்தினாலும் செய்து காட்ட முடியாத காட்சியை சிவன் ஒளி பாதமலை சிகரத்தில் நின்று கீழ்வானத்திலே கண்டு களிக்கலாம். இந்தக் காட்சியை எழுத்திலே வர்ணிக்க முடியாது. அதன் அழகை வடித்துக் கொடுக்கும் சக்தி எந்த மொழியின் வார்த்தைகளுக்கும் இருக்கவே முடியாது. ஒரு வைரத் தட்டு தகதகதக வென்று ஜகஜ்ஜோதியாக மின்னுகிறது. அடுத்த கணம் அது கீழ் வானத்தில் 'கிர்' 'கிர்' என்று சுழன்று கொண்டு மேலே ஏறுகிறது. பாலசூரியனின் கிரணம் பட்டு வானத்தில் வர்ண ஜால வித்தைகள் நடைபெறுகின்றன. சூரியனைச் சுற்றிலுமுள்ள நீலவானமும் நம் எதிரில் இருக்கும் மேகங்களும் திடீரென்று தங்க நிறம் பெற்று நம்மை மயக்குகின்றன. ஆகா ! என்ன வர்ணம்! எத்தனை விதமான வர்ணங்கள் ! நீலம் ! நீலத்தில்தான் எத்தனை வகை ! பச்சை ! பச்சையில்தான் எத்தனை விதங்கள் ! பத்தரை மாற்றுப் பசும்பொன்னையல்லவா பால சூரியன் உருக்கி வானவெளியில் ஊற்றுகிறான். அது அங்கங்கே, ஏரிகளாக, குளங்களாக, கால்வாய்களாக, ஆறுகளாக மாறுகின்ற அற்புதக் காட்சியைப் பார்ப்பதற்குப் பதினாயிரம் கண்கள் வேண்

டும். இதை ரஸித்துக் களிப்பதற்கு ஏழாயிரம் அடியென்ன ஏழுலட்சம் அடி வேண்டுமானாலும் எத்தனை எத்தனையோ இரவுகள் வேண்டுமானாலும் ஏறி வரலாமே!

இந்தக் காட்சியைப் பார்த்து மகிழுவதற்குத்தானோ என்னவோ, தெய்வமே அங்கு வந்து நிற்கிறது போலும். அதன் திருப்பாதத்தை மட்டும்தான் நம்மால் பார்க்க முடிகிறது! ஆமாம்! கடவுளே அங்கு வந்து நிற்பதன் காரணம் இந்த உதய சூரியனின் அற்புதக் காட்சியைக் கண்டு களிப்பதற்காகத்தான் என்று கூறினால் மிகையாகாது!

''செங்கதிர்த்தேவன் சிறந்த
ஒளியினைத் தேர்கின்றோம்!
அவன் எங்கள் அறிவினைத்
தூண்டி நடத்துக!''

என்று மகாகவி பாரதியார் பாடினாரே! அதை இந்த மலைமீது நின்று செங்கதிர்த் தேவனை சூரியபகவானைப் பார்த்துப் பதினாயிரம் முறை பாடிப் பாடி மகிழவேண்டும்!

இந்தக் கிடைத்தற்கரிய ''தெய்வ தரிசனம்'' செய்துவிட்டுக் கீழே இறங்க மனமில்லாமல் இறங்குவதற்கு முயல்கிறோம்! ''ஆகாகா!'' ''அடாடா!'' ஈழத்தீவின் அழகை, மரகதத் தீவின் மகிமையை, இலங்கைத் தீவின் எழிலை இங்கிருந்தல்லவா பார்த்து மகிழவேணும். ஈழநாடு முழுதுமே தெரிகிறது! ஈழத் தீவைச் சுற்றிக் கிடக்கும் நீலக் கடல் தெரிகிறது. அதன் பெரிய அலைகளில் சூரிய ஒளி பட்டதும் ஆகாயத்தில் ஈழநாடு மிதந்து பறப்பது போன்றல்லவா இருக்கிறது. அதன் அலைகள் தங்க நிறமாக மின்னுகின்றன. அது ஈழ நாட்டுக் கரையைச் சுற்றித் தங்க ஜரிகையைக் கட்டி அழகு பார்ப்பதுபோல் தோன்றுகிறது. எங்கு பார்த்தாலும் நீலக் கடல்! அதோ துறைமுகம்! கலங்கரை விளக்கம்! அதில் பல தேசத்துக் கப்பல்கள். ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கடுக்காகத் தெரியும் மலைச் சிகரங்கள். அதில் தவழ்ந்து செல்லும் மணி ஆறுகள்! சாதாரண மனிதர்களின் மனத்தைக்கூடக் கொள்ளை கொள்கின்றன!

பல நூற்றாண்டுகளாக இந்த மலையில் ஏறி மக்கள் இந்தக் காட்சியைக் கண்டு களித்துப் பரவசமடைந்து வருகிறார்கள் என்று அறிந்தேன்! அப்பொழுது என் இதயம் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் சென்றது. இந்தக் காட்சியை முதன் முதலில் கண்டுகளித்த புண்ணியவானின் ரஸிக உள்ளத்தை ஊடுருவிப் பார்த்தது. இந்தச் சிகரத்தின் எழிலை அந்த மனிதர் எவ்வளவு தூரம் அனுபவித்திருக்க வேண்டும். நாம் கண்ட இன்பத்தை உலகம் கண்டு அனுபவிக்க வேண்டும் என்ற பரந்த உள்ளம் அல்லவா இந்த மலையின் சிகரத்தையே புனிதமாக்கி விட்டது. அந்தப் புண்ணிய மூர்த்தியின் பொன்னடிக்கு என்னுடைய வணக்கங்கள்!

சரித்திர ஆராய்ச்சியாளர்கள் ஆசியா கண்டத்தின் சரித்திரத்தில் குறிப்பிட்டுவைக்க வேண்டிய மிக முக்கியமான மலை இந்த ஆதம் மலை என்கிறார்கள்! சீன தேசத்து யாத்ரீகனை பாஹியானும் மார்க்கபோலோவும் இந்த அதிசய மலையின் சிகரத்தில் வந்து நின்று மகிழ்ந்ததாகக் கூறுகிறார்கள்.

இம் மலையின் மீது அவர்கள் ஏறிச் செல்லாவிட்டால்தானே நாம் ஆச்சரியப்பட வேண்டும்! இந்த மலை மீது ஏறுவதற்குப் பொருத்தமான மாதங்கள் டிஸம்பர், ஏப்ரல் மாதங்கள் தான். ரத்தினபுரியிலிருந்து இந்த மலை உச்சிக்கு வருவது போலவே, 'ஹட்டன்' என்ற இடத்திலிருந்தும் இந்த மலைக்கு வரலாம். பொதுவாக ஹட்டன் வழிதான் சிறந்த வழி என்று சொல்லுகிறார்கள்.

உலக அதிசயங்களில் ஒன்றாகத் திகழ வேண்டிய இந்த மலையிலிருந்து இறங்கும் போது, ஏறும்போது இருந்த உற்சாகம் இல்லை. எதையோ ஒரு பொருளை எங்கேயோ வைத்து விட்டு வந்தது போன்ற ஏக்கம்தான் ஏற்படுகிறது. அடாடா! அந்த இன்ப ஏக்கத்தின் இனியரஸனையை அனுபவிக்கக் கொடுத்து வைத்தவர்கள் பாக்யசாலிகள்தான்!

*** *** ***

சிவன் ஒளிபாத மலைப் பாதையிலிருந்து திரும்பி மீண்டும் ரத்தினபுரி வழியாகவே கதிர்காமத்துக்குப் புறப்பட்டோம். வழியில் சிங்கள மக்களையும் அவர்கள் வேலை செய்து வரும் காட்சியையும் பார்த்தேன். பார்ப்பதற்குப் பரமசாதுவாகத் தோன்றும் இந்த மக்களா தமிழர்களை ஈழ நாட்டில் இருந்து விரட்டுவதற்கு முயலுகிறார்கள்? அப்படித் தமிழ் மக்கள் மீது இவர்களுக்குத் துவேஷம் ஏன் ஏற்பட வேண்டும்? யார் இந்தச் சிங்களவர்கள்? என்ற விவரங்களை எல்லாம் இதோ நம்முடன் தொடர்ந்து பிரயாணம் செய்துவரும் மட்டக்களப்புத் தமிழ் நண்பர் திரு நவம் கூறுகிறார் கேளுங்கள். (தொடரும்)


Remy
BORATED
TALCUM POWDER
Remy
SNOW
கிரிஜா
வசீகரத்திற்கும்,
வனப்பிற்கும்...
ரெமி
ஸ்னோ &
பவுடர்

# காசி மருதாயி

மருதாயிக்கு வயது எழுபத்தெட்டு. சேலத்தில் அவளைத் தெரியாதார் இல்லை. ஆனால் இப்போது அவளிட்ட யாரும்போகப் பயப்படுவார்கள். பேச ஆரம்பித்தால் கதை முடியவே முடியாது. எல்லாம் தன்னைப் பற்றியே. உலகில் பிறர் உண்டு என்பது அவளுக்கு நினைவே இருக்காது.

அவளுக்கு ஒரு மகள். தான் பிழைத்த தொழில் மகளுக்கு வேண்டாம் என்று குழந்தைக்குப் படிப்பு சொல்லி வைத்து விவாகமும் செய்வித்து விட்டாள். மருமகன் ஒரு சில்லறைக் கடை வைத்து ஜீவனம் செய்து வந்தான். அதற்கு வேண்டிய முதல் மட்டும் மருதாயி தந்தாள். "மறுபடியும் என்னிடம் பணத்துக்கு வரவேண்டாம். ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். யோக்கியமாக வாழுங்கள்" என்று சொல்லி மகளையும் மருமகனையும் ஆசீர்வதித்துத் தனிக் குடும்பம் நடத்தச் சொல்லி ஒரு வீடும் கடையும் அமைத்துத் தந்தாள்.

மருதாயினுடைய கிழப் பருவத்திலும் முகத்தில் பழைய அழகு மறைந்து போகவில்லை. சிறு வயதில் அந்த



வட்டத்திலெல்லாம் தாசி மருதாயி பிரசித்தி யடைந்திருந்தாள். உத்தியோகஸ்தர்களும், பெரிய வக்கீல்களும், வியாபாரச் சிங்கங்களும் அவளுடைய சிநேகம் அனுபவித்தவர்கள் கணக்கில்லை. பணம்சேர்த்துஎங்கேயோ வைத்திருக்கிறாள் என்று எல்லாரும் பேசுவார்கள். ஆனால் யாரிடம் எப்படி வைத்திருக்கிறாள் என்பது யாருக்கும் தெரியாது. அதை என்ன செய்யப்போகிறாள், யாருக்குக் கொடுத்து விட்டு மறைவாள் என்பதை ஒருவரும் அறியார். மருமகனுக்கும் மகளுக்கும் இதுவே பெரிய வேதனை.



வர வர அவர்கள் உள்ளத்தில் அந்த வேதனை வளர்ந்து, கிழவியிடம் ஒரு துவேஷத்தையே உண்டாக்கி விட்டது. ஆனால் அவர்கள் அதைக் காட்டிக் கொள்ளாமல் மறைக்க முயற்சி செய்தார்கள். என்னதான் மூடி வைத்தாலும் உள்ளத்தில் உள்ள வெறுப்பு மறையுமா? அதிலும் பெண்களின் கண்ணுக்குப் புலனாகாமல் போகாது. பெண்களின் உணர்ச்சி இந்த விஷயத்தில் ஆண்களைக் காட்டிலும் கூர்மை. கிழவிக்கு இது நன்றாகத் தெரிந்தது. அதற்குத் தொலையீடாக அவளுடைய உள்ளத்திலும் தன் மகளைக் கண்டால் வெறுப்பு தோன்றி வளர்ந்தது.

"இவளைச் செல்வமாகப் பள்ளிக்கூடத்தில் போட்டேன். என்னுடைய சனத் தொழில் என் மகளுக்கு வேண்டாம் என்று நல்ல மருமகனைத் தேடி விவாகம் செய்வித்தேன். ஆனால் அவன் உதவாக் கட்டையாக முடிந்தான்.

"இவளை அடக்கி ஆளும் ஆண்பிள்ளைக்குப் பதிலாக இவளுக்கு அடங்கிய அடிமையாகி விட்டான். என் பணத்துக்காக இருவரும் வேஷம் போடுகிறார்கள். இவர்களை ஏமாற்றித்தான் நான் கண்மூட வேண்டும்" என்று தனக்குள் தீர்மானித்தாள்.

**ராஜாஜி**

* * *

"என்ன டாக்டர்வாள்! எப்படியிருக்கிறது அம்மாள் உடம்பு? கவலையில்லையே?" என்றாள் அல்லி.

"நாடி மிக நன்றாக இருக்கிறது. ரத்தப் பையில் ஒரு கோளாறுமில்லை. கிழவியின் உயிருக்கு பயமில்லை" என்று சொன்னார் டாக்டர்.

"உம் வாயில் சர்க்கரை போடவேணும்!" என்றாள் அல்லியம்மை.

டாக்டர் எமகாதகர். தான் சொன்னது அல்லியம்மைக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்பதைத் தெரிந்துகொண்டார். பேச்சுக்கும், முகமும் கண்களும் காட்டிய வேஷத்துக்கும் ரொம்ப வேறுபாடு இருந்ததைக் கண்டார்; டாக்டர் தனியாக அல்லி யம்மையின் புருஷன் முனியப்பனைக்கண்டுபேசினார்.

"அம்மாளுடைய உடல் நிலை கொஞ்சம் அபாயம்தான். ஏதோ மருந்து தருகிறேன், பார்க்கலாம்" என்றார்.

"அப்படியா?" என்றான் முனியப்பன்.

அவன் முகத்தில் ஏதோ கவலை தோன்றிற்று. "கவலைப்படாதீர். புது மருந்துகள் வந்திருக்கின்றன. என்னால் ஆனது செய்வேன். ஆண்டவன் உதவியால் எல்லாம் சரிப்பட்டுப் போகும்" என்றார் டாக்டர்.

டாக்டர் அதிக தெய்வபக்தி உள்ளவர். சனிக்கிழமை பகலில் உபவாசம் இருந்து இரவு கோயிலுக்குப் போய் முருகனைக் கும்பிட்டு விட்டுத்தான் உணவு உண்பார்.

"உங்கள் தயவும் ஆண்டவன் அருளும் வேண்டும். ஏதாவது அத்தையம்மா சொன்னாளா?" என்று கேட்டான் முனியப்பன்.

"கிழவியின் தைரியம் குறையவேயில்லை, சிரித்துக்கொண்டே பேசுகிறாள். தன்னுடைய வியாதியின் நிலையை அவள் உணரவில்லை. நான் அவளுக்கு அதை எப்படி விளக்கிச் சொல்லலாம்? தைரியத்தைக் குறைப்பது வைத்திய முறையில்லை" என்றார் டாக்டர்.

"அது சரியே! ஆனால் ஏதாவது பேசினாளா? தன் சொத்துக்களுக்கு ஏதாவது எழுதி வைக்க வேண்டும் என்று நீங்கள் சொல்லவில்லையா?"

"அப்படியெல்லாம் பேசினால் நோய் அதிகமாகிவிடும். என்னுடைய காரியத்தின் வரம்பை மீறி இந்த விஷயங்களில்

நான் புகலாகாது'' என்றார் டாக்டர். இப்படிச் சொல்லிவிட்டு டாக்டர் தம் வீட்டுக்குத் திரும்பினார். அவருக்கு இப்போது விஷயம் புரிந்து விட்டது.

'ஐயோ! உலகம் இப்படியும் ஆயிற்று!' என்று யோசித்துக் கொண்டே சென்றார்.

* * *

எப்படியோ மருதாயிக்கு சொஸ்தமாகி விட்டது. டாக்டருக்கே வியப்பு. வேலைக்காரி பழனியக்காளுக்கு அடங்காத மகிழ்ச்சி. ''ஆண்டவனே! என் தாய் மருதாயியைக் காப்பாற்றினாய். என்னையும் காப்பாற்றினாய்!'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டே வீட்டைப் பெருக்குவாள்.

பழனியக்காள் மருதாயிக்கு வேலையாள், சமையற்காரி, துணை, எல்லாம். மகள் அல்லி அவ்வப்போது வருவாள். வந்து கொஞ்சம் நேரம் இருந்துவிட்டுப் போய் விடுவாள். அவளுக்கு அங்கே இருக்கப் பிடிக்கவில்லை. ஆனால் ஊரில் சிரிப்பார்கள் என்று பயந்து தாயாரைப் பார்க்க அவ்வப்போது போவாள். முனியப்பனும் போவான்.

''அத்தைக்கு எப்படி இன்னிக்கு?'' என்பான் முனியப்பன் மாமியிடம் வெகு பிரியம் போல்.

''பயப்படாதே! ரொம்ப நாள் இருக்க மாட்டேன்'' என்பாள் மருதாயி புன்சிரிப்பு சிரித்து.

''அப்படியெல்லாம் பேசலாகாது. வரவேண்டியது வரவேண்டியதுதான். அது அழைத்தால் வருமா? அதற்கு இஷ்டப்பட்ட போதுதான் வரும்'' என்று மருமகன் முனியப்பன் வேதாந்தம் பேசுவான்.

''நான் அழைத்தாலும் வராது, நீ அழைத்தாலுங்கூட வராது'' என்பாள் மருதாயி பேச்சில் பொடி வைத்து.

''இந்தக் கிழவி பழனியக்காளுக்கு வயதாகி விட்டது. நான் ஒரு ஆளை அனுப்புகிறேன். அவன் ரொம்ப நல்லவன். படிப்பும் உண்டு. புஸ்தகம் படித்துச் சொல்லி உங்களுக்குப் பொழுது போகும்படி செய்வான். ஏதாவது மாதம் ஒன்றுக்கு மூன்று ரூபாய் கொடுத்தால் போதும். சில்லறை வேலைகளை எல்லாம் ஒழுங்காகச் செய்வான். ரொம்ப யோக்கியன்'' என்றான் முனியப்பன்.

''சில்லறை வேலை செய்வான் என்கிறாய். யோக்கியன் என்றும் சொல்லுகிறாய்'' என்று சொல்லிச் சிரித்தாள் மருதாயி. ''ஆளை அனுப்பு, பார்க்கலாம்'' என்று முடித்தாள்.

''எனக்கு ஜோஸியம் கூடத் தெரியும்'' என்றான் முத்துக்குமாரன்.

''அப்படியா? என் கையைப் பார், பார்த்துச் சொல்'' என்றாள் மருதாயி.

''கை ரேகை பார்ப்பது ஜோஸியம் அல்ல. அது எனக்குத் தெரியாது. அது பித்தலாட்டம். பிறந்த தேதி, மாதம், நாழிகை எல்லாம் சொன்னால் ராசி பார்த்துச் சொல்லுவேன்'' என்றான் முத்துக்குமாரன்.

''உன்னைப் பார்த்தால் சபாபதி முதலியார் நினைவு வருகிறது. அவரைப் போலவே பேசுகிறாய். அவர் குரலும் உன் குரலும் ஒன்றே. முகமும் அவர் முகமே. நீ யார் அப்பனே, எந்த ஊர்?'' என்றாள் மருதாயி.

''எந்த சபாபதி முதலியார்? தேரடித் தெரு வக்கீல் சபாபதி முதலியாரா?'' என்றான் முத்துக்குமாரன்.

''அவர்தான். தங்கமான மனிதர். திடீரென்று இறந்து போனார். அவரைப் போலவே இருக்கிறாய் நீ'' என்றாள்.

''என் பாட்டனார்தான் அவர். அவர் வைத்துப்போன சொத்தெல்லாம் என் அண்ணார் சாராயம் குடித்துப் பாழாக்கி விட்டார். நான் இப்போது திண்டாடுகிறேன்'' என்றான் முத்துக்குமாரன்.

''என் அப்பனே! உன் பாட்டனார் என்னிடம் மிகப் பிரியமாக இருந்தார். ஏதாவது நல்ல புஸ்தகம் கொண்டு வந்து எனக்குப் படித்துச் சொல். கேட்கிறேன். என் மகள் அல்லியைப் பார். பள்ளிக்கூடத்தில் போட்டுப் படிப்புச் சொல்லி வைத்தேன். வந்து உட்கார்ந்து ஏதாவது எனக்குப் படித்துச் சொல்லுகிறாளா? இல்லை. அதற்கு நான் கொடுத்து வைக்கவில்லை'' என்று சொல்லிப் படுக்கையில் சாய்ந்தாள்.

முத்துக்குமாரன் ஏதோ யோசிக்கலானான்.

''என்ன யோசிக்கிறாய்?'' என்று கேட்டாள் மருதாயி.

''ஒன்றுமில்லை! உங்கள் ஜாதகக் குறிப்பு இருக்கிறதா?'' என்றான்.

மருதாயி சிரித்துக் கொண்டு ஒரு பழைய பாலக்காட்டு மரப் பெட்டியைத் திறந்து அதிலிருந்த ஒரு கிழிந்த காகிதத்தை எடுத்து முத்துக்குமாரனிடம் கொடுத்தாள்.

முத்துக்குமாரன் திறந்த பெட்டியை உற்றுப் பார்த்தான்.

''என்ன பார்க்கிறாய்? இதில் பணம் ஏதுமில்லை. என்னண்டை பணம் வைத்துக் கொண்டிருந்தால் இந்தக் காலத்தில் யாரேனும் வந்து கொலை செய்து விட்டு எல்லாம் தூக்கிக் கொண்டு போவார்கள். இதிலிருப்ப

# வருங்காலத்திற்கும்

## உபயோகமான ஒரு பரிசு

எந்த சமயத்திற்கும் சிறந்த பரிசாக ஒரு **பேவர் - லூபா சான்டோ** கடிகாரம் விளங்குவதுபோல வேறென்றும் அவ்வளவு சிறப்பாக இருக்காது. ஒவ்வொன்றும் ஸ்விஸ் கடியாரத் தொழில் திறமையின் நம்பிக்கைக்குச் சான்றாக விளங்குகிறது. ஒவ்வொருவரின் விருப்பத்திற்கும் தேவைக்கும் தகுந்தபடி—அழகான, சரியான நேரம் காட்டக்கூடிய—ஒரு சான்டோ கடிகாரம் இருக்கிறது. பல ஆண்டுகளுக்கும் பெருமை பனிக்கக்கூடிய ஒரு சிறந்த பரிசு.

# SANDOW






Ref:

ரூ. 186




# FAVRE-LEUBA

AND COMPANY PRIVATE LIMITED

பேவர் - லூபா & கோ., பிரைவேட் லிட்.

த. பெ. 845, பம்பாய் — த. பெ. 474, கல்கத்தா

Y. 80A

நீங்கள் இதுவரை அருந்தாத

# மிகச்சிறந்த காப்பி...

...ஆயினும் மிகவும் நயமான விலையில்!









ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த நறுமணமுள்ள பலமான பானத்தை அளிப்பதோடு, அதிக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது.

நீங்கள் காப்பி வாங்கும்பொழுது ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். அது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம், இதனுடைய நறுமணம் சிறிதும் குன்றாமல், காற்றுப் புகாத ½, 1, 3, 7, 14 & 20 ராத்தல் டின்களில் பாக் செய்யப்படுகின்றன. இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

**தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிட்.**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**




## Stanes

**ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள்**
**சுத்தமான காப்பி**

*எல்லோரும் வாங்கக்கூடிய நல்ல காப்பி*

சென்னை டெப்போ: தி யுனைடெட் காபி சப்ளை கம்பெனி லிமிடெட்
C/o மெஸர்ஸ் சவாய், 154, புரசவாக்கம் ஹைரோடு, வெப்பேரி, சென்னை

சென்னை ஸ்டாக்கிஸ்டுகள்: மெஸர்ஸ் சவாய், கன்பெக்ஷனர்ஸ் & கேட்டரர்ஸ் புரசவாக்கம் ஹைரோடு, வெப்பேரி, சென்னை

தெல்லாம் பழம் கடுதாசிகள்தான்'' என்றாள் மருதாயி.

அவள் எடுத்துக் கொடுத்த கிழிந்த கடுதாசி ஒரு ஜாதகக் குறிப்புதான். அதைப் பார்த்துவிட்டு முத்துக்குமாரன் ''இது மகள் அல்லி அம்மையின் ஜாதகம்போல் இருக்கிறது'' என்றான்.

''ஆமாம். என் ஜாதகம் இப்போது எங்கே கிடைக்கும்? இதைப் பார்த்தே ஏதாவது சொல்லு!'' என்றாள்.

''ரொம்ப நல்ல ஜாதகம்! ஆனால் நிதானமாகப் பிறகு நன்றாகப் பார்த்துச் சொல்லுகிறேன்'' என்று சொல்லி அதை மடித்துச் சொக்காய் ஜேபியில் வைத்துக் கொண்டான்.

*　　*　　*

''அம்மையே! உன் ஜாதகம்தான் தந்தாள். தன் ஜாதகம் இல்லை என்கிறாள்'' என்றான் முத்துக்குமாரன்.

''அதுவே போதும் அல்லவா? அதைப் பார்த்துத்தான் சொல்லலாமே. உனக்குத் தெரியாதது என்ன?'' என்றாள் அல்லியம்மை.

''என்னவோ தயங்குகிறாயே! 'காலம் நெருங்கி விட்டது. சர்க்கார் ஏதேதோ சட்டம் செய்திருக்கிறார்கள். சொத்தை யெல்லாம் வேண்டியவர்களுக்கு இருக்கும் போதே கொடுத்து விடுவது நல்லது' என்று கிழவிக்குச் சொல்லுவது தானே உன்னுடைய வேலை'' என்றான் முனியப்பன்.



முத்துக்குமாரனுக்கு ஏனோ இந்தக் காரியத்தில் மனம் செல்லவில்லை. மருதாயியைப் பார்த்துவிட்டு வந்தது முதல் அவன் உள்ளத்தில் என்னவோ வேதனையாக இருந்தது. 'பெரிய பாவத்தைச் செய்யாதே' என்று உள்ளத்தில் ஒரு பயம் புகுந்து குத்திக் கொண்டேயிருந்தது. ''இந்த எச்சில் ரூபாயைப் பெற்றுக் கொண்டு இந்தக் காரியம் செய்ய ஒப்புக் கொண்டேனே!'' என்று வருத்தப்பட்டு அந்த வீட்டுப் பக்கம் போகவே பயந்து விட்டான்.

*　　*　　*

''ஏன் அந்தப் பையன் முத்துக்குமாரன் வரவில்லை?'' என்று மருதாயி வேலைக்காரி பழனியக்காளைப் பார்த்துக் கேட்டாள்.

''ஏனோ! எனக்கு எப்படித் தெரியும்? இந்தக் காலத்தில் யாரையும் நம்பலாகாது, தாயே!'' என்றாள் வேலைக்காரி பழனியக்காள்.

''அவன் நல்லவன், பழனியக்கா! சபாபதியின் பேரன்'' என்றாள் மருதாயி.

''சபாபதியின் பேரனோ, யார் பேரனோ, அந்த முனியப்பனிடம் 'குசுகுசு' என்று என்னவோ பேசிக் கொண்டிருந்தான். எனக்குப் பிடிக்கவில்லை'' என்றாள் அந்தக் கிழவி.

மருதாயி பெருமூச்சு விட்டாள். ஒன்றும் பேசவில்லை.

*　　*　　*

இரண்டு ஆண்டுகளுக்குப் பின்.

''இந்தத் தடவை சொஸ்தமாவதற்கு வழியில்லை. இது நிச்சயம். இனிமேல் செய்வதைச் செய்யுங்கள்'' என்று சொல்லி விட்டார் பெரிய டாக்டர்.

அது முதல் அல்லியம்மை கருணையின்றிக் கிழவியை மிகத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தாள். ''சொத்தைப் பற்றியென்ன?'' என்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''சொத்தைப்பற்றியென்ன? உனக்குச் செய்வதையெல்லாம் செய்தாச்சு' என்றாள் மருதாயி மிகுந்த தீனசுவரத்தில்.

''என்ன செய்தாய் நீ எனக்கு?'' என்று கூச்சலிட்டாள் அல்லி. ''தாசி மகள் என்று ஊரார் என்னைச் சொல்லத்தான் நீ எனக்குச் செய்தது'' என்றாள் அல்லி அம்மை.

''தாசி மகள்தான் நீ. அதற்கு என்ன சந்தேகம்? ஆண்டவன் தாசியைத் தள்ளி விடுவானா? தள்ள மாட்டான். அவன் கருணைக்கு எல்லையில்லை'' என்றாள் மருதாயி. அவள் கண்களிலிருந்து பலபலவென்று கண்ணீர் பெருகிற்று.

''உன்னைக் கைவிடமாட்டான்! என்னைத்தான் அவனும் நீயும் கைவிடப் பார்க்கிறீர்கள்'' என்றாள் அல்லி.

''முனியப்பா! கைலாசநாதர் அநாதை இல்லத்தில் என்னைக் கொண்டு போய் விட்டுவிடுங்கள். உங்கள் மத்தியில் இருக்க என்னால் முடியவில்லை'' என்றாள் மருதாயி.

''ஒரு நாளும் உன்னை அநாதை இல்லத்துக்கு அனுப்ப முடியாது.

அறிவியல் மேதையான ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் வயலின் வாசிப்பதில் வல்லுநர். ஒருநாள் ஒரு விருந்தில் அவர் வயலின் வாசித்துக் கொண்டிருந்தார். ஹங்கேரி நாட்டைச் சேர்ந்த மிகப் பிரசித்தி பெற்ற ஹாஸ்ய நடிகர் பெரங்க் மோல்நார் என்பவர் இடையிடையே சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தார். ஐன்ஸ்டீனுக்கு ஒரு குறும்பு தோன்றியது. வயலின் வாசிப்பதை நிறுத்தி விட்டு, "ஏனையா, நான் வாசிக்கும் பொழுது சிரிக்கிறீர்கள்? நீங்கள் ஹாஸ்ய பாத்திரமேற்று நாடகங்களில் நடிக்கும்பொழுது நான் எப்பொழுதாவது சிரித்திருக்கிறேனா?" என்று கேட்டார்.

இங்கேதான் நீ சாக வேண்டும்!" என்றாள் அல்லி அம்மை.

முனியப்பன் "உங்களுக்கு என்ன குறை? ஏன் அநாதை இல்லத்தில் சாக வேண்டும்? நாங்கள் எல்லாம் இருக்கவில்லையா? ஊர் சிரிக்காதா?" என்றான்.

"முத்துக்குமாரனைக் கூப்பிடு" என்றாள் மருதாயி. வெளியில் திண்ணைமேல் இருந்த அவனும் வந்தான். கூடக்கோயில் அதிகாரியும் வந்தார். அவர் தான் அநாதை இல்லத்துக்குக் காப்பாளர்.

அவரைப் பார்த்து மருதாயி "அய்யனே! என்னை உங்கள் ஆசிரமத்துக்குக் கொண்டுபோய் விடுங்கள். நான் அங்கே உயிர் விடுவேன்! இங்கே இவர்கள் மத்தியில் என்னால் இருக்க முடியாது" என்று கெஞ்சினாள்.

கோயில் அதிகாரி சும்மா நின்றார்.

"இவர்களிடையில் எனக்குச் சாந்தியில்லை. ஏசுகிறார்கள். தொந்தரவு படுத்துகிறார்கள். வயிற்றில் பிறந்த சத்துரு இவள்" என்றாள்.

அல்லியின் முகம், லக்ஷணமாக இருந்த முகம் இப்போது அரக்கி முகம்போலாயிற்று. கோபாவேசம் முகங்களை அப்படி மாற்றுகிறது.

"எடுத்துப் போங்கள். அங்கேயே இவள் சாகட்டும்" என்றாள்.

* * *

அநாதை இல்லத்தில் ஒரு வாரத்துக்குப் பிறகு சிவராத்திரியன்று கிழவி மருதாயி உயிர் நீத்தாள். ஊரார் எல்லாம் வந்து கூடினார்கள். மயானத்துக்கும் ஜனங்கள் திரளாகக் கூடச் சென்றார்கள். அல்லியம்மையும் கதறிக் கதறி அழுதாள்.

கிழவி பழனியக்காளுடைய துக்கத்தைத் தணிப்பார் யாருமில்லை.

'வேலைக்காரிக்கு ஆயிரம் ரூபாய்; மகள் அல்லிக்கும் ஆயிரம் ரூபாய்; மீதி முப்பதினாயிரம் சுவாமி கைலாசநாதருக்கு' என்று மருதாயி உயில் எழுதி வைத்து ரிஜிஸ்தர் ஆபீசில் ஸீல்போட்டு வைத்திருந்தது பகிரங்கமாயிற்று. ஊரெல்லாம் இதே பேச்சு.

"என் வாழ்க்கை ஈனத் துறையில் கழிந்தது. ஆண்டவன் என்னைக் காப்பாற்ற வேண்டும். அடியில் கண்டது போக என் சொத்து முழுதும் கைலாசநாதருக்குச் சேரக் கடவது. என் புத்தி பூர்வமாக இதை எழுதி வைத்தேன். என் வயிற்றில் பிறந்த மகள் எனக்குச் சத்துருவாகி விட்டாள். அவளுக்கு ஆயிரம் ரூபாய். பல ஆண்டுகள் என் வீட்டில் வேலை செய்து வந்த ஏழைக் கிழவி பழனியக்காளுக்கு ஆயிரம் ரூபாய். மிகுதி எல்லாம் கைலாசநாதருக்கு. ஏழை அநாதைகளைக் காப்பாற்றுவதற்காகப் பயன்படவேண்டும். என்னுடைய பாபத்தை ஆண்டவன் பொறுத்துக் காப்பாற்ற வேண்டும்" என்று உயிலில் எழுதி வைத்திருந்தாள் தாசி மருதாயி.

*

"பெற்ற தாயைத் திட்டாதே. தாயே! எனக்கு எழுதி வைத்ததையும் நீயே எடுத்துக் கொள்" என்றாள் பழனியக்காள் அல்லியம்மை வீட்டில்.

"நீயும் உன் பணமும் மண்ணாய்ப் போக. எல்லாம் நீ செய்த சதிதான்!" என்றாள் அல்லி.

"அவளை ஏன் திட்டுகிறாய்? எல்லாம் நம்முடைய வினையின் பயன்!" என்றான் முனியப்பன்.

* * *

மருதாயினுடைய உயில் செல்லாது என்று ஒரு வருஷம் கோர்ட்டில் வழக்கு நடந்தது. முடிவில் உயில் ஊர்ஜிதம் என்று தீர்ப்பு தரப்பட்டது. தலையில் அடித்துக் கொண்டு அழுதாள் அல்லி.

"இருந்த சொத்தும் கோர்ட்டு வழக்கில் அழித்தேனே!" என்று விம்மி விம்மி அழுதாள்.

"அழாதே தாயே!" என்றாள் கிழவி பழனியக்காள். "எனக்குஎன்னத்துக்குப் பணம்? இந்தக் கட்டைக்கு ஒரு வேளைச் சோறு என் மருமகன் போடுவான். உனக்குச் சேர வேண்டிய சொத்து எனக்கு வேண்டாம். எனக்காக மருதாயி எழுதிவைத்திருக்கும் ரூபாயை முனியப்பன் எடுத்துக் கொள்ளட்டும். மறுபடியும் கடை வைத்துப் பிழையுங்கள்" என்றாள்.

# மாலவல்லியின் தியாகம்

பத்தாம் அத்தியாயம்

## நிழல் உருவம்!

களங்கமில்லாத வானத்தில் சஞ்சரிக்கும் சந்திரனின் பேரொளி, அலைகளின் சுருதி லயத்தில் மயங்கி நிற்கும் அமைதி நிறைந்த கடற்கரையை இன்ப லோகமாக்கி யிருந்தது. உலக சந்தடியிலிருந்து விலகி இந்த இன்ப லோகத்துக்கு வந்து மெய்ம்மறந்த நிலையில் இருக்கும் இளங் காதலர்களின் உள்ளத்தின் நிலையைப் பற்றி நாம் தான் என்ன சொல்ல முடியும்? பூதுகன் தான் என்ன சொல்ல முடியும்? அவனுக்கு மாலவல்லியைப் பற்றி ஏற்பட்ட சந்தேகங்கள் மேலும் மேலும் வளரத் தொடங்கின. வைகைமாலை அவன் விருப்பத்துக்கு மாறாக அவனைத் தன் மாளிகையிலிருந்து வெளியேற்றியது அவனுக்குச் சிறிது மன வருத்தத்தை உண்டாக்கியிருந்ததேயானாலும், மாலவல்லியைப் பற்றி ஒரு அந்தரங்க ரகசியத்தைத் தெரிந்து கொண்டதில் வைகைமாலை தன்னைத் துரிதப்படுத்தி யனுப்பியதும் நன்மைக்குத்தான் என்று அவன் மனத்தில் சிறிது ஆறுதல் ஏற்பட்டது. இந்தச் சமயத்தில் இளம் காதலர்களை நெருங்கி அவர்கள் இன்ப லோக யாத்திரைக்கு இடையூறு விளைவிக்க



அவன் விரும்பவில்லை. அதோடு அவனுடைய நினைவெல்லாம் அப்பொழுது வைகைமாலையின் மீதே இருந்தது. "எப்படியோ இந்த ரகசியத்தைத் தெரிந்து கொண்டு விட்டோம். இதைப் பற்றிப் பின்னர் பார்த்துக் கொள்வோம். இவர்கள் இன்பத்துக்குத் தடையாய் இருப்பானேன்?" என்று எண்ணி அப்பொழுதே அந்த இடத்திலிருந்து திரும்பி விடுவதற்கு நினைத்தான்.

சிறிது தூரத்தில் உட்கார்ந்திருந்த காதலர்கள் மெய்ம்மறந்து ஏதோ பேசிக்கொண்டிருந்தார்களே யொழிய, தங்களை வேறொரு உருவம் சிறிது தூரத்தில் நின்று கவனிப்பதைப் பற்றிய கவலையே அவர்களுக்கு ஏற்படவில்லை. சிறிது நேரம் அந்த இடத்திலிருந்தபடியே பார்த்துக் கொண்டிருந்த பூதுகன் திரும்பி நடக்க எத்தனித்த போது கலங்கரை விளக்கத்துக்குச் சமீபத்திலிருந்து யாரோ கனைப்பதுபோன்ற சத்தம் கேட்டது. அவன் திரும்புவதற்குள் அவ்வுருவம் அவன் மீது பாய்ந்தது.

பூதுகன் கண்ணிமைப் பொழுதில் இந்த உருவம் யாரென்று உணர்ந்து கொண்டான். அது பிக்ஷு வேடத்தில் இருக்கும் கலங்கமாலரையர் தான்!

பூதுகன் அப்படியே கலங்கமாலரையரைத் தூக்கிக் கடலில் எறிந்தான். அவரும் தம்மை ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டு அலையோடு வந்து கரையேறி அவனை ஆவேசமாகத் தாக்க வந்தார். மறுபடியும் அவருடைய காலையும், கையையும் பிடித்துத் தூக்கிக் கடலில் எறிந்தான். பாவம், பூதுகன் தானாகக் கற்றுக் கொண்ட இந்தப் புதுப் போர் முறையைக் கலங்கமாலரையர் எப்படி அறிந்துகொள்ள முடியும்?

அவர் ஒரு தடவையாவது பூதுகனைக் கடலில் தூக்கி எறிந்துவிட வேண்டும் என்றுதான் முயற்சித்தார். முதலில் கடலில் விழுந்த அவர்தான் மறுபடியும், மறுபடியும், கடலில் விழுந்து தவிக்க வேண்டியிருந்தது.

தங்களுக்கு அருகில் இவ்வளவு அமர்க்களம் நடப்பதைச் சிறிது தூரத்தில் உட்கார்ந்திருந்து, இந்த உலகத்தையே மறந்திருக்கும் இளங் காதலர்கள் எவ்வளவு நேரம் உணராமலிருக்க முடியும்? தண்ணீரில் ஏதோ விழுவதுபோன்ற சத்தம் இரண்டொரு முறை கேட்கவே அவர்கள் ஏதோ என்னவோ என்று தங்கள் பேச்சிலேயே கவனமாய் இருந்து விட்டனர். ஆனால் இடை இடையே ஏற்படும் உறுமலும், சிறு சிறு சத்தமும் இலேசாக அவர்கள் காதில் விழுந்து கவனத்தைக் கலைத்தன. அவர்கள் சட்டென்று திரும்பிப் பார்த்தபோதுதான் சிறிது தூரத்தில் பூதுகன் கலங்கமாலரையனைத் தூக்கி எட்டாவது முறையாகவோ, பத்தாவது முறையாகவோ கடலில் எறியப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தான்.

"மாலவல்லி! அதோ யாரோ சண்டை போட்டுக் கொள்ளுகிறார்கள். நான் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று கூறி மாலவல்லியின் அருகிலிருந்த ஆடவன் எழுந்தான்.

பிக்ஷுணிக் கோலத்திலிருந்த மாலவல்லி ஏதோ திகில் அடைந்தவள் போல் அந்த இடத்திலேயே தயங்கி நின்றாள். அந்த வாலிபன் பூதுகனுக்கும் மாலவரையருக்கும் ஆவேசமாகச் சண்டை நடக்கும் இடத்துக்கு வந்து, அவர்கள் இருவரையும் உற்று நோக்கினான். பாவம், ஒரு பௌத்த பிக்ஷு! அவரைத் தூக்கிக் கடலில் எறிந்து ஒரு குழந்தை பந்து விளையாடுவது போல விளையாடுகிறான் ஒரு வாலிபன். 'இது என்ன தகாத காரியம்? இந்த பிக்ஷு இந்த வாலிபனுக்கு என்ன தீங்கு இழைத்திருக்கக் கூடும்?' என்று மனத்தில் எண்ணிய அந்த வாலிபன் தன்னுடைய பலத்தையும் சிறிது காட்டி, பூதுகனிடமிருந்து அந்த புத்த பிக்ஷுவைக் காப்பாற்ற நினைத்தான்.

அந்த வீரன் அதிக நேரம் தாமதிக்கவில்லை. சட்டென்று பூதுகன் மீது பாய்ந்தான். இப்படித் திடீரென்று ஒரு வாலிபன் தங்கள் சண்டையில் குறுக்கிட்டுத் தன்மீது பாய்ந்து தாக்குவான் என்று பூதுகன் எதிர்பார்க்கவில்லை. அந்த வாலிபன் யாரென்று அவன் அறிந்து கொண்டான். பூதுகன் எதிர்பார்த்ததுதான் இது.

பூதுகன் சிறிது அபாயகரமான நிலையில்தா னிருந்தான். ஏனென்றால் இரு தாக்குதல்களையல்லவா அவன் சமாளிக்க வேண்டி இருந்தது! கலங்கமாலரையர் தமக்கு உதவியாக வேறொரு வீரன்



கிடைத்ததும் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பூதுகனை ஒரேயடியாக விழ்த்திவிட நினைத்தார். அதனால் அவரும் தம் இழந்த பலத்தை மறுபடியும் வரவழைத்துக் கொண்டு பூதுகன்மீது வேகமாகப் பாய்ந்தார்.

அந்தப் பௌத்த பிக்ஷு ஆவேசமாகப் பூதுகன் மீது பாய்வதைக் கண்டதும் தனியாகப் பூதுகனோடு சண்டையிட்டுக் கொண்டிருந்த வாலிபன் சட்டென்று அவனோடு சண்டை போடுவதை நிறுத்திக் கொண்டான். அந்தச் சமயம் சிறிது தூரத்தில் நின்று கொண்டிருந்த மாலவல்லியும் சண்டை நடக்கும் இடத்தை நோக்கி மெதுவாக வந்தாள்.



பூதுகனைத் தாக்கிய வாலிபன், அந்தப் பௌத்தத் துறவியும் அவனை மிக ஆவேசமாகத் தாக்க ஆரம்பித்ததும் பூதுகனைத் தாக்குவதை நிறுத்திக் கொண்டது. சிறிது ஆச்சர்யத்தை யளிக்கலாம். அந்த வாலிபனும் அந்தத் துறவி பூதுகனை அவ்வளவு ஆவேசத்தோடு தாக்குவதைக் கண்டு தான் ஆச்சர்யம் அடைந்து நின்று விட்டான். ஒரு துறவிக்கு இவ்வளவு ஆக்ரோஷமும் ஆவேசமும் ஏன் வர வேண்டும்? ஒரு துறவி இப்படி ஒருவனோடு சண்டை செய்வது தர்மத்துக்கு உகந்ததா? அன்பையும் அஹிம்சையையும் பொறுமையையும் உலகத்தில் ஏற்படுத்தி உலகையே சுவர்க்கமாக்க வேண்டும் என்று தன் வாழ்நாள் முழுவதையுமே ஒவ்வொரு ஜீவனின் நலனுக்காகவும் அர்ப்பணித்த புனிதனான அந்த போதிசத்வரின் புனித வழியைப் பின்பற்றும் சீடர்களா இவர்கள்?

அவ்வளவு நேரம் அவனுக்குப் பூதுகன் மீது எவ்வளவு கோபமும் ஆத்திரமும் இருந்ததோ அவ்வளவு கோபமும் ஆத்திரமும் பிக்ஷுவின் மீது திரும்பியது.

''போடு, கடலில், மறுபடியும் தூக்கிப் போடு கடலில். சீவர ஆடை அணிந்த இவனை என் கைகளால் நான் தாக்க விரும்பவில்லை. நீயே அவனைத் தூக்கிக் கடலில் போடு. அன்பு வழியை விட்டுப் பகை வெறி கொண்டிருக்கும் இத்தகைய துறவிகளைக் கடலில் எறிந்து கொன்று விடுவது உலகத்துக்கு எத்தனையோ நன்மையாக முடியும்'' என்று ஆத்திரத்துடன் மொழிந்தான் அந்த வாலிபன்.

பூதுகன் மாலரையரைத் தூக்கிக் கடலில் எறியும் சமயம், மாலவல்லி இடையே வந்து, ''நிறுத்துங்கள்! ஒரு ஜீவனைக் கடலில் எறிந்து கொல்வதினால் என்ன பலன் ஏற்பட்டு விடப் போகிறது? ததாகதரின் அன்புருவை மனத்தில் எண்ணி அவரை மன்னித்து விட்டு விடுங்கள். பிக்ஷு என்பதற்காக அல்ல; ஒரு மனிதனைக் கொன்ற பாபம் உங்களுக்கு ஏற்பட வேண்டாம் என்பதற்காகத்தான்'' என்று பூதுகனைப் பார்த்துச் சொன்னாள்.

பூதுகன் கலகலவென்று ஏளனச் சிரிப்பு சிரித்தான். கடற்கரையில் அந்தச் சிரிப்பும் ஏதோ அலையோசையைப் போலத்தானிருந்தது. ''பாபமா, எங்கள் தரும சூத்திரத்தில் அப்படி ஒரு வார்த்தையும் கிடையாது. நான் பூதுகன். சார்வக சமயத்தைச் சேர்ந்தவன். நீங்கள் எல்லாம் சொல்லிக் கொண்டு திரிவீர்களே, நாஸ்திகன், நாஸ்திகன் என்று. அந்த வகையைச் சேர்ந்தவன். பாபம், புண்ணியம், நரகம், சுவர்க்கம் இதில் எதுவுமே எங்களை வந்து அண்டாது என்ற கொள்கையுடையவன். நான் நாஸ்திகனாயினும் அன்பு, இரக்கம், பச்சாத்தாபம், இத்தகைய மனித உணர்ச்சிக்குப் புறம்பானவன் அல்ல. ஆனால் அத்தகைய உணர்ச்சிகளைப் பெரிது பண்ணி இந்த உலகத்தில் தீமைகளை வளர விடுவதில் எனக்கு விருப்பம் இல்லை. புத்தரை வணங்குகிறேன். ஆனால் இத்தகைய பாபாத்மாவை — வஞ்சகக்காரனைக் கடலில் எறிந்து ஒழித்து விடுவதுதான் நீங்கள் சொல்லும் புண்ணியம் என்று நினைக்கிறேன்'' என்றான்.

பூதுகனுடைய நீண்ட பருத்த புஜங்களிடையே கலங்கமாலரையர் சிக்கிக் கொண்டிருந்தார். அவருடைய கரங்கள் மேலெழும்பாவண்ணம் இடுக்கி

போல் தன் நீண்டகரங்களால் பிணைத்து உடும்பு போல் பிடித்துக் கொண்டிருந்தான் பூதுகன். உண்மையாகவே இந்தச் சந்தர்ப்பத்தில் தன் பலத்தையெல்லாம் இழந்திருந்த கலங்கமாலரையர் அப்பொழுது அவன் விட்டால் போதும், எப்படியாவது உயிர் தப்பி ஓடி விடலாம் என்றுதான் எண்ணினார்.

மாலரையரின் முகத்தைப் பார்க்க மாலவல்லிக்கும் அவளோடு நின்ற அந்த அழகான வாலிபனுக்கும் சிறிது மன இரக்கம் ஏற்பட்டது. ''இந்தத் துறவி உங்களை மறுபடியும் தாக்க வந்தது பிசகுதான். இது துறவிக்குரிய குணமும், கொள்கையும் ஆகாது. இப்படிப் பட்டவர்கள் துறவறத்துக்குரிய ஆடைகளை அணிந்து வெளிக் கிளம்புவதை நான் வெறுக்கிறேன். ஆனல் மறுபடியும் நீங்கள் இவரைக் கடலில் தள்ளி உயிர் வாங்க நினைப்பது கொடிது. எனக்காகவாவது அவரை விட்டு விடுங்கள். ஓடிப் போய் உயிர் வாழட்டும்'' என்ருன் அந்த வாலிபன்.

'' நான் இவனை விட்டு விடுகிறேன். ஆனல் இப்படிப்பட்ட துரோகி இப்படிப்பட்ட வேஷத்தில் இந்தக் காவிரிப் பூம் பட்டின புத்த விஹாரத்தில் ஒரு விநாடி கூட இருக்கக்கூடாது. நாளைய தினம் இவனை இந்தப் புத்த விஹாரத்தில் பார்க்க நேர்ந்தால் மறுபடியும் என்ன நடக்குமோ? இவன் உயிரை வாங்காமல் நான் விட மாட்டேன். நீங்களே கேளுங்கள், இங்கிருந்து இப்படியே இவன் ஓடி விடுகிருனு என்று. உங்களுக்காக இவனை உயிரோடு விட்டு விடுகிறேன்'' என்ருன் பூதுகன்.

அந்த வாலிபன் ''பிக்ஷுவே! நீங்கள் இங்கிருந்து ஓடி விடுகிறீர்களா? உண்மையாகவே உங்களைப் போன்றவர்கள் புத்தப் பள்ளிகளிலும், ஆலயங்களிலும் இருப்பது தவறு என்று நான் நினைக்கிறேன். நான் ஜைன சமயத்தைச் சேர்ந்தவன். இருப்பினும் புத்தரிடம் ஆழ்ந்த பக்தி உள்ளவன். நீங்கள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து போய் விடுவதுதான் நல்லது'' என்ருன்.

இடுக்கிப் பிடியில் தவித்துக் கொண்டிருந்த கலங்கமாலரையர் மெதுவான குரலில், ''சரி! நான் போய் விடுகிறேன்'' என்று கூறினர்.

பூதுகன் தன் பிடியைச் சிறிது தளர்த்தி, '' உன்னை விட்டு விடுகிறேன். ஏன் தெரியுமா? அந்தக் கொடும்பாளூர் வீரர்கள் உன்னைக் கொன்று அடைய வேண்டிய பாக்கியத்தை நான் அடைய வேண்டாமென்பதற்காகத்தான்! இன்னொரு விஷயத்தையும் நினைவில் வைத்துக் கொள். 'மறுபடியும் சோழ சாம்ராஜ்யம் இந்நாட்டில் மகோன்னத நிலையை அடையப் போவதை உன்னலோ என்னலோ தடுக்க முடியாது என்பதுதான் அது. ஏனென்ருல் மக்களின் மனநிலை அப்படி இருக்கிறது'' என்று சொல்லி அவரை விடுவித்தான்.

உயிர் பிழைத்த கலங்கமாலரையர் அவமானம் மிக்கவராய் எவ்வித வார்த்தையும் சொல்லாமல் தலைகுனிந்த வண்ணம் மெதுவாக நடந்தார்.

அந்த பௌத்தபிக்ஷுவுக்கும், பூதுகனுக்கும் இத்தகைய கொடூரமான சண்டை நடப்பதற்குக் காரணம் என்னவென்று அந்த வாலிபனுக்குத் தெரியாது. அதைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்தாலும் அவர்கள் இருவரும் சண்டை போட்டுக்



கொண்டிருக்கும் போது கேட்பதற்கு அவகாசம் இல்லாதிருந்தது. ஆரம்பத்தில் பிக்ஷுவிடம் அவனுக்குச் சிறிது இரக்கம் ஏற்பட்டிருந்தாலும் பின்னல் அந்த பிக்ஷு பூதுகனை முரட்டுத்தனமாகப் பாய்ந்து தாக்க நினைத்த போது சட்டென்று அவன் மனத்தில் ஒரு வெறுப்பு தோன்றி விட்டது. அவன் சாதாரண பிக்ஷு அல்ல என்ற முடிவுக்கு வந்து விட்டான் அந்த வாலிபன். அதோடு மட்டுமல்ல; கடைசியாக அந்த பௌத்த பிக்ஷுவைத் தன் பிடியிலிருந்து விடும்போது, பூதுகன் சொல்லிய வார்த்தைகள் அவனுக்குச் சிறிது ஆச்சரியத்தை அளித்ததோடு அவர்களுக்குள் ஏற்பட்டுள்ள சச்சரவு எதன் காரணமாக இருக்கும் என்பதையும் அவனல் ஒரளவு உணர்ந்து கொள்வதற்கு அனுகூலமாயிருந்தது.

மாலவல்லி அந்த வாலிபனுக்கு நெருங்கினாற் போல் நின்று கொண்டிருந்தாள். சிறிது நேரத்துக்கு முன்னால் வைகைமாலையின் வீட்டில் கண்ட அந்த இளைஞன் பூதுகனை மறுபடியும் கடற்கரையில் தான் ஒரு வாலிபரோடு தனித்திருக்கும் நேரத்தில் எதிர்பாராத விதமாகக் காண நேர்ந்தது, பிக்ஷுணிக் கோலத்திலிருந்த அவளுக்கு வெட்கமாகவும் தலை இறக்கமாகவும் தானிருந்தது. அவன் தன்னுடைய தோழி வைகைமாலையின் காதலன் என்பது அவளுக்கு நன்கு தெரியும். அவனுடைய குணம், கொள்கை இவைகளைப் பற்றியெல்லாம் அடிக்கடி வைகைமாலை சொல்லக் கேட்டிருக்கிறாள். நாஸ்திகப் பிரசாரகனை அவன் புத்த பிக்ஷுணியாகிய தன்னை நடுநிசியில் ஒரு வாலிபனோடு தனித்திருந்ததைப் பார்த்து விட்டது தனக்கு மாத்திரம் அல்லாமல், புத்த சமயத்துக்கும், புத்த சங்கத்துக்கும் எத்தகைய இழுக்கை ஏற்படுத்தும் என்பதை யெண்ணி அவள் நடுங்கினாள்.

அமைதி நிறைந்த அந்தக் கடற்கரை நிலவொளியில் அம்மூவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்த வண்ணமே சிறிது நேரம் மௌனமாக நின்றனர். பூதுகன் பேச ஆரம்பித்தான். அவனுடைய பேச்சில் கேலித்தனம் மிகுந்திருந்தது. அவன் மாலவல்லிக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருக்கும் வாலிபனைப் பார்த்து, "பகவதியை எனக்கு நன்றாகத் தெரியும். தங்களைத்தான் தெரியாது. பகவதியின் மனம் புத்த பெருமானின் களங்கமற்ற ரூப சௌந்தரியத்தில்தான் பக்தியும், பற்றும் கொண்டிருக்கிறது என்று நினைத்தேன். தங்களைப் போன்ற ஒரு யௌவன வாலிபரிடமும் அவள் மனம் லயித்திருப்பதைக் கண்டு எனக்கு மகிழ்ச்சி. இதைக் கேட்டால் என்னுடைய காதலி வைகைமாலையும் சந்தோஷப்படுவாள். வீணாக இந்தச் சீவர ஆடைக்குத் தன் மனத்தையும் யௌவனத்தையும், எழிலையும் பலி கொடுக்காமல் இவ்வுலகில் ஒவ்வொருவரும் அனுபவிப்பதற்காகத் தேங்கிக் கிடக்கும் இன்பத்தில் திளைத்து அனுபவிக்க வேண்டும் என்ற பரந்த நோக்கம் பகவதிக்கு ஏற்பட்டதிலும் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. போகட்டும்! நான் யாரென்று தாங்கள் தெரிந்து கொண்டிருக்கலாம். ஆனால் தாங்கள் யாரென்று நான் அறிந்து கொள்ளவில்லையே?"

அந்த வாலிபனுக்கும் அப்பொழுது சட்டென்று பதில் சொல்ல முடியாதபடி சிறிது சங்கடம் ஏற்பட்டது. அவன் மாலவல்லியின் முகத்தைப் பார்த்தான். ஆனால் அவளோ மன அச்சத்தினால் கவிழ்ந்திருந்த தலையை நிமிர்த்தாமலே நின்று கொண்டிருந்தாள். பூதுகன் அவ்விருவருடைய முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

இளம் வாலிபன் சிறிது தைரியம் கொண்டவனாகப் பேசத் தொடங்கினான். "நான் கங்கபாடியைச் சேர்ந்தவன். என் பெயர் வீர விடங்கன். ஒரு சாதாரணப் போர்வீரன்" என்றான்.

பூதுகன் சிரித்துக்கொண்டே, "நீங்கள் கங்கநாட்டைச் சேர்ந்தவரா? மிகவும் சந்தோஷம். சாதாரணப் போர்வீரராகயிருந்தாலென்ன? இராஜகுமாரர்கள் கூட இவ்வளவு அழகாகவும் கம்பீரமாகவும் இருப்பதில்லையே? நான்கூட உங்களைப் பார்த்ததும் நீங்கள் ராஜகுமாரராய்த்தான் இருக்க வேண்டுமென்று நினைத்தேன். தமிழகத்தின் முக்கால் பகுதியைத் தன் ஆட்சியின்கீழ் வைத்திருக்கும் பல்லவ சக்கரவர்த்திக்கு உங்கள் அரசர் ராஜசிம்மர் உற்ற நண்பர் அல்லவா? எனக்கு ஒரு ஆச்சர்யம்! ஜைன சமயத்தைச் சேர்ந்த உங்களுக்குப் புத்த சங்கத்தைச் சேர்ந்த இந்த மங்கையிடம் காதல் ஏற்பட்டது தான் விந்தை — இதிலிருந்து தெரியவில்லையா? கடவுளின் தோட்டத்தில் அவருக்கு அர்ப்பணிப்பதற்காக மலர்ந்த மலராகவே இருந்தாலும் அந்த மலர் தேனை ஏந்தி வண்டை அழைக்காமல் இருப்பதில்லை; அழகு, அன்பு, காதல் இவை எல்லாம் சாதி, மதம், கொள்கை, அந்தஸ்து இவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவை என்று. இத்தகைய அந்தரங்கமான காதல் இருக்கும் போது இவள் ஏன் இப்படித் துறவுக் கோலம் பூண்டு திரிய வேண்டும்? நீங்கள் ஏன் கங்கபாடியிலிருந்து காவிரிப் பூம் பட்டினம் வரையில் வர வேண்டும்? இவளை ஏதேனும் ஒரு முறையில் விவாகம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தக் கூடாதா?" என்றான்.

வீரவிடங்கன் என்னும் அவ்வாலிபன் பூதுகனின் வார்த்தைக்கு எவ்வித பதிலும் சொல்லவில்லை. சிறிது தயங்கியபடியே நின்றான். அப்பொழுதுதான் மாலவல்லிக்குப் பேசுவதற்குச் சிறிது தைரியம் ஏற்பட்டது. "எங்கள் விவாக விஷயத்தைப் பற்றி நாங்களே யோசித்து முடிவு செய்து கொள்கிறோம். நாங்கள் இருவரும் சந்திப்பதைப் பார்த்ததினாலேயே நீங்கள் இவ்வித முடிவுக்கு வந்து யோசனை

## பிரகாசமுள்ள வெண்ணிறப் பற்கள் மட்டுமல்ல அத்துடன் ஆரோக்கியமான ஈறுகளும்!

ஈறுகளை கெட்டியாகவும், ஆரோக்கியமாகவும் வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப்பற்பசையில் டாக்டர் ஆர். ஜே. போர்ஹான் டி. டி. எஸ் அவர்கள் பக்குவப்படுத்திய முறையில் விசேஷ காரப் பொருள் கலக்கப் படுகிறது. ரத்தக் கசிவு வீங்கிய ஈறு புண்ணானதும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பிவிடும் ஆனபடியால் இந்த இரட்டைக் காரியமுள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்து பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவரெனப் பெருமைப் படலாம்.

தந்த வைத்தியரால் செய்யப்பட்ட டூத்பேஸ்ட்

**போர்ஹான்ஸ்**
ஈறுகளுக்குகந்தது




H.11

சொல்லத் தொடங்கி யிருக்கிறீர்கள். அது தவறு — நீங்கள் சொல்லியபடி எங்கள் இருவருக்கும் உள்ள சம்பந்தத்தை நான் மறுக்கத் தயாராக இல்லை. அதனால் எங்களுக்கு யோசனை சொல்ல ஒருவர் வேண்டுமென்று நாங்கள் நினைக்கவில்லை. மன்னிக்க வேண்டும்! தயவுசெய்து எங்கள் விவாக விஷயமாகத் தாங்கள் யோசனை கூற வேண்டாம்'' என்றாள்.

''ஆமாம்! அவள் விருப்பம் போல் தான் என் விருப்பமும். எங்களுடைய அந்தரங்கமான வாழ்க்கையில் பிறருடைய யோசனைகளுக்கு இடமே இல்லை. மன்னிக்கவும். உங்களுடைய நட்புக் கிடைத்ததில் எனக்கு மிகவும் சந்தோஷம். ஆனால் எங்களுடைய விவகாரம் தவிர மற்ற எதைப் பற்றியும் உங்களோடு பேசவோ, அல்லது உங்கள் யோசனையைக் கேட்கவோ நான் சித்தமாக இருக்கிறேன்'' என்றான் வீரவிடங்கன்.

பூதுகன் தனக்குள் சிரித்துக் கொண்டே, ''உண்மைதான். பிறர் காதல் விவகாரங்களைப் பற்றிப் பேச நானும் விரும்ப மாட்டேன். ஆனால் சில சமயங்களில் இந்தப் பொல்லாத காதல், மதம், அரசாங்கம், தேசம், போர் முதலியவைகளோடு தன்னைப் பிணைத்துக் கொண்டு விடுகிறது. காதலினால் மதம் பாழாகிறது. காதலினால் சாம்ராஜ்யங்கள் பாழாகின்றன; சில சாம்ராஜ்யங்கள் நிலைநிறுத்தப்படுகின்றன. காதலினால் எவ்வளவு மன்னாதி மன்னர்களெல்லாம் ஒருவரோடு ஒருவர் போரிட்டு மாண்டிருக்கிறார்கள் என்பதைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. உங்கள் காதல் விவகாரங்களில் நான் தலையிட விரும்பவில்லை. ஆனாலும் இதையெல்லாம் சொல்லலாம் என்ற ஆசையில் சொல்லி விட்டேன். உங்கள் காதல் எந்த சாம்ராஜ்யத்தை அழிப்பதற்காக இருந்தாலும், எந்த சாம்ராஜ்யத்தை நிலைநிறுத்துவதற்காக இருந்தாலும், எந்த தருமத்தைக் குலைப்பதற்காக இருந்தாலும், எந்த தருமத்தை நிலை நாட்டுவதற்காக இருந்தாலும் அது நீடூழி வாழட்டும்! அதைப்பற்றி இனி மேல் நான் பேசவில்லை'' என்றான்.

''எந்த சாம்ராஜ்யத்தைக் குலைப்பதற்காகவோ அல்லது நிலைநிறுத்துவதற்காகவோ, எந்த தருமத்தை குலைப்பதற்காகவோ அல்லது எந்த தருமத்தை நிலைநிறுத்துவதற்காகவோ ஏற்பட்டதில்லை எங்கள் காதல்......'' என்றான் வீரவிடங்கன்.

''மிக்க மகிழ்ச்சி. உங்கள் காதல்— காதல் சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்காகவும் காதல் தருமத்தை நிலைநிறுத்துவதற்காகவுமே ஏற்பட்டது என்று சொல்லி இருந்தால் இன்னும் அழகாக இருந்திருக்கும்'' என்றான் பூதுகன் சிரித்துக் கொண்டே.



''டேய், ராமு தனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை நாளைக்கே கொடுக்க வேண்டும் என்று சொல்லுறான்......எனக்குப் பெரிய கவலையாக இருக்கிறது.''

''முடியாதென்று சொல்லி விடு......அந்தக் கவலை அவனிடமே போய்ச் சேர்ந்து விடும்!''

''உங்களைப்போல் மனம் விட்டுப் பேசும் நண்பர்களைக் கண்டால் எனக்கு மிகவும் பிடிக்கும்'' என்று கூறினான் வீரவிடங்கன்.

''உங்களுக்குப் பிடிக்கலாம். ஆனால் இந்தப் பெண்களுக்கே மனம் விட்டுப் பேசுபவர்களைக் கண்டால் பிடிக்காது'' என்றான் பூதுகன் மாலவல்லியைப் பார்த்துக்கொண்டு.

''மனம் விட்டுப் பேசுபவர்களைக் கண்டால் பிடிக்காது என்று அர்த்தமில்லை. மனம் விட்டு எல்லாவற்றையுமே பேச நினைப்பவர்களைக் கண்டால் தான் பெண்களுக்குப் பிடிப்பதில்லை'' என்று சொன்னாள் மாலவல்லி சிறிது கோபம் நிறைந்த குரலில்.

''நண்பரே! இப்படி ஒரு வார்த்தையைக் கூடப் பொறுமையுடன் சகித்துக் கொள்ள முடியாத பெண்களைப் பௌத்த சங்கத்தில் சேர்த்துக்கொள்ளுகிறார்கள், பாருங்கள்! அதுதான் விநோதம். அதிலும் பிசகில்லை. குண்டலகேசியைப் போல் எவரிடத்திலும் வாதாடி வெற்றி கொள்ளும் பெண்கள் தானே அவர்களுக்கு வேண்டியிருக்கிறது? ஆனால் குண்டலகேசியைப் போல் தன் கணவனையே மலையிலிருந்து உருட்டித் தள்ளும் குணம் எல்லாப்

பெண்களிடமும் குடிகொள்ளாதிருந்தால் மிகவும் உத்தமம்தான்'' என்றான் பூதுகன் நகைத்தபடியே.

''ஏன்? அவள் தன் கணவனைக்கொன்றதில் என்ன பிசகு இருக்கிறது? தன்னைத் தாக்க வந்த பகைவையும் கொல்லலாம் என்று சாஸ்திரம் சொல்கிறது. பெரிய கள்வனை மணந்துகொண்ட குண்டலகேசி அவனைக் கள்வனென்று பாராமல் கணவன் என்பதற்காக எவ்வளவோ அன்பாக நடந்து கொண்டாள். அப்படி இருக்கையில் அவள் அணிந்து கொண்டிருந்த ஆபரணத்துக்காக அவளை மலை உச்சியிலிருந்து தள்ளிவிட நினைத்தான், கணவன் என்று சொல்லிக் கொள்ளும் அந்த மகா பாவி. இத்தகைய கொடுமையாளனை உலகத்தில் வைத்திருப்பது பிசகு எனக் கருதி, அவன் தன்னை மலையிலிருந்து தள்ளி விடுவதற்கு முன்னால் குண்டலகேசி அவனை மலையிலிருந்து தள்ளி விட்டாள். கணவனைக் கொன்றேம் என்பதற்குப் பிராயச்சித்தமாக புத்தபிக்ஷுணியாகி, ததாகதரின் திருப்பாத கமலங்களையே சரணென்று நம்பி விட்டாள் அவள்'' என்றாள் மாலவல்லி.

இதைக் கேட்ட வீரவிடங்கன் சிறிது ஆத்திரம் கொண்டவனாக, ''தன் கணவனையே கொன்ற ஒருத்தியின் பாபத்துக்குப் பிராயச்சித்தம் பௌத்த சங்கத்தில் பிக்ஷுணியாகச் சேர்ந்து விடுவதுதானா? இதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. கணவனைக் கொல்வதைவிட உலகத்தில் மகா பாதகம் ஏதேனும் உண்டா? இது அன்பு வழிக்கும், அஹிம்சா தருமத்துக்கும் எவ்வளவோ முரணானது. எங்களுடைய ஜைன சமாஜத்துள் இத்தகைய பெண்களுக்கு இடமே இருக்காது. புத்த சங்கத்துள் பிக்ஷுணிகளுக்கு அளிக்கப்படும் உரிமைகளும், பதவிகளும் ஜைன சமயத்தைச் சேர்ந்த பெண்ணுக்குக் கொடுக்கப்படுவதில்லை. முதலில் தன்னுடைய மண வாழ்க்கையில் ஜைன சமயத்தைச் சேர்ந்தவளாக இருந்த குண்டலகேசி தன்னுடைய அகிருத்தியங்களுக்குப் பின், அச் சமயத்தினர் தன்னை விரும்பவில்லை, தனக்கு சன்னியாச யோக்கியதை அளிக்கவில்லை என்பதற்காகவே புத்தசமயத்தில் சேர்ந்தாள்'' என்றான்.

வீரவிடங்கனின் வார்த்தை மாலவல்லிக்குச் சிறிது ஆச்சர்யத்தை அளித்தது. ''நீங்கள் தயவுசெய்து என் எதிரில் புத்த சமயத்தைப் பற்றிப் பரிகசிக்க வேண்டாம். நான் அப்புறம் ஜைன சமயத்தைப் பற்றி ஏதேனும் சொன்னால் மனத்தாங்கல் படுவீர்கள். ஜீவ இம்சை செய்யக் கூடாதென்று மயில் பீலியால் தரையைத் துடைத்துக் கொண்டே நடந்து செல்லும் ஆடையணிந்து கொள்ளாத திகம்பரர்களைப் பற்றி நான் சொல்லப் புகுந்தால் மிகவும் வெட்கக்கேடாக முடியும். உடம்பில் உள்ள அழுக்கில் கிருமிகள் இருக்கும்; தேய்த்துக் குளித்தால் அவை இறந்து விடும் என்று குளிக்காமல் அஹிம்சா தர்மம் பேசி உடல் நாற்றம் எடுக்க ஊரில் திரிபவர்களைப் பற்றி நான் சொல்ல வேண்டுமா?''

வீரவிடங்கனுக்கும், மாலவல்லிக்கும் மத சம்பந்தமான வாக்குவாதம் ஏற்பட்டு விட்டதைப் பார்த்துப் பூதுகன் சிரித்தான். அவனுக்குச் சரியான சமயம் வாய்த்தது. ''பார்த்தீர்களா? 'எந்த சாம்ராஜ்யத்தைக் குலைப்பதற்காகவோ, நிலைநிறுத்துவதற்காகவோ எந்த தருமத்தைக் குலைப்பதற்காகவோ நிலைநிறுத்துவதற்காகவோ எங்களுக்குள் காதல் ஏற்படவில்லை' யென்று சொன்னீர்களே? இப்பொழுது சகிப்புத்தன்மை இல்லாமல் அவரவர்கள் கொள்கைகளை அவரவர்கள் உயர்வாகப் பேசித் தர்க்கம் செய்கிறீர்கள் — பார்த்தீர்களா? காதலுக்காக மனிதன் மற்ற எல்லாவற்றையும் எளிதில் துறந்துவிட முடிகிறதில்லை. அப்படித் துறந்தால் எவ்வளவோ விஷயங்கள் பாதிக்கப்படுகின்றன. இவ்வளவு காதலோடு இருக்கிறீர்களே? உங்கள் சமய உணர்ச்சி உங்களை விட்டு மாறி விட்டதா?'' என்றான் பூதுகன்.

வீரவிடங்கனும் மாலவல்லியும் பூதுகனின் வார்த்தையைக் கேட்டு வெட்கம் மிகுந்த நிலையில் நின்றனர். பூதுகன் மேலும் அவர்கள் நிலையைச் சங்கடத்துக்கு உள்ளாக்கப் பிரியம் இல்லாதவன் போல், ''சரி, நாழிகையாகி விட்டது. போதும். இப்படியே இங்கு நின்று பேசிக் கொண்டிருந்தால் பொழுதுகூட விடிந்து விடும். பகவதி இப்போதே பௌத்த விஹாரத்துக்குச் சென்று விடுவது நல்லதல்லவா?'' என்றான்.

அவர்களும் அப்பொழுதுதான் சுய உணர்ச்சி பெற்றவர்கள் போல அவ்விடமிருந்து மெதுவாக நடந்தார்கள். பூதுகனுக்கு மாலவல்லி விஹாரத்துக்குச் சென்றபின் வீரவிடங்கன் எங்கு செல்கிறான் என்று அறிந்து கொள்ள ஆவல். அவ்விருவரையும் வழியனுப்புவது போல அவர்களைப் பின் தொடர்ந்து மெதுவாக நடந்தான். அங்கிருந்த விஹாரத்திலுள்ள சம்பாதிவனம் சமீபத்தில்தான் இருந்தது.

அவர்கள் அந்த வனத்தை நெருங்கியதும் அவ் வனத்துக்கு வெளிப்புறம் இருந்த மரத்தில் ஒரு குதிரை கட்டப்பட்டுக் கம்பீரமாக நின்றுகொண்டிருந்தது.



"என்ன இது? இவர் ஏன் இப்படிக் கையைக் கூப்பியபடியே போகிறார்?"
"அவர் இந்த வட்டாரத்திலே தேர்தலுக்கு நிற்கிறார்!"

அந்தக் குதிரையைப் பார்த்ததுமே பூதுகனுக்கு அந்தக் குதிரைக் குரியவன் வீரவிடங்கன்தான் என்பது விளங்கி விட்டது. வீரவிடங்கன் குதிரையின் முதுகில் தட்டி விட்டு மரத்தோடு பிணைத்திருந்த கடிவாள வளரை அவிழ்த்தான். மாலவல்லி தன் காதலனின் பிரிவுக்குரிய நேரம் நெருங்கி விட்டதையறிந்து சிறிது மனவியாகூலம் அடைந்தவள் போல் ஒரு புறமாக ஒதுங்கி நின்றாள். பூதுகன் கங்கபாடியிலிருந்து வந்திருக்கும் வீரவிடங்கன் எங்கு தங்கி இருக்கிறான் என்பதை அறிந்து கொள்ள ஆசைப்பட்டவன் போல் "நீங்கள் இந்தச் சோழ நாட்டில் எங்கு தங்கியிருக்கிறீர்கள் என்று நான் அறிந்து கொள்ளலாமா?" என்று கேட்டான்.

வீரவிடங்கன் சற்றுத் தயங்கியவனாக, "இங்கு இந்த நாட்டில் தங்குவதற்கு என்று ஒரு இடம் வேண்டுமா? பல ஊர்களைச் சுற்றிக் கொண்டு இங்கு வருவேன்" என்றான்.

"அப்படியென்றால் இன்னும் சில நாட்கள் இங்கு தங்குவீர்கள் என்று நினைக்கிறேன்!" என்றான் பூதுகன்.

"ஆம். இந்திர விழா வரையில் இந்த ஊரில் இருப்பேன், மருவூர்ப்பாக்கத்தில் எங்கள் நாட்டிலிருந்து வந்திருக்கும் வர்த்தகர் ஒருவரோடு தங்கி இருக்கிறேன்" என்றான்.

"சரிதான். நாளை மறுதினம் இந்திர விழா. நாளைய தினம் இரவும் நீங்கள் இருவரும் சந்திப்பீர்கள் என்று நினைக்கிறேன். ஆனால் இந்திரவிழாவன்று இந்தக் கடற்கரை நீங்கள் தனிமையில் சந்திப்பதற்கு இடம் தராது. இந்திர விழாவன்று கூட்டமும் கேளிக்கையும் தானே அதிகமாக இருக்கும்?" என்று சொன்னான் பூதுகன்.

வீரவிடங்கனும் மாலவல்லியும் இதற்கு எந்த விதமான பதிலும் சொல்லவில்லை.

வீரவிடங்கன் குதிரைமேல் பாய்ந்து ஏறி உட்கார்ந்து மாலவல்லியிடம், 'போய் வருகிறேன்' என்று சொல்வது போல் தலையை அசைத்தான். அவளும் துயரம் தோய்ந்த முகத்தோடு அவனுக்கு விடையளிப்பது போல் தலையை அசைத்தாள். எஜமானரின் உத்தரவை எதிர்பார்ப்பதுபோல் புறப்படும் வேகத்தில் நின்று கொண்டிருந்தது அந்தக் குதிரை. "தங்களைச் சந்தித்ததில் மகிழ்ச்சி. இனி அடிக்கடி சந்திப்போம்" என்று பூதுகனுக்குத் தன் வணக்கத்தைச் செலுத்திவிட்டு மாலவல்லியிடம் விடைபெற்றுக் கொண்டு குதிரையைத் தட்டி விட்டான் அவ்வீர வாலிபன்.

அச்சமயம் வீரவிடங்கனின் குதிரை எந்த மரத்தில் கட்டப்பட்டிருந்ததோ அந்த மரத்தடியின் நிழலில் நிழலோடு நிழலாக ஒதுங்கி ஒளிந்திருந்த ஒரு உருவம் அவர்கள் மூவரும் மூன்று பாதைகளில் சென்று மறைந்த பின் வெளியேறி, அந்தச் சம்பாதி வனத்துக்குள் அதிவேகமாக மாலவல்லியைத் தொடர்ந்து சென்று மறைந்ததை யார் அறிந்திருக்க முடியும்? (தொடரும்)

# முயற்சிக்கு அவசியமானது சக்தி

நீங்கள் சரீர தளர்ச்சி அடையாமலிருந்தால் இன்னும் அதிகமான வேலைகளைச் செய்யக்கூடும். நீங்கள் சரீர தளர்ச்சி அடைவதற்குக் காரணம் என்னவென்றால் உங்கள் சரீரமும் மூளையும் சக்தியற்றவைகளாக இருப்பதால்தான். அவை சக்தியற்றவைகளாக இருப்பதற்குக் காரணம் உங்கள் ரத்தத்தில் சர்க்கரையின் அளவு மிகவும் குறைவாக இருப்பதால்தான். க்ளூகோவிடாவில் மிகவும் அவசியமான ரத்தத்திற்கு வேண்டிய சர்க்கரைகள் அடங்கியுள்ளன. இவை வெகு சீக்கிரத்தில் ரத்தத்துடன் கலந்து உங்களுக்குத் தேவையான சக்தியை உடனேயே அளிக்கிறது. அத்துடன் க்ளூகோவிடாவிலுள்ள விடமின்களும் உலோகப் பொருள்களும் உங்களை பலமுள்ளவர்களாகக் கட்டுறுப்புடனும் ஆரோக்கியத்துடனும் இருக்கச் செய்கின்றன. நீங்கள் கடினமான வேலைகளைச் செய்யவேண்டியிருந்தால் முதலில் க்ளூகோவிடாவை உட்கொள்ளுங்கள்.




## க்ளூகோவிடா

வெகு சீக்கிரத்தில் சக்தியூட்டுகிறது



கார்ன் ப்ராடெக்ஸ் கம். (இந்தியா) ப்ரைவேட் லிட்.

பம்பாய்-1 • கல்கத்தா-1

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

68

பிரம்மசரியத்துக்கு முதல்படி அதன் அவசியத்தை உணர்வது. அதைப் பற்றி மனத்தில் சந்தேகம் இருந்தால் ஒரு நாளும் பிரம்மசரிய விரதத்தை அனுசரிக்க முடியாது.

அடுத்தபடி என்னவென்றால் பொதுவாக எல்லாப் புலன்களையும் அடக்கியாளுதல், உண்பதில் நாக்கைக் கட்டாதவன் பிரம்மசரியமலையின் மேல் ஏற முடியாது. உயிரைக் காப்பதற்காக உணவு உட்கொள்ள வேண்டுமேயொழிய ருசியான சாப்பாட்டின் வழி இன்பமடைவதற்காக உணவு என்று கருதலாகாது. பரிசுத்தக் காட்சிகளைத் தான் பார்க்க வேண்டும். சிற்றின்பக் காட்சிகளில் கண்களைச் செலுத்தலாகாது. நடக்கும்போது இங்குமங்கும் பார்வையைச் செலுத்தாமல் கீழ் நோக்கி நடப்பது பண்பாடு அடைந்தவனுடைய முறை. பிரம்மசரியத்தைக் கோருபவன் கெட்ட பேச்சுக்களுக்குக் காது கொடுக்க மாட்டான். வாசனைப் பொருள்களின் இன்பத்தைத் தேடமாட்டான். அறவழியில் நடப்பவனுக்கு அத்தர் சந்தனாதி வாசனைத்திரவியங்களைக் காட்டிலும் மழை பெய்த மண்ணின் வாசனை மிகச் சிறந்த நறுமணமாகும். பிரம்மசரியத்தை அடைய விரும்புகிறவனுக்குச் சோம்பல் உதவாது. நாள் முழுதும் நல்ல பணியில் தன்னுடைய அங்கங்களைச் செலுத்த வேண்டும். அவ்வப்போது உபவாசம் இருக்க வேண்டும்.

மூன்றாவது, சகவாசம் நல்ல சகவாசமாக இருக்க வேண்டும். படிக்கும் புஸ்தகங்களும் நல்ல புஸ்தகங்களாக இருக்க வேண்டும். சுத்தமாக இருக்கவேண்டும். நல்லவர்களுடைய சகவாசமும் பாப கருத்துக்களை ஒதுக்கிய புஸ்தகங்களும் அத்தியாவசியம்.

எல்லாவற்றுக்கும் மேலாக, பிரார்த்தனையும் ஜெபமும் அவசியம். உள்ளத்தைச் செலுத்திய ஜெபம் தினம் தவறாமல் செய்து ஆண்டவன் அருளை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

இவையொன்றும் கடினமல்ல. சாதாரண மக்கள் அனுசரிக்கக் கூடிய முறைகள். பிரம்மசரியத்தை உண்மையில் விரும்பினால் இந்த முறைகளில் ஒரு கஷ்டமுமிராது. அடைய வேண்டும் என்கிற விருப்பம் உறுதியாக இல்லாமற் போனாலேதான் இந்த முறைகளில் ஒருவன் கஷ்டப்படுவான். பார்க்கப் போனால் நான் சொல்லிய பண்பாடுகளும் கட்டுப்பாடுகளும் சாதாரண மக்கள் ஓரளவு ஒப்புக் கொண்டு நடந்து வருவதினாலேதான் உலக வாழ்க்கை நடைபெற்று வருகிறது. சாதிக்க முடியாத விஷயம் ஒன்றுமில்லை.

[யங் இந்தியா, 29—4—26]

பிரம்மசரியத்தில் வெற்றியைக் காண விரும்புகிறவர்கள் ஒரு புலனை மட்டிலும் கட்டுப்படுத்தி விட்டு மற்ற விஷயங்களில் சாதாரண மக்களைப் போலவே நடந்து கொள்ளலாம் என்று எண்ணுவதனாலேதான் வெற்றி காணாமல் இருக்கிறார்கள். உண்பதிலும் பார்ப்பதிலும் கேட்பதிலும் எல்லாரையும் போலவே இருந்தால் பிரம்மசரியத்தில் வெற்றி எப்படிக் காண முடியும்? வேனிற் காலத்தில் மார்கழி மாதத்தின் குளிர்ச்சியைத் தேடுவது போலாகும். பிரம்மசாரியினுடைய வாழ்க்கை வேறு; மற்றவர்கள் வாழ்க்கை வேறு; இந்த வேறுபாட்டை நன்றாக உணர வேண்டும். இருவருக்கும் கண்கள் ஒன்றே. ஆனால் பிரம்மசாரி ஆண்டவனுடைய விபூதியைக் காண்பான்; மற்றவர்கள் காண்பது கூத்தும் வேடிக்கையும். இருவருக்கும் காது ஒன்றே. ஆனால் ஒருவனுடைய செவியில் கேட்பது நாராயணன் புகழ்; மற்றவன் செவி கிராமிய ஹாஸ்யங்களில் இன்பங் காணும். இருவருமே தூங்காமல் ஜாகரணம் அனுஷ்டிக்கலாம். ஒருவன் பிரார்த்தனைக்கோ சத்காலட்சேபக் கதைகள் கேட்கவோ அப்படிச் செய்வான். மற்றவன் கூத்துக்கும் கேளிக்கைக்கும் தூக்கத்தைக் கைவிடுவான். இருவருமே உணவு உண்கிறார்கள். ஒருவன் ஆண்டவன் கோயில் கொண்டிருக்கும் உடலைச் சரியான நிலையில் வைத்திருப்பதற்காக உண்கிறான். மற்றவனோ ருசிகள் அனுபவிக்க அளவுக்கு மீறித் தின்று பூஜா பாத்திரமாகிய வயிற்றைச் சாக்கடையாக்கிக் கொள்கிறான். பிரம்மசரிய விரதம் பூண்டவர்களுக்கும் மற்றவர்களுக்கும் இவ்வாறு மிக வித்தியாசம். விரதத்தில் படிப்படியாக வெற்றி பெறும்போது இந்த வித்தியாசமும் வரவர அதிகமாவதைக் காணலாம்.

# படித்துப் பாருங்கள்

## நிலாப் பாட்டி

தமிழ் நாட்டில் பன்னெடுங் காலமாக வயது முதிர்ந்த பாட்டியிடம் சின்னஞ்சிறு குழந்தைகள் கதை கேட்கும் வழக்கம் உண்டு. ஆனால் நவநாகரிகம் முதிர்ந்து வரும் இந் நாளில் அந்த வழக்கம் மறைந்து கொண்டு வருகிறது. ஆனால் இந்தக் குறையை நீக்கு வதற்காகத்தானே என்னவோ, குழந்தை இலக்கியத்தை வளர்க்கும் பணியில் ஈடுபட்டுள்ள சிலர் நவநவமான கருத்துக்கள் அடங்கிய கதைகளை அழகழகான சித்திரங்களோடு வெளியிட்டு வருகிறார்கள். அந்த வகைய சிறந்த குழந்தை இலக்கியப் புத்தகங்களில் ஒன்று இந்த 'நிலாப் பாட்டி' என்னும் புத்தகம்.

'நமது முதிர்ந்த பிராயத்திலும் நிலாப் பாட்டி நூல் நூற்று உழைத்து வாழ்ந்து வருகிறாள். ஒரு நாள் குருவி ஒன்று அடிபட்டு அவள் வீட்டில் வந்து விழுகிறது. அதற்குச் சிகிச்சை செய்து காப்பாற்றுகிறாள் கிழவி. உதவிபெற்ற அந்தக்குருவி தன்னாத வயதினால் அல்லல்படும் கிழவிக்குத் தங்கக்காசு கொண்டு வந்து கொடுக்கிறது. ஆனால் பிறர் பொருளுக்கு ஆசைப்படாத அந்தப் பாட்டி ஏழைகளுக்கு உதவிபுரியத் தங்கக் காசுகளைப் பயன் படுத்தி விடுகிறாள்....'

இப்படிக் கதை மிகவும் சுவாரஸ்யமாகச் செல்கிறது. 'உழைத்து வாழ வேண்டும்; பிறர் பொருளுக்கு ஆசைப்படக் கூடாது; வறியோர்க்கு உதவி புரிய வேண்டும்' என்னும் பல கருத்துக்கள் பொதிந்து விளங்கும் இந்தக் கதையைக் குழந்தைகள் விரும்பிப் படிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

ஆசிரியர்: பெரியசாமி தூரன். பிரசுரம்; புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் 135, பவழக்காரத்தெரு சென்னை-1 விலை: ரூ. 1—8



'என்னங்க! இந்தத் தேர்தலிலே யார் வெற்றி பெறுவாங்க? நீங்க சொல்லுங்க, பார்க்கலாம்?''

''......உன்......அபிப்பிராயம் தான் அப்பா எனக்கும்!......''

## அமரன் அம்பிகாபதி

தமிழன்னையின் தனிப் பெரும் சிறப்புக்கு எடுத்துக் காட்டாக விளங்குவது தமிழ்க் கவிதை. வெறும் சொல்லடுக்குகளைக் கொண்டு கவிதையின் நயத்தை அளந்துவிட முடியாது. கவிதையின் கட்டுக்கோப்புக்குக் காவலாக நிற்கும் சொற்கள், அந்தச் சொற்களின் ஊடே செறிந்து கிடக்கும் கருத்து இவைகளுக்கெல்லாம் அப்பால் நின்று படிப்பவர் உள்ளத்தை உணர்ச்சியினால் உருக்கும் உண்மையையும் கொண்டதுதான் கவிதை.

காவலன் மகள் அமராவதியை, கவிஞர் மகன் காதலித்த கதையை இந்த இளங் கவிஞர் இனிமையான தமிழ்க் கவிதைகளால் அழகாகச் சொல்லுகிறார். இந்நூலில் மிளிரும் கவிதைச் சிறப்பைப் பற்றித் தனியாகக் கூறுவதைவிட ஒரு கவிதையை உதாரணமாகக் காட்டி விட்டால் கவிதை நயம் உணர்ந்தவர் அதைப் படித்து இன்பம் நுகருவார்கள்:

"விழியாலே என் நெஞ்சை
வெல்லுகின்றாய்
விளையாலே என்னுயிரை
விரட்டுகின்றாய்
மொழியாலே நீ பொழியும்
மோகத் தேறல்
மூடுகின்றாய் பேரலைபோல்
மோதுகின்றாய்
தொழிலாக என்னுயிர் மேல்
தொடுத்து விட்டாய்
தொலையாத கடும்போர் நீ
தோகை கொண்ட
எழிலான மாமயிலே
ஏதமுற்றேன்
ஏனென்னைக் கொல்லுகின்றாய்
ஏது செய்வேன்?"

ஆக்கியவர்: கவிஞர் சே. ர. குமாரசாமி பி. ஏ., பிரசுரம்: தேவி பதிப்பகம், அம்மாப் பேட்டை, சேலம்—3; விலை: ரூ. 2.

## கல்கியின் நகைச்சுவை

பேராசிரியர் கல்கி அவர்கள் தமிழ் எழுத்துலகத்தில் இணையற்ற வெற்றியடைந்ததற்கு முக்கிய காரணம் அவர் எழுத்தில் அபரிமிதமான நகைச்சுவை மிகுந்து விளங்கியதுதான் என்றால் அது தவறாகாது. எந்த விஷயமானாலும் அவர் பேனா முனையிலிருந்து வெளி வரும்போது சிரித்துக் கொண்டே வெளியே வந்து வாசகர்களையும் சிரிக்க வைக்கும். எத்தனை கவலைகள் சூழ்ந்திருந்த போதும் அவற்றை மறந்து பரவசம் அடையச் செய்தது அவரது நகைச்சுவை. கல்கி அவர்கள் பல சந்தர்ப்பங்களில் எழுதிய கட்டுரைகளிலிருந்தும் கதைகளிலிருந்தும் நகைச்சுவை ததும்பும் பகுதிகளைத் தொகுத்து இந்நூலை வெளியிட்டிருக்கிறார்கள். இம் முயற்சி எவ்வளவு நல்ல முயற்சி என்பது நூலைப் படித்து நகைச்சுவையை அனுபவிக்கும் போது விளங்கும். தொகுத்தவர்: எஸ். சங்கரன்; பிரசுரம்: பாரதி பதிப்பகம், சென்னை-17; விலை: ரூ. 1—8—0.

# தமிழ் கூறும் நல்லுலகம்

கல்கத்தாவுக்கு வடக்கே நூற்றைம்பது மைல் தூரத்தில் உள்ள பர்ன்பூரில் தியாகராஜரின் ஆராதனை தினம் ஸ்ரீமதி சீதா கோவிந்தசாமியின் தலைமையில் கொண்டாடப்பட்டது. ஏராளமான தென்னிந்தியர்கள் வந்திருந்து ஆராதனை விழாவைச் சிறப்பித்தார்கள். பர்ன்பூர் கர்நாடக சங்கீத வகுப்பு மாணவிகள் தியாகராஜ கீர்த்தனைகளை அழகாகப் பாடினார்கள். ஸ்ரீ எஸ். ஏ. அய்யங்கார் அவர்கள் ஸ்ரீ தியாகராஜரின் வாழ்க்கை வரலாற்றை எடுத்துச் சொன்னார்.

★

நாஸிக் தேவலாலி தென்னிந்திய சங்கத்தினரால் ''சர்வோதய தினம்'' 30–1–57 அன்று கொண்டாடப்பட்டது. அதுசமயம் தற்காப்பு இலாகா கணக்கு தணிக்கை அதிகாரி ஸ்ரீ எஸ். சுப்ரமணியம் தலைமை வகித்தார். பாரதியின் ஆறுதலை துதியுடன் நிகழ்ச்சி தொடங்கிற்று. தலைவர் காந்திஜியின் கொள்கை பற்றிப் பேசினார். பின்பு ஸ்ரீ பி. ஆர். திருவேங்கடம் சர்வோதய லட்சியம் பற்றியும் திரு ஜி. ராமச்சந்திரன் 'காந்தி வகுத்த வழி' என்பது பற்றியும், திரு ஸ்ரீ எம். ஜி. கோட்போலே, ''பிரார்த்தனை மகிமை'' என்பது பற்றியும் வெகு அழகாக உரை நிகழ்த்தினர். வேதம், குர்–ஆன், பைபிள் படிக்கப்பட்டன. வைஷ்ணவ ஜனதோ பாடலும், சர்வோதயத்தின் மகிமையைப் பற்றி ஸ்ரீரங்கம் சீமா இயற்றிய பாடல் ஒன்றும் பாடப் பெற்றன. திரு எம். ஆர். சீனிவாசராகவன் வந்தனோபசாரம் கூறும்பொழுது வந்திருந்த அனைவரையும் கதர் அணியுமாறு கேட்டுக் கொண்டார். ராம்துன் பஜனையுடன் நிகழ்ச்சி முடிவுற்றது.

★

நாகபுரி தென்னிந்தியர் சங்கமும், தென்னிந்தியர் மாதர் சங்கமும் சேர்ந்து ஜனவரி மாதம் 25, 26, 27ம் தேதிகளில் ஸ்ரீ தியாகராஜரின் 110–வது ஆண்டு விழாவையும், பிப்ரவரி மாதம் 10-ம் தேதியன்று ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் தினத்தையும் வெகு விமரிசையாகக் கொண்டாடினர். ஒவ்வொரு தினத்திலும் சங்கீதத்தில் தேர்ச்சி பெற்றவர்கள் தலைமை வகித்து, தியாக பிரும்மம், சியாமா சாஸ்திரி இவர்களின் வாழ்க்கை விவரத்தையும் அவர்கள் சங்கீதத்தின் மகிமையையும் அவர்கள் தினத்தைக் கொண்டாடுவதின் அவசியத்தையும் அழகாக எடுத்துரைத்தார்கள்.

விழாவில் மணக்கால் திரு வரதராஜன், உமையாள்புரம் திரு நாகராஜய்யர் மற்றும் உள்ளூர் பிரபல பாடகர்களும் பங்கெடுத்துக் கொண்டு தியாகராஜர், சியாமா சாஸ்திரிகளின் கிருதிகளை வெகு அழகாகவும், பக்தி சிரத்தையுடனும் பாடினார்கள்.

கலைக்காகவும், கலை வளர்ச்சிக்காகவும் சேவை செய்து வரும் இலங்கை பாரதி இளைஞர் சங்கத்தின் கட்டட நிதிக்காகச் சென்னை எஸ். மனோகர் குழுவினர்கள் சென்ற 1–2–57 முதல் தங்களது ''இலங்கேசுவரன்'' நாடகத்தை இரண்டு வாரங்கள் வெற்றிகரமாக நடத்தினர்.

10–2–57 ல் நடைபெற்ற இலங்கேசுவரன் நாடகத்தின்போது பார்லிமெண்ட் மெம்பர் திரு வி. ஏ. கந்தையா அவர்கள் நடிகர் மனோகரைப் பாராட்டி, பொன்னாடை போர்த்தி, இலங்கேசுவரன் என்ற பட்டத்தை வழங்கினார். தலைமை வகித்த முன்னாள் அமைச்சர் திரு சர். கந்தையா வைத்தியநாதன் அவர்கள் மனோகர் நாடகக் குழுவினரைப் பாராட்டி திரு மனோகர் அவர்களுக்கு வாழ்த்து கூறினார். சங்கத்தலைவர் திரு நயமணி கல்கிதாசன் நன்றியுரை கூறினார்.

★

முத்தமிழையும் முன்னணிக்குக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபடும் நோக்கத்துடன், கொழும்பு, சாஹிரா கல்லூரி மண்டபத்தில் இயல், இசை, நாடக மன்ற ஆரம்ப விழா அதி விமரிசையாக நடந்தது. டாக்டர் கே. ஏ. சுந்தரம் தலைமை வகித்தார். அவர் தமது தலைமை உரையில், ''நமது மொழி, நமது இனம் ஆகியவை நல்வாழ்வைக் காண வேண்டுமானால், நாடகங்களினால்தான் அது சாத்தியமாகும். பாமர மக்களின் உள்ளங்களில் முன்னேற்றக் கருத்துக்களை உருவாக்குவதற்கு நாடகங்கள்தான் தக்க சாதனம். கலை வளர்ச்சியில் ஆர்வத்தைப் பெருக்க, நல் வாழ்வுக்கான நல்ல கருத்துக்களை வளர்க்க நாடகங்கள் பெரிதும் உதவும் என்று கூறினார். இயல், இசை, நாடகம் பற்றிப் பலர் சொற்பொழிவாற்றினார்கள்.

★

ஜாம்ஷெட்பூர், டெல்கோ தமிழ்ச் சங்கத்தின் ஐந்தாவது ஆண்டுவிழா 1957 ம் வருஷம் பிப்ரவரி மாதம் 9, 10 தேதிகளில், பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட அலங்காரப் பந்தலில் வெகு விமரிசையாக நடந்தேறியது. 9-ந் தேதி மாலை திரு கே. வி. ராஜன் தலைமை வகித்து வடநாட்டில் தமிழர் சங்கங்கள் பணியாற்ற வேண்டிய முறைகளைப் பற்றிப் பேசினார். தக்ஷிண பாரத வித்தியாலயச் சிறுமிகள் சாந்தி ஹேமா, நடனமாடி வந்திருந்தோரைக் களிப்பித்தனர். மறுநாள் காலை நடந்த கலைக்கூட்டத்தில் பல அன்பர்கள் பேசினர். பலர் இன்னிசை விருந்தளித்தனர். சங்கம் நடத்தும் வியாசப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. விகடரத்தினம் சந்தானம் சந்துரு கோஷ்டியாரின் விகடக்கச்சேரி, விழா நிகழ்ச்சிகளுக்குச் சிகரமாக அமைந்தது.

# சொல்லால் அழியும் துயர்

ஸ்ரீப்ரியா



“ஜயம்! சினிமாவுக்குப் போகலாமா? உனக்குப் பிடித்தமான நடிகர் கணேசன் நடிக்கும் படம்” என்று சமையலறையில் தோசை தயாரிப்பதில் முனைந்திருந்த மனைவியைக் கேட்டான் வாசு. அவனைத் திரும்பிப் பார்த்தாள். 'உண்மையாகவா கேட்கிறீர்கள்? என்று கேட்பது போலிருந்தது அவள் பார்வை.

“என்ன, அரை மணியில் தயாரா யிரு. டாக்ஸி கொண்டு வருகிறேன். என்ன, நாம் இருவர் மட்டும்தான்..” என்று பரபரப்புடன்பேசிக்கொண்டேபுறப் படத் தயாரானான் வாசு.

“இதோ, பாருங்கள். நான் வரவில்லை!”

“என்ன!” திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான் வாசு.

அடுப்பைக் கிளறும் சாக்கில், அவனை நோக்க அஞ்சியவளாகத் தலையைக் கவிழ்த்துக்கொண்டாள் ஜயம்.

“ஏன்? நான் கூப்பிடும்போது வரமாட்டாய். அப்புறம், 'என்னை எங்கேயாவது அழைத்துக் கொண்டு போகிறீர்களா?' என்று கண்ணைக் கசக்குவாய்!” கோபமும் கேலியுமாகச் சீறினான் வாசு.

'விருட்'டென்று தலையை நிமிர்த்தினாள் அவள். ஏதோ பொரிந்து தள்ளத் துடித்தது அவள் நாக்கு. ஆனால் கதவருகே நிழல் தட்டும் உருவத்தைக் கண்டு தயங்கினாள்.

“ஜயம், இன்றைக்கு பஜனை மடத்திலே முக்காலிபுரம் தீக்ஷிதர் கதையாம். சீக்கிரம் எனக்குப் பலகாரம் செய்து விடு. குழந்தைகளிடம் சொல்லாதே! பனியில் வந்தால் அவைகளுக்கு உடம்புக்கு ஆகாது.” குரல் கொடுத்தபடி சமையல் அறையில் நுழைந்த காமாட்சி பலகாரம் ஏற்கனவே தயாராகியதை அறிந்து திருப்தியுடன் வெளியேறினாள்.

“இனி நீ சினிமாவுக்குப் புறப்பட்டாற் போலத்தான்!” பல்லைக் கடித்தான் வாசு.

ஜயம் தொடங்கி விட்டாள். “உங்களுக்குக் கொஞ்சமாவது சமயம், பொழுது தெரிகிறதா? பெரியவர்கள் என்று வீட்டிலிருந்தால் அவர்களை அனுசரித்துத்தான் போக வேண்டும். ராஜாவுக்கு ஜுரம். எனக்கும் உடம்பு சரியில்லை. தவிர அம்மாவிடம் குழந்தைகளை விட்டுச் சென்றால் நன்றாயிருக்குமா? அல்லது ஆளுக்கு ஒன்றரை ரூபாய் செலவழித்துப்படம் பார்க்கப் போனால்தான் நமக்குக் கட்டுமா?” என்றாள் ஜயம்.

“போதும் பிரசங்கம்! உன்னைக் கூப்பிட்டேனே! நீ ஒரு தூங்கு மூஞ்சி. எந்த வேளையும் அடுப்பைக் கட்டிக் கொண்டு வேலை வேலை என்று அழுவாய்! தோசைக்கும் சட்னிக்கும் பாட்டியம்மாள் மாதிரி அரைப்பாய்!” என்று சொல்லிக் கொண்டே கையிலிருந்த டிபன் தட்டை வீசி எறிந்தான் வாசு.

“ஆமாம், அரைத்தால்தானே உங்களுக்கு வார்த்துப் போடலாம். பிரமாதமாக இப்பொழுதுதான் பால்யம் திரும்பி யிருக்கிறது. கெஞ்சின நாட்களெல்லாம் பல்லைத் தட்டினீர்கள். இப்போது 'அம்பலத்து உறவா, அடுப்படி உறவா' என்பது போல் ஒரு நாள் உங்களோடு குஷியாகச் சினிமாவுக்கு வந்தால் வீட்டில் சிரமத்தை அனுபவிப்பது நான் தானே! அப்படியே நான் வந்தாலும் என்னால் சினிமாவை அனுபவிக்க முடியாது. குழந்தைகள் நினைவாகத்தான் இருக்கும். ஏன், குழைந்து குழைந்து பேசிவந்த உங்கள் சிநேகிதர்கள் இப்போது எங்கே போனார்களோ?”

“மூடு, வாயை!” பளீரென்று ஜயத்தின் கன்னத்தில் விழுந்த அறையின் ஓசை அடங்குவதற்கு முன் செருப்பை மாட்டிக் கொண்டு வெளியேறினான் வாசு. அவன் மனவேகத்தை அளப்பது போல் கால்கள் நடையை எட்டிப் போட்டன! 'பார்லி கார்ட'னை நெருங்கிய பின்பே அவன் வேகம் கொஞ்சம் தணிந்தது. அப்படியே அங்கிருந்த பெஞ்சு ஒன்றில் உடல் சோர்ந்து உட்கார்ந்தானே தவிர மனம் கொந்தளித்துக் கொண்டுதான் இருந்தது.

'சீ, ஜயம் என்ன வரவர இப்படி அடுப்படிப் பூனையாகி விட்டாள்?'

எதிரே ஜோடியாகச் செல்லும் பல தம்பதிகள் அவன் ஏக்கத்தை அதிகப்படுத்தினர்.

சாலைப்புறமாகத் தன் கண்களை ஓட்டியவாசு எதிரே தென்பட்ட ஜோடி ஒன்றைக் கண்டு திடுக்கிட்டான். அவன் நண்பன் நாகராஜன். அருகே புது மணமான மனைவி! அந்தப் பெண்ணின் முகத்தில்தான் எத்தனை பூரிப்பு. கணவனுடன் வெளியே கிளம்பினால் தான் என்ன, இப்படியா தெருவிலேகூடப் பல்லெல்லாம் தெரிய இளித்துக் கொண்டு வர வேண்டும்?

இதற்குள் வாசுவைக் கண்டு விட்ட நாகராஜன் முகத்தில் பெருமை வழிய “நமஸ்காரம். இவள்தான் என் ஸ்ரீமதி” என்று அறிமுகப்படுத்தியபடி நெருங்கினான்.

பதிலுக்கு ஒரு கும்பிடு போட்ட வாசுவும் இப்போதுதான் திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்தவன் போல் “மிஸ்டர், நாகராஜன்! இன்று நாடக ஒத்திகை கிடையாதா? பொங்கல் விழா நாடகம் எந்த மட்டில் இருக்கிறது?” என்று கேட்டான்.

“அது கிடக்கு அப்பா, 'நாடகம், ஒத்திகை என்று போனால் இனி வீடு சம்சாரம் ஆயிடுத்



பம்பாய் மாநகர கருத்தெழுத்தாளர் சங்க வெள்ளி விழா பம்பாய் நகரில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. விழாவைப் பம்பாய் கவர்னர் ஸ்ரீ பிரகாசா துவக்கி வைத்துப் பேசுவதையும், விழாவில் பேசிய திரு எஸ். கே. பாட்டீல், திரு டி. வி. ராமானுஜம் ஆகியோரையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.

இல்லே. கொஞ்சம் உள் நாட்டு விவகாரமும் பார்க்க வேண்டாமா? அப்புறம் புயல் வந்தால்..'' என்று சிரித்துக் கூறியபடி தன் மனைவியின் பக்கம் ஒரு ஒய்யாரப் பார்வையை வீசினான் நாகராஜன். வாசுவுக்கு அவனிட மாவது பேசி நேரத்தைப்போக்க ஆசைதான். ஆனால், மணிக்கணக்காக அரட்டை அடிக்கும் நாகராஜன் இன்று இப்படி ஓடுகிறானே!

''இப்படி 'அரோரா' தியேட்டருக்குப் போகலாம் என்று புறப்பட்டோம். எல்லாம் இப்போ போனால்தானே..குழந்தை குட்டிகள் ஏற்பட்டு விட்டால் இதெல்லாம் அனுபவிக்க முடியுமா?'' அவசரம் அவசரமாகக் கடிகாரத்தைப் பார்த்தபடி பறந்தான் நாகராஜன். முகத்தில் அசடு வழிய நின்றான் வாசு.

நாகராஜன் கூறிய வார்த்தைகள் ஒரு மின்னல் ஒளியை வாசுவின் மூளையில் பாய்ச்சின. 'காலாகாலத்தில் எதையும் அனுபவித்துவிட வேண்டும்.' ஆனால், அனுபவிக்க வேண்டிய காலத்தில் அவன் எப்படி இருந்தான்? வாசுவுக்கு அதை எண்ணவே வெட்கமாயிருந்தது. இதே நண்பன், நிர்ப்பந்தமான சில சந்தர்ப்பங்களில், கொஞ்சம் வீட்டு நினைவு பெற்றுக் கடமை யுணர்ச்சி உந்த வாசு நடக்க முற்பட்டபோது எப்படி அவனை ஏசியிருக்கிறான்? இன்று நியாயம் பேசுகிறான். அப்படியானால் வாசுதான் ஏமாந்தவனா?

ஜயத்தின் கூற்று ஒன்று இப்போது வாசுவின் நினைவுக்கு வந்தது. ''என் பிள்ளைக்கு, 'தனக்குக் கல்யாணமாகாதா?' என்று அவன் ஏங்க ஆரம்பித்த பின்தான் மணம் முடிக்கப் போகிறேன். அப்போதுதான் அவனுக்கு அவள் அருமை தெரியும். சிறு வயதிலேயே கல்யாணம் செய்து வைத்து விட்டால் மனைவியின் மகிமை தெரியாது'' என்பாள்.

ஜயத்தின் கோபமும் அர்த்தமற்றது அல்ல. பசித்தவன் பழங் கணக்குப் பார்ப்பதுபோல், உள்ளப் பசி கொண்டவன் எட்டாமல் போன காலத்தை எண்ணி ஏங்க ஆரம்பித்தான்...

காமாட்சி அம்மாள் தனது ஒரே மகனுக்கு இருபத்திரண்டு வயதுக்குள்ளாகவே மணம் முடித்து, அவன் வழிக் குழந்தைகளையும் கண்குளிரக் கண்டுவிடத் தீர்மானித்தாள். வாசுவுக்கும் சிறு வயது முதலே தன்னுடன்வளர்ந்த அந்தை மகள் ஜயலட்சுமியை மணப்பதில் ஆவல் இருந்தது. ஆகவே, பம்பாயில் உத்தியோகம் ஏற்று இரண்டு வருடங்களுக்குள் அவனது இல்லற வாழ்வு ஆரம்பமாயிற்று.

அன்று காமாட்சி கணவனுடன் கிராமத்திலேயே தங்கி விட்டாள். ஜயமும், பம்பாய் வாழ்வின் இனிய அனுபவங்களையும் மனத்துக்கு இசைந்த மணாளனுடன் நடத்தப் போகும் தனிக் குடித்தனத்தையும் பற்றிக் கனவுகள் பல கண்டவளாகத் தன் கிருகத்தில் புகுந்தாள். பேதை! வாசுவுக்குச் சிறு வயது முதலே நடிப்பில் இருந்த மோகமும், பம்பாய் வந்தவுடனேயே 'அமெச்சூர் நாடக சபை' யொன்றில் அங்கத்தினராக்கி அவனது முழு மனத்தையும் கவர்ந்து விட்டது என்பதை அந்த அசடு அறியவில்லை! வந்த புதிதில் அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் அவனது நடிப்பைப் புகழ்ந்தது கூட அவளுக்குப் பெருமையாக இருந்தது.

ஆனால்....

ஒரு ஞாயிற்றுக்கிழமை, பம்பாயில் அதுவும் அவர்கள் இருந்த 'பாண்டுப்'பில் எப்போதோ ஒரு முறைதான் தமிழ்ப்படம் காலை ஆட்டமாக வருவது வழக்கம். அன்றை அயலில் எல்லோரும் புறப்படுவது கண்டு ஜயத்துக்கும் ஆவல் மூண்டது. மெல்ல வாசுவிடம் தன்னையும் படத்துக்கு அழைத்துப் போக வேண்டினாள்.

''இதோ பார், ஜயா! இதற்கெல்லாம் என்னை எதிர்பார்க்காதே. நீயும் அவர்களுடன் போய் வருவதைத் தடுக்கவில்லை நான். எனக்கு, ஆண்டு விழாவுக்கான நாடக ஒத்திகைக்குப் போக வேண்டும்'' என்று ஆவலுடன் வாயைத் திறந்து கேட்ட இளம் மனைவிக்குக் கணவன் தந்த பதில் இதுதான்! ஜயத்துக்குப் படமா வேண்டும், அவனது துணை அல்லவா தேவை?

அவள் கண்கள் கலங்கின. இன்னிசை இசைக்க நினைத்த இதயத் தட்டில் ஒரு சிறு கீறல் விழுந்தது. இது போன்ற பல சந்தர்ப்பங்களைத் திரும்பத் திரும்ப இசைத்து, சகிக்க முடியாத துயரத்தை அளித்தது அப்பெண் மனத்துக்கு.

ஆண்டு விழா, பொங்கல் விழா, தமிழ் விழா, பாரதி விழா என்று வரிசையாக விழாக்கள் சிறந்த நாடகங்களுடன் கொண்டாடப்பட்டன. நாடகக் குழுவினருக்கு வெளியூரில்கூட 'சான்ஸ்' கிடைத்தது. நாடக மன்றத்தின் கலை வளர்ச்சியுடன் வாசுவின் புகழ் வளர்ந்தது. அவனது திறமையை உபயோகப்படுத்திக் கொண்ட அங்கத்தினர்கள் அவனைக் காரியதரிசியாக ஏற்றனர். ஆனால்,

இதை யறியாத பேதைப் பெண் ஜயம் குமுறினாள்; அவனது அலட்சியத்தைப் பொறுக்க மாட்டாது மறைவில் கண்ணீர் விட்டாள். 'ஜோடி ஜோடி'யாகச் செல்பவர்கள் அவளது பொறாமைக்கு ஆளானார்கள். இதோ கறிகாய் விற்கும் கூடைக்காரி கூட, மாலையில் வேலை முடிந்து வரும் கணவனுடன் சேர்ந்து வெற்றிலையைச் சுவைத்தபடி சிரித்து மகிழ்ந்து கொண்டு ஜோடியாய் வீடு திரும்புகிறாள்!

''எல்லோரும் உல்லாசமாக வாழ இந்தக் காடாந்தரமான இடத்தில் கொட்டுக் கொட்டென்று தனியே இருக்க நான் மட்டும் பாவியா?'' என்று கண்ணீர் வடிப்பாள் ஜயம்.

''ஆமாம். அடுப்பங்கரையில் உன் தலைப்பைப் பிடித்துக் கொண்டு நான் அலைய வர வேண்டுமென்கிறாயா? போதும். அழுவது எனக்குப் பிடிக்காது'' என்று சீறுவான் வாசு.

* * *

அன்றொரு நாள்! இரவு மணி பதினொன்று இருக்கும். வழக்கம்போல ஹரிக்கேன் விளக்கைச் சிறிதாக்கி விட்டுப் படுத்து விட்டாள் ஜயம். கணவனை எதிர்பார்த்து அவளது உடலும், உள்ளமும் சோர்ந்து விடவே கண்ணயர்ந்து விட்டாள். தாளிடப் படாத வாசல் கதவைத் திறந்து கொண்டு நுழைந்தான் வாசு. எங்கும் ஒரே இருள்.

'ஏ ஜெயம்'—பதில் இல்லை.

தீப்பெட்டியின் உதவியால் மெதுவாக விளக்கின் இருப்பிடத்தை அறிந்து அதை ஏற்ற முற்பட்டபோது, அப்போதுதான் அணைந்திருந்த விளக்கின் சிம்னி கையில் சுடிட்டு விட்டது. அவ்வளவுதான்; கோபத்தில் தட்டி விட்ட கண்ணாடி சுக்குநூறாயிற்று. அரவம் கேட்டு விழித்த ஜயம் திடுக்கிட்டாள். வாசுவின் கோபத்தில், அன்று அவன் பொழிந்த வசைமாரிகளில் அவள் இதயமும் சிதறியது. 'தூங்குமூஞ்சியாம்: கணவன் வரவில்லையே என்று பொறுப்பின்றித் தூங்கிறாளாம்.''

விம்மல்களுக்கிடையே அவள் ஊருக்குப் புறப்படுவதாகக் கூறியபோது திடுக்கிட்டான் வாசு. என்ன அவளுக்கு அந்தத் துணிச்சலா? லட்சியக் கணவனைத் தன்னுடன் ஒத்துழைக்கும் கலாரசனைதான் இல்லையெனில் அதற்கு ஒரு மாபெரும் தடங்கலாகவும் இருக்க வேண்டுமா அவள்?

''பம்பாய்வாசி என்ற பெயரில் எனக்கென்று இந்தக் காட்டில் எந்த வசதியும் இல்லாத—மின்சார விளக்கு, தண்ணீர் வசதி கூட இல்லாத ஒட்டு வீடுதான் கிடைத்துள்ளது. அது போகட்டும்! கணவனாவது அன்போடு இருக்கிறாரா? நான்தான் தினம் பயந்து பயந்து இங்கு இரவு முழுதும் சாகிறேன் தனிமையில்! என் வயிற்றுக் குழந்தையாவது நன்றாக வளர நான் எனக்குப் பிடித்த இடத்தில் போய் நிம்மதியாகக் கொஞ்ச நாட்கள் இருக்கிறேன்....''

ஒரு கணம் துள்ளிக் குதித்தான் வாசு. அவன் தந்தையாகப் போகிறானா? திடீர் என்று ஜயத்திடம் அளவுகடந்த அன்பு பிறந்தது அவனுக்கு. அன்று அவளைச் சந்தோஷமாக வைத்துக் கொள்வதாகவும், இனி தானும் கவனமாக நடந்து கொள்வதாகவும் அவன் செய்த சபதங்கள் எத்தனை எத்தனையோ!









மறுதினம் மாலை அதே வேகத்தில் கையில் அவளுக்குப் பிடித்த தின்பண்டங்களும், பூவும் வாங்கிக் கொண்டு தான் அன்று ஒத்திகைக்கு வரமுடியாததை நண்பர்களிடம் தெரிவிக்க நாகராஜனின் அறைக்குச் சென்றான் அவன். அவ்வளவுதான் பிடித்துக் கொண்டு விட்டனர் பிரம்மசாரிக்கட்டைகள். ''என்ன கலை கலை என்று பேசினாலும் கிருகராணியின் கடைக்கண்ணுக்குத் தப்பித்தான் ஐயா எல்லாம். பிரமாதமாகத் 'தமிழ்விழா' கொண்டாட ஏற்பாடு செய்து விட்டு இப்படி நழுவ ஆரம்பித்தால்..?'' என்றெல்லாம் தலைக்கு ஒருவராக ஆரம்பித்தனர். அவ்வளவுதான்; வேதாளம் மறுபடியும் முருங்கை மரத்தில் ஏறியது. அன்று வீடு திரும்ப மணி பன்னிரண்டு ஆகிவிட்டது.

கடைசியில் ஜயம் பிறந்தகம் சென்றாள். ராஜு பிறந்தான். மறுபடியும் தன் குகைக்குத் திரும்பினாள். ஆனால் இப்போது அவள் முன்பெல்லாம் போல் வாசுவை அத்தனை எதிர்பார்க்கவில்லை. துணைதான் கிடைத்து விட்டதே! அதன் பராமரிப்பில் தன்னை மறந்தாள். ஆனால், அந்தக் குஞ்சு விளையாடும் லீலைகளைத் தன் கணவன் கண்டு ஆனந்திக்கவில்லையே என்ற குறைதான் அவளுக்கு!

நாட்களும் ஓடின. இடையே எத்தனையோ மாறுதல்கள். ஜயம் மூன்று குழந்தைகளுக்குத் தாயானாள். கணவனை இழந்த காமாட்சி அம்மாள் மகளை அண்டினாள். வாசுவின் நண்பர்கள் பலருக்கு மணமாயிற்று. ஆனால் வாசு மட்டும் மாறவில்லை! குடும்பத்துக்கே பற்றாத வருவாயுடன் ஜயம் தவித்துக் கொண்டிருந்த போது, நண்பர்களுடன் ஹோட்டல்களிலும், விழாக்களின் போது அவசரச் செலவுகளிலும் தன்னுடைய பணத்தை வீணாக்கிக் கொண்டிருந்தான் வாசு.

காமாட்சி அம்மாளின் வருகை ஜயத்துக்குப் பெரும் துணை ஆயிற்று. அவளது இளமை ஆசைகள் முற்றும் அடங்கிவிட்டன. இன்று அவள் வெறும் தாரம் மட்டுமல்ல, மூன்று குழந்தைகளுக்குத் தாய்! குடும்பப் பொறுப்பை உணர்ந்த கிருகலட்சுமி.

திடீரென்று வாசுவின் பாதையில் ஒரு சரிவு ஏற்பட்டது. ஏழை 'நாடக சபை'யின் நிதி பெருகிற்று. இதுவரை நிர்வகித்த வாசுவை ஒதுக்கி விட்டு நிர்வாகப் பொறுப்பை ஏற்க முன் வந்தனர் பல பெரிய தலைகள். ''கதாநாயகனாக அவனே நடித்துப் புகழைத் தட்டிக் கொண்டு போக நாங்கள் கையாலாகாதவர்களா?'' என்று கிளப்பியது ஒரு கோஷ்டி. விஷமிகள் சிலர் வேலையால் பணப் புழக்கத்தின் கணக்கில் ஏற்றத் தாழ்வு வரவே, வாசுவைச் சந்தேகக் கண்களோடு நோக்கினர் நண்பர்கள் சிலர். இப்போது தான் கண் விழித்த வாசு கௌரவம் பறிபோவதற்கு முன் விலக முயன்றான். இதுவரை சக்கரமாகச் சுற்றிய அவனது கால்கள் வீட்டில் நிலைக்க முடியாது தவித்தன. நண்பர்கள் வீட்டிலாவது போய் அரட்டையாவது அடித்து விட்டு வர நினைத்தால், புதுமையான நண்பர்களோ அவனை விட்டுக் கூடியவரை விலகியே நின்றனர்.

* * *

''மல்லிகைப் பூ. சரம் ஓரணா''—பூக்காரனின் குரல் வாசுவை இவ்வுலகுக்கு இழுத்து வந்தது. இந்த மல்லிகையை அவன் தானாகவே வாங்கி வந்து அவள் கூந்தலில் சூட்ட வேண்டும் என்று ஜயம் எத்தனை நாட்கள் ஏங்கியிருக்கிறாள். அவசரம் அவசரமாக நாலணாவுக்குப் பூவை வாங்கிக்கொண்டு புறப்பட்டான் வாசு.

புதிய திட்டங்களுடன் வீட்டினுள் நுழைந்தான் வாசு. மல்லிகைச் சரத்தைக் கையில் வாங்கிய ஜயம் அவன் மனதை உணர்ந்தவள் போல் அர்த்தபுஷ்டியுடன், முகத்தில் முறுவலை நெளிய விட்டபடி அவனை நோக்கினாள்.

''ஜயம், இனி நான் புது மனிதன். உன் சொற்படி நடக்கப்போகும் கணவன்....நீ தோப்புக்கரணம் போடு என்றால்..'' குழைவுடன் அவள் கரம் பற்றப் போனான் வாசு.

''ஸ்..போதும்..சத்தம் போட்டுக் குழந்தையை எழுப்பி விடாதீர்கள். சாப்பிட வாருங்கள்..'' என்று நழுவினாள் ஜயம்.



புதுமை பெறுக!
இதம் பெறுக!
நளினமாய் இருங்கள்! நாள்முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத, மனோரம்மிய மணத்துடன்.

---

எங்கள் புதிய தயாரிப்பு
உகந்த முறையில் உன்னத சுகந்தம்

**TSR**

# கோகுல் மாலா பத்திகள்




**டி.எஸ்.ஆர் & கம்பெனி,** கும்பகோணம்.

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: சுசாந்த் ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ○ கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B பாலபட்டாபி (ஸ்தாபிதம் 1932) வைசியாள் தெரு, கோயமுத்தூர் மதுரை ஏஜண்டு: மெஸர்ஸ் மீனாக்ஷி எண்டர் பிரைஸஸ், 4, கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை



# நரஸூ

காபி

அருந்தி அதன்

பிரத்யேகமான

ருசியை

அனுபவியுங்கள்

நரஸுஸ் மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.,
சேலம் & சென்னை



## உங்கள் நரம்புகள்!

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும் — அதுவும் ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்ட காலமாய் மனோ பலமும் தேக திடனும் வியர்த்தமாகி யிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக் கூடிய ஒரு உயர்ந்த டானிக்

இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப்போதும் கையிருப்பாக வைத்திருங்கள்



சிறியோர்
•
முதியோர்
•
நோயாளிகள்
யாவருக்கும்
உகந்தது

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

•

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
ஆர். எஸ். கௌடர் & கோ.
59, பந்தர் தெரு - சென்னை

ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
சத்ய நாராயண பார்மஸி
குமார் தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்

# பாலர் மலர்

## தேனும், கூடும்!

சீதா ஆறு வயதுக் குழந்தை. அவன் வீட்டுத் தோட்டத்தில் விதம் விதமான வர்ணங்களில் பூக்கள் பூத்துக் குலுங்கின. தினமும் சீதா அந்தப் புஷ்பங்களின் அழகையும் தேன் வண்டுகள் அவைகளை வந்து மொய்ப்பதையும் பார்த்துப்பார்த்துப்பூரித்துப் போவான். புஷ்பங்களைப் பறிக்கக்கூட அவனுக்கு மனம் வருவதில்லை. அவன் தாத்தாவின் கவனம் அந்த மரத்தில் கட்டி இருக்கும் தேன்கூட்டின் மீது இருந்தது. ஒருநாள் அவர் அந்தத் தேன் கூட்டைப் பிரித்து வந்து ஒரு கண்ணாடி ஜாடி நிறையத் தேனைப் பிழிந்து வைத்து விட்டார். சீதா ஓடி வந்து, ''தாத்தா! ஏது இவ்வளவு தேன்?'' என்று கேட்டான். அவர் விஷயத்தைச் சொன்னார். சீதாவுக்குத் துக்கவேசம் போட்டது. வண்டுகள் அவ்வளவு சிரமப்பட்டுச் சேகரித்த தேனை எப்படியாவது மறுபடியும் அவற்றினிடமே சேர்த்துவிட வேண்டும் என்று நிர்மானித்தான். தேன் புட்டியை மரத்தின் மேல் தேன்கூடு இருந்த இடத்திலேயே கட்டி விடலாமா என்று வேலைக்காரனை யோசனை கேட்டான். வேலைக்காரன் சிரித்துவிட்டு, ''வண்டுகளால் பூக்களிலிருந்துதான் தேனை இழுக்க முடியும். புட்டியிலிருந்து சாப்பிட முடியாது'' என்று கூறினான்.

மறுநாள் சீதா புட்டித் தேனை எடுத்துப் போய் ஒவ்வொரு சொட்டாக எல்லாப் புஷ்பங்களிலும் விட்டு விட்டான். ஆனால் அந்தத் தேனின் கனம் தாங்காமல் புஷ்பங்கள் கவிழ்ந்து தேனைக் கீழே கொட்டி விட்டன. கடைசியில் தேன் யாருக்கும் பிரயோசனம் இல்லாமல் போனதைச் சீதாவிடம் சொல்லிச் சிரித்தார் தாத்தா. ஆனால் அந்த வண்டுகள் பழையபடி பூக்களிலிருந்து தேனை எடுத்துச் செல்ல ஆரம்பித்ததைப் பார்த்துச் சீதா மகிழ்ந்தான்.







இங்கே இரண்டு வரிசையில் ஆறு காசுகள் இருக்கின்றன. இதில் ஒரே ஒரு காசைமட்டும் மாற்றிவைத்துவிட்டால் ஒவ்வொரு வரிசையிலும் நாலு காசு இருக்கும். அது எப்படி?

(விடை அடுத்த இதழில்)



காற்றாடியின் கயிறு எந்தப் பையனிடம் இருக்கிறது? கண்டுபிடியுங்கள்!

# மிருங்காவதி

## சித்திரத் தொடர்கதை 6

தேவிதத்தன் வாள் சிரத்தில் பட்டதும், அவள் சாபம் நீங்கி மீண்டும் தேவகன்னிகை ஆவாள் என்று முனிவர் கூறியிருந்தார். சாப விமோசனம் பெற்ற தேவகன்னிகை மிக மகிழ்ச்சியோடு தேவிதத்தனை மனமார வாழ்த்தி விட்டு, தேவலோகத்தை நோக்கிச் சென்றாள்.

(1) தேவிதத்தனும் சாரங்கனும் உஜ்ஜயினிக்குப் பிரயாணமானார்கள்.



(2) உஜ்ஜயினியில் நண்பர்கள், அவ்விருவரையும் உத்சாகமாக வரவேற்றார்கள். தேவிதத்தன் அங்கே சுதர்மன் என்னும் நண்பன் வீட்டில் தங்கினன். சுதர்மனின் பெற்றோர் தேவிதத்தனை, தங்களது புதல்வனாகவே பாவித்துப் பிரியமாகப் பராமரித்தனர்.



தேவிதத்தன் உஜ்ஜயினியில் தங்கிய காலத்தில் அங்கே வசந்தவிழா கோலாகலமாக ஆரம்பமாகியது. தேவிதத்தனும் சுதர்மனும் வசந்த விழாவின் கேளிக்கைகளைக் காணச் சென்றனர். (3)





நந்தவனத்தின் கொடி வீடு ஒன்றிலே தேவிதத்தன் அழகே உருவான பெண் ஒருத்தியைப் பார்த்தான். அந்த மான் விழியாள் ஒரு மானோடு விளையாடிக் கொண்டிருந்தாள். (4)



அவளது அழகு அவனை அடிமை கொண்டது. அவள் அந்நாட்டு மன்னன் பிம்பகியின் மகள். மிருநாங்காவதி என்ற இனிய பெயர் கொண்டவள். தன்னை ஒரு ஆடவன் பார்த்திருன் என்பதை உணர்ந்த அவள் மருண்டு மானாகத் துள்ளி ஓடி மறைந்தாள்.
ஓடும் பொழுதே அவன் உள்ளத்தையும் பறித்துச் சென்றாள். (5)



தன்னோடு நண்பன் ஒருவன் வந்திருக்கிறான் என்பதையும் மறந்து அவளைப் பின்தொடர்ந்தான் தேவிதத்தன். என்ன தேடியும் அவள் கிடைக்காமற் போகவே, சோர்ந்து ஒரு மரத்தடியில் சிந்தனையே உருவாக உட்கார்ந்து விட்டான். அவன் உள்ளத்து நிலைமையை உணர்ந்த அவனது நண்பன் சுதர்மன் அவனை அணுகித் தேற்றினான். (6)



(7) நண்பா! ஆண் மகனுக்கு அழகு வெற்றி. தோல்வி மனப்பான்மை கொண்டு சோர்ந்து உட்கார்ந்து விடுவதல்ல. உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அரசகுமாரி மிருநாங்காவதியைத் தேடிக் கண்டு பிடித்தே மறுகாரியம் பார்ப்போம். எழுந்திரு!



சுதர்மனின் ஆறுதல் மொழிகளைக் கேட்டுத் தேவிதத்தன் நம்பிக்கையொளி வீசும் உள்ளத்துடன் புறப்பட்டான். நந்தவனத்துக்கு நடுவிலே அழகிய மாளிகை தலை நிமிர்ந்து நின்று கொண்டிருந்தது. (8)



அதன் அழகைப் பார்த்து நின்று கொண்டிருக்கையில் ஒரு பெண்ணின் ஓலக்குரல் கேட்டது. (9)





# மரகதத்தின் திருமணம்



விஜயம்

## 1. மிராசுதாரின் ஆசை

வேலன் ஓர் ஏழைக் குடியானவன். அவனுக்குக் கொஞ்சம் நிலமும், இரண்டு உழவு மாடுகளும், ஒரு வீடும் இருந்தன. இவைகளைத் தவிர அவன் செல்வமென்று பெருமையாகச் சொல்லிக் கொள்வதற்கு அவனுடைய அருமை மகள் மரகதம் இருந்தாள். அவள் மிகவும் அழகி; புத்திசாலியுங்கூட.

வேலன் வீட்டில் செல்வம் நிறைந்திருக்காவிட்டாலும் அவன் மனத்தில் திருப்தி நிறைந்திருந்தது.

அவ்வூரில் கந்தசாமி பெரிய மிராசுதார். உழவு மாடுகளும், பசுமாடுகளும் அவரிடம் ஏராளமாக இருந்தன. அந்த ஊர்க் குடியானவர்களில் பெரும்பான்மையோர் அவருடைய வயல்களில் கூலி வேலைசெய்து பிழைத்தனர்.

வேலன் ஒரு முறை நோய் வாய்ப்பட்டு நீண்ட நாட்கள் படுத்த படுக்கையாயிருந்தான். அந்தச் சமயம் அவனுடைய நிலத்தை மிராசுதார் கந்தசாமியினிடம் அடமானம் வைத்துக் குடும்பம் நடத்தும்படியாயிற்று.

உடம்பு தேறி எழுந்ததும் அந்தக் கடனை அடைத்துவிடலாம் என்றுதான் வேலன் நினைத்தான். ஆனால் அதைக் காரியத்தில் நிறைவேற்றுவது அவ்வளவு சுலபமாக இல்லை. மழையில்லாமற் போகவே விளைச்சல் குறைந்தது; மிராசுதாருக்குக் கொடுக்க வேண்டிய கடன் வட்டிக்கு வட்டியாகக் குட்டி போட்டுப் பெருகிக் கொண்டிருந்தது. மரகதத்தின் வயதும் அழகும் வளர்ந்து கொண்டே இருந்தன. வேலனின் மன வேதனையும் வேகமாக வளர்ந்து கொண்டிருந்தது.

மரகதம் மன வேதனை சிறிதும் இல்லாமல், வாய்க்காங் கரையில் வாளிப்பாக வளரும் பசுங் கொடியைப் போல் 'செழுசெழு' வென்று வளர்ந்திருந்தாள். அவளது இளமை

யுடனும் அழகுடனும் போட்டி போட்டுக் கொண்டு, புத்தி சாதுர்யமும் குறும்புத் தனமும் வளர்ந்து வந்தன. தகப்பனின் மன வேதனையைச் சிறிதும் உணராமல், மரகதம் வயல்வரப்புகளில் உல்லாசமாக வளைய வந்தாள்; பூத்துக் குலுங்கும் பூங் கொடிகளோடு பூங்கொடியாக அவளும் அசைந்து ஆடினாள்.

அன்று மிராசுதார் கந்தசாமி இரண்டு பண்ணையாட்களோடு பேசிக் கொண்டே வயற்காடுகளில் சுற்றிக் கொண்டு வந்தார். அந்தச் சமயம் பச்சைப் போர்வை மூடியது போலிருந்த நெற்பயிருக்கிடையில் வன தேவதை போல் காட்சியளித்தாள் மரகதம்.

மரகதம் சிறுமியாயிருந்த போது மிராசுதார் பார்த்திருக்கிறார். அப்புறம் அவர் அவளைப் பார்க்கவேயில்லை. இப்பொழுது அவளை அவருக்கு அடியோடு அடையாளம் தெரியவில்லை.

"முருகா! அதோ வருகிறாளே, அந்தப் பெண் யார்?" என்று தம் பண்ணையாளைப் பார்த்துக் கேட்டார்.

"நம்ம மேட்டுத் தெரு வேலன் மகள் மரகதமுங்க!" என்று முருகன் பணிவாகச் சொன்னான்.

வேலன் மகள் என்று அவன் சொன்னதும் மிராசுதாரின் முகத்தில் உற்சாகக் குறி தோன்றியது.

மரகதத்தைப் பார்த்த பிறகுதான் மிராசுதாருக்குத் தம் மனைவி இறந்து போனது நினைவுக்கு வந்தது. இத்தனை நாட்களாக அவர் தமது தனி வாழ்க்கையைப் பற்றி நினைத்துப் பார்த்தது கூடக் கிடையாது. இப்பொழுது அந்த நினைவு அவர் மனத்தில் தீவிரமாக இடம் பெற்று விட்டது.

உடனே மிராசுதார் தம் அழகிய குதிரை வண்டியைப் பூட்டிக் கொண்டு குடியானவன் வேலன் வீட்டுக்குப் போனார்.

மிராசுதாரைப் பார்த்த வேலனுக்கு நடுக்கம் கண்டது. மிராசுதாருக்கு அவன் கொடுக்க வேண்டிய கடனைக் கேட்கச் சாதாரணமாகப் பண்ணைக் கணக்குப் பிள்ளைதான் அவன் வீட்டுக்கு வருவது வழக்கம். இன்றைக்கு வழக்கத்துக்கு விரோதமாக மிராசுதாரே அவன் வீட்டுக்கு வருவதென்றால் அவனுக்குப் பயமாயிருப்பதற்குக் கேட்பானேன்!

"வாருங்கள், ஐயா!...... ஏது...... இவ்வளவு தூரம்? முருகன்கிட்டே ஒரு வார்த்தை சொல்லியனுப்பினால் நான் ஐயாவைக் காண வீட்டுக்கு வந்திருப்பேனே!" என்றான் வேலன் பணிவோடு.

"என்ன வேலா, நான் உன் வீட்டுக்கு வரக்கூடாதா? ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி உன்னிடம் பேசத்தான் வந்தேன்!" என்றார் மிராசுதார்.

வேலனுக்கு மனம் குழம்பியது.

"ஐயா...மன்னிக்கணுங்க! இந்தத் தடவையும்... விளைச்சல் போதுமான அளவு இல்லாததினாலே...!"

வேலன் மேலே பேசுவதற்குள் மிராசுதார் 'ஹா ஹா ஹா' என்று சிரித்தார்.













"வேலா, நீ ஒரு சுத்த பயங்கொள்ளி! உன்னை யார் இப்பொழுது பணங் கேட்டார்கள்? உன்மகள் மரகதத்தின் கல்யாண விஷயமாகப் பேசலாம் என்று வந்தேன்" என்று கூறிக் கொண்டே மிராசுதார் கலகலவென்று நகைத்தார்.

இதைக் கேட்டதும் வேலனுக்குப் போன உயிர் மீண்டும் வந்தது.

அவரது சிரிப்பின் அந்தரங்கத்தை அப்பாவி வேலன் புரிந்து கொள்ளாமல், 'அடடா! மிராசுதாருக்கு என்ன தயாள குணம்! நம் மகள் கல்யாணத்தில் இவருக்குத்தான் எவ்வளவு அக்கறை!' என்று எண்ணி மகிழ்ந்தான்.

இருந்தாலும் அவன் சந்தேகத்துடன், "...என்...மகள் மரகதத்தின் கல்யாணத்தைப் பத்தி என்னுங்க இப்போ!" என்று கேட்டான்.

"அவளுக்கும் வயசாகிறது. இல்லையா? அவளை எனக்கு இரண்டாந்தாரமாகக் கொடுப்பதானால் நீ எனக்குத் தர வேண்டிய கடனைப் பற்றிய கவலை உனக்குக் கொஞ்சமும் வேண்டாம். உன் நிலத்தையும் உனக்குக் கொடுத்து, மேலும் என்னுடைய பெரிய தென்னந் தோப்பையும் உன் பெயருக்கு எழுதி வைத்து விடுகிறேன்....!" என்றார் மிராசுதார்.

வேலனுக்குச் சிறிது நேரம் ஒன்றும் தோன்றவில்லை. மரகதத்தின்மேல் அவன் உயிரையே வைத்திருந்தான். ஆனால் அவனுடைய சிரம தசை அந்தப் பிரியத்தைக் கூடச் சிறிது மறக்கச் செய்தது. கடன் தீருவதற்கு இது நல்ல யோசனைதான். இதை விட்டால் வேறு வழி ஏது?

"என்ன வேலா, பலமான யோசனையில் ஆழ்ந்து விட்டாய்? மரகதம் என்னை மணந்தால் என் சொத்து முழுமைக்கும் உரிமைக்காரியாவாள். உன் கடனும் தீர்ந்து விடுகிறது. உனக்கும் சொத்து கிடைக்கிறது. நன்றாய் யோசித்துச் சொல். அவசரம் இல்லை." மிராசுதார் மிகவும் கனிந்த குரலில் சொன்னார்.

"...யோசனை ஒண்ணும் இல்லைங்க. குழந்தையைச் சூது வாது தெரியாமல் ரொம்பவும் செல்வமாக வளர்த்து விட்டேன். அவள் சம்மதிக்க வேண்டாமா? அதைப் பற்றித்தான் யோசிச்சுக்கிட்டிருக்கேன்!" என்றான் வேலன்.

"அவளிடம் பக்குவமாக விஷயத்தைச் சொல்லு. வேலா! அவளைச் சம்மதிக்கச் செய்வது உன் சாமர்த்தியத்தில் தான் இருக்கிறது. நான் வருகிறேன். நீ அவளுடன் பேசி விட்டு அப்புறம் சாவகாசமாக வீட்டுக்கு வா!" என்று சொல்லிவிட்டு மிராசுதார் வண்டியிலேறினார். வண்டி நகர்ந்தது. (அடுத்த இதழில் முடியும்)

# பைலட் பேனாவின் அற்புத தரத்திற்கு அரிய எடுத்துக்காட்டு!




உப்புத் தாளின் மீது இரண்டு மணி நேரம் இடைவிடாமல் எழுதிய பிறகும் பைலட் பேனாவின் உறுதியான நிப் கெட்டுப்போகவோ, அதன் எழுத்தின் வடிவு குலையவோ செய்யவில்லை. பைலட் பேனாவின் மேன்மைக்கு இதைவிட மேலான அத்தாட்சி வேறென்ன வேண்டும்!

பைலட் பேனாவின் விலை மிகக் குறைவேயாயினும், அது எவ்வித கடின உபயோகத்திற்கும் உகந்தது என்பதை அதிசயிக்கத்தக்க பரீட்சைகள் நிரூபித்துள்ளன. உப்புத்தாள் மீது எழுதினும் கூடவோ அல்லது மிருதுவான மரப்பலகையில் குத்தியிருந்தாலும் கூடவோ, அதன் உறுதியான நிப்பிற்கு யாதொரு சேதமும் விளையாது. இந்த பேனாவில் நிறைய மை கொள்ளுகிறது. ஒருதரம் மை நிரப்பினால், முழுத்தாளில் 40 பக்கங்கள் எழுதலாம்! மற்றும் இந்தப் பேனா ஒழுகாது என்பதற்கு உத்திரவாதம் உள்ளது!

எவ்வளவு கடின உபயோகத்திலும்கூட எழுத்தின் வடிவு குலையாமல், சொகுசாக எழுதும் தன்மையே பைலட் பேனா பெற்றுள்ள தனி மதிப்பிற்குக் காரணம். பைலட் பேனாக்கள் விலை ரூ. 6/8லிருந்து ரூ. 27/-வரை பல வேறு மாடல்களில் உள்ளன. ஒவ்வொரு மாடலும் நீங்கள் கொடுக்கும் பணத்திற்குச் சிறந்த பெறுமானம் அளிக்கும். உங்களுக்குப் பிடித்தமான மாடல் ஒன்றைத் தேர்ந்தெடுங்கள்.




## சிறந்த முறையில் நீடித்த உழைப்பிற்குப் பைலட் பேனா வாங்குங்கள்

பைலட் பேனாவிற்குகந்தது
பைலட் மையே

டிரேட் P மார்க்

தி பைலட் பென் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
சுத்தோவிக் சென்டர், ஆர்மீனியன் தெரு, மதராஸ் 1

விற்பனையும் சர்வீஸும் செய்பவர்கள்:
மெஸர்ஸ் ஜெம் & கம்பெனி, 325/326, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, சென்னை - 1






Tushar




## 16. தந்தி வந்தது!

அன்று காலை ஏழரை மணி பஸ் புளிமங்கலம் நோக்கிப் போனதுமே கடைக்கதவை இழுத்து மூடி விட்டுச் சின்னத்துரை கோவைபஸ்ஸை நோக்கி நின்றான். செருப்பும் காலுமாய் வெளியே நின்றவனுக்குச் சட்டென்று பானுவின் குழந்தையைப் பற்றிய நினைவு எழுந்தது. இத்தனை நேரமாக நினைவு வரவில்லையே? குழந்தை ஆணோ, பெண்ணோ?

ரத்தினத்திடம் கேட்டு ஒரு சீப்புப் பழமும், ஒரு பிஸ்கோத்துப் பொட்டலமும் வாங்கினான். நல்ல பை ஒன்று அவனிடம் இல்லை. அந்தோனியிடம் கேட்டான். அவர் வீட்டுக்குச் சென்று பூப்போட்ட துணிப்பை ஒன்று கொண்டு வந்து கொடுத்தார். கோவை செல்லும் பஸ் வந்து நின்றது.

''போய் வாங்க, தம்பி!'' என்று அந்தோனி வழியனுப்பினார். பிரயாணிகள் அனைவருக்கும் அன்று மசால்வடை கிடைக்காத ஏமாற்றம். அது அவர்கள் முகத்தில் பளிச்சிட்டது. சின்னத்துரை பஸ்ஸுக்குள் ஏறி உட்கார்ந்தான்.

கஜேந்திரபுரம் டவுன் பஸ்ஸுக்கு மாறி, அவன் தெருவைக் கண்டு பிடித்துப் போவதற்குள் மணி பத்தடித்து விட்டது. தெருவை அடைந்த பின் வீட்டைத் தேடுவது சின்னுவுக்குச் சிரமமாக இருக்கவில்லை. காம்பவுண்டுச் சுவர்க் கட்டையில் 'பார்க்கபந்து' என்றும், 'சுந்தர நிவாஸம்' என்றும் பித்தளை எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பலகைகள் பதிக்கப்பட்டிருந்தன.

வாசல் வளைவில் நித்தியமல்லிகை பந்தலில் பூத்துக் குலுங்கி, மலர்களைக் கீழே உதிர்த்திருந்தது. ஓசைப்படாமல் காம்பவுண்டுக் கதவைத் திறந்து கொண்டு, அவன் கீழேயே செருப்பைக் கழற்றி விட்டுத் திண்ணையில் ஏறினான். நேர் எதிரே கூடத்தில் கீழே நாலைந்து பிராயம் மதிக்கத் தகுந்த சிறுவன் வாசலைப் பார்த்துக் கால்களை நீட்டிக் கொண்டு, மடியிலிருந்த புத்தகத்தைப் புரட்டிய வண்ணம் தன் 'இஷ்டப்படி' படித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு அருகில் வாயிலுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு கத்திரிப் பூ நிறவாயில் சேலையுடன் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவள் ஏதோ தையல் பின்னுகிறாள் என்பது அவளுடைய கைகளின் அசைவிலிருந்தும், பின்னே உருண்டு கிடந்த பூநூல் பந்திலிருந்தும் சின்னுவுக்குத் தெரிய வந்தன.

ஆனால், இத்தனை நேரமும் தங்குதடையில்லாமல் வந்துவிட்ட அவன் கால்கள் ஏனோ உள்ளே அடி யெடுத்து வைத்துப் போகத் தயங்கின. பானு என்று அழைக்கலாமா?.... மார்க்கபந்துவோ அவனோ வந்தால்? அவர்கள் இந்நேரம் எங்கு போயிருப்பார்கள்? இருதயம் 'டிக் டிக்' என்று வேகமாக அடித்துக் கொண்டது. அவன் பார்வை குழந்தையிடமே லயித்தது.

அகன்ற நெற்றி. தாத்தாவைப் போல்தான் மூக்கு, விழிகள் எல்லாம். சுருண்ட கேசம், பையன் கொழுகொழு என்றிருந்தான். வெறும் உடம்பு தெரியத் தோளில் மாட்டப் பெறும் அரை நிஜார் அணிந்திருந்தான். அவன் புத்தகம் படித்ததுதான் சின்னுவுக்குச் சிரிப்பையும் ஆனந்தத்தையும் பரபரப்பையும் ஒருங்கே தந்தன.

''தாத்தா மூச்சைப் புடிச்சு ஜபம் பண்ணுவா. காந்தி, பவுடர் போட்டுக் கொள்ளுகிறாள். அம்மா ஊருக்குப் போயிட்டா, அப்பா கோபமா இருக்கா. ரவிக்குட்டி சமர்த்து...''

இந்த இடத்தில் அவன் நின்றதும் அவள், ''ரவிக்குட்டி ஒன்றும் சமர்த்து இல்லை. அசடு, அசடு! பாடம் படிக்காத அசடு!'' என்றாள்.

பானுவின் குரலாக இல்லை. அன்று அவன் கேட்ட கிளிக்குரலும் இல்லை. கட்டைத் தொண்டை. ஒரு வேளை ஜலதோஷம் பிடித்துத் தொண்டை கட்டி இருக்குமோ?

அவன் கூறுவதை அவள் மறுக்கவே பையனுக்கு அடங்காத கோபம் வந்தது.

''ரவிக்குட்டி சமர்த்து. பொன்னு அசடு. பொன்னு மன்னு, சின்னு, கொன்னு, அசடு....!''

புத்தகத்தை வீசி எறிந்து விட்டு எழுந்து நின்று அவளுக்கு ஒரு உதை கொடுத்தான் பையன்.

"உதைக்கிறாயா என்னை? இரு இரு. ரவி அசடு. ரொம்ப ரொம்ப அசடு. உன்னோடு நான் டூ. பேசமாட்டேன் போ!" கபடன் சிணுங்கினான். "அப்புறம் நான் அழுவேன்..!" என்று தன் அஸ்திரத்தைக் காட்டிப் பயமுறுத்தினான்.

"ஏண்டி! குழந்தையை அழவிடுகிறாய்? நீ வாத்தியாரம்மா உத்தியோகம் பண்ணிக் கிழிக்க வேண்டாம். நானும் அப்போதே பிடித்துப் பார்க்கிறேன், குழந்தையை அழவிடுகிறாயே?"

சின்னு இந்தக் குரலைச் செவியுற்றதும் நடுக்குற்றான். கதவிடுக்கிலே மூஞ்சூறு அகப்பட்டாற்போல... சுந்தரியம்மாளின் குரல்தான்! அவளை அவன் மறந்தே போனானே?

"நான் ஒன்றும் அழவிடவில்லை, அம்மா..." என்று மொழிந்தபடியே அவள் நூல் கண்டை எடுப்பதற்குத் திரும்பினாள்.

சின்னுவின் விழி இமைகள் அகன்றன.

அவள் பானுவுமில்லை, முதல் நாள் அவன் கண்ட அழகியுமில்லை.

இவள் இன்னும் ஒல்லி; உயரம். மாநிறம்தான். அவனை மருண்ட விழிகளுடன் அவள் நோக்கி விட்டு, "யார் நீங்கள்?" என்று கேட்டாள்.

சின்னுவுக்குச் சட்டென்று என்ன கூறுவதென்று புரியவில்லை.

கோணல் புன்னகை இலங்க, "ஸாரைப் பார்த்துப் போகலாம் என்று வந்தேன்..ஹி.." என்றான்.

அவள் விழிகளில் இருந்த மருட்சியும் பரியாதையும் அகன்றன. அலட்சியம் படர்ந்தது. "ஸார் யாரும் இல்லை, ஊரில் இல்லை" என்றாள் வெடுக்கென்று.

சின்னு திகைத்தான். நேற்று மாலை தான் அவர்கள் ஊரிலிருந்து வந்திருக்கிறார்கள். அதற்குள் ஊரில் இல்லையாவது? எல்லோரும் எங்கே? இப்படி அண்டப்புளுகு சொல்லும் இவள் யார்?

"நேற்று மாலை வந்தார்கள்? பார்த்தேனே?" என்றான் சின்னத்துரை ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு.



"அதெல்லாம் தெரியாது. அவர்கள் யாரும் இங்கே இல்லை. ஏன் இங்கே நிற்கிறீர்கள்?...வாடா, ரவி!" என்று அவள் கொஞ்சம் கடுமை தொனிக்கக் கூறிவிட்டு நகர்ந்தபோது; சின்னுவுக்கு அவமானத்தால் உடல் குறுகியது; முகம் சிறுத்தது.

"ஏண்டி, யாரங்கே? மணி பத்தரை யாகிறது. குழந்தைக்குச் சாதம் போட வேண்டாமா?"

உள்ளிருந்து வந்த குரலுக்கு, அந்தப் பெண் பொன்னு பதில் கொடுத்தது அவனைத் தூக்கி வாரிப் போட்டது. சின்னு பற்களைக் கடித்தான்.

"யாரோ ஒருத்தன், 'ஸார் எங்கே, மோரெங்கே' என்று கேட்டுக்கொண்டு உன் ரேழிதாண்டி வந்து நிற்கிறான், அம்மா! யாசகமோ, நிதி வசூலோ தெரியவில்லை. ஸாரில்லே என்றால் போகமாட்டேன் என்று நிற்கிறான்!"

பானுவின் வீட்டில் அவனுக்கு இப்படி ஒரு வரவேற்பா?

இப்படித் தலை சுழல நிற்கையிலே, குழந்தை கைகளைப் பின்னால் கட்டிக்கொண்டு அவனையே ஏறிட்டுப் பார்த்தான் நிமிர்ந்து.

சின்னு சிரித்து, பையிலுள்ள பிஸ்கோத்துப் பொட்டலத்தை எடுத்து நீட்டி, "வா, வாங்கிக்கோ!" என்றான்.

குழந்தை குழந்தைதான். யார் அவமதித்தாலும் அவன் அவமதிக்கவில்லை. இளநகையுடன் அருகில் வந்து அதை வாங்கிக் கொண்டபோது சின்னு பாய்ந்துதூக்கிக்கொண்டுகொஞ்சினான்.

"ஏண்டியம்மா, கேட்டைப் பூட்டி வைக்கக் கூடாதா? காலம் கெட்டுக் கிடக்கிறது. போனானோ இல்லையோ?.."

கீச்சுக்குரல் நெருங்கி வரவே, சின்னு சுந்தரியம்மாளைத் திகைக்க வைக்கும் எண்ணத்துடன் தன் அணைப்புக்குள் திமிறிய பையனைக் கீழே விட்டு விட்டு, வாசற்படியைத் தாண்டிச் சிரித்த முகத்துடன் கூடத்திலேயே வந்து நின்று காட்சி அளித்தான்.

ஆனால் திகைத்தது யார்? வந்தவள் சுந்தரியம்மாளா? அவள் எங்கே, இவள் எங்கே?

"யாரு நீங்க? அவர்கள் யாரும் இல்லையே?" என்று செய்தியை ஊர்ஜிதம் பண்ணினாள் அந்த அம்மாள்.

"....அ.... அவர் சம்ஸாரம் கூட இல்லையா? குழந்தையின் தாயார், நான் அறிந்தவள், பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்..... நேற்று நான் பஸ்ஸிலே பெரியவர் வரும்போது பார்த்தேன். பெரியவர் என்னிடம் பேசினார். வீட்டுக்கு வா என்று விலாசம் சொன்னார்!"

அவன் மூக்கு நுனி சிவக்கப் பட பட வென்று பேசிக் கொண்டிருக்கையிலேயே, முதல் நாள் அவன் பார்த்த நங்கை, பார்த்தால் அசைப்பில் பானுவோ என்று ஐயுறும்படி இருந்த மங்கை, கூடத்துக்குப் பின் நடையில் வந்து கொண்டிருந்ததைக் கண்டான்.

"அடாடா? வாருங்கள், வாருங்கள். யாரோடு இவர்கள் தர்க்கம் பண்ணுகிறார்கள் என்று பார்த்தேன்? என்ன மாமி? நேற்றுச் சொல்லவில்லையா? கணபதிபாளையம்.." என்று அவள் ஜாடையாக இழுத்தபோது அந்த அம்மாள் ஒரு அலைபுரண்டு மோதிவிட்டாற்போல் திணறிப் போனாள்.

"அடாடா! நான் யாரோ என்னவோ என்று எண்ணினேனே?" என்று அரைக் குரலில் முணுமுணுத்தாள். சுவர் ஓரம் இருந்த நாற்காலியைக் கொண்டு வந்து போட்டாள். "உட்



காரச் சொல், காந்திமதி!'' என்று கூறி விட்டுச் சமையலறைக்குள் புகுந்தாள். அவனை விரட்டிய மங்கை பொன்னு வெளியே தலை நீட்டவேயில்லை.

சின்னத்துரைக்குச் சிரிப்பும் வியப்பும் மேலிட்டன.

'' உட்காருங்கள். மாமிக்கு உடம்பு சரியில்லை. காலையில்தான் மாமா, தாத்தா எல்லோரும் அழைத்துப் போனார்கள்'' என்றாள் காந்திமதி.

சின்னுவின் புருவங்கள் கூடின. 'அவளுக்கு என்ன சுகக் குறைவு? இந்தக் கோயமுத்தூரில் இல்லாத வைத்தியமா? எங்கே அழைத்துப் போனார்கள்?'

கேள்விகளை அவன் உடனே கேட்கவில்லை. தொண்டை உலர்ந்துபோனாற் போல் இருந்தது அவனுக்கு. '' என்ன உடம்பு?'' என்று குழறினான்.

'' பயப்படும்படி ஒன்றுமில்லை, வழக்கமான பலஹீனம், மயக்கம்தான்.... நேற்று வந்ததுமே இப்படித்தானிருந்தாள். மயக்கம் வருவது நல்லதில்லையே? அவளுக்குப் பார்க்கும் டாக்டர் உதக மண்டலத்துக்குப் போய் விட்டான். மாமா நேரிடையாக உதக மண்டலத்துக்கே டெலிபோன் பேசினார். அழைத்துக் கொண்டு போயிருக்கிறார்கள். அங்கு போய்க் கொஞ்ச நாட்கள் இருந்தால் தேவலை என்றுதான்...'' என்று அவள் செய்தி தெரிவித்தபோது சின்னத்துரைக்குத் தலை சுழன்றது. பணம், பதவி, அந்தஸ்து எல்லாம் கூடியதும் பானுவுக்கு இந்த மாதிரி பலஹீனங்களும் வைத்தியருக்குப் புரியாத வியாதிகளும் வருகின்றனவா? பானுவுக்கா இத்தனை தடபுடல்? அசட்டுத்தனமாக அவன் என்னவெல்லாம் நினைத்தானே?

''ஆமாம், மாமியை எங்கே காணோம்? நீங்கள் யாரென்று புரியவில்லையே?'' என்று கேட்டான் சின்னு.

''பாட்டியைக் கேட்கிறீர்களா? அவர்கள் காலம் அப்போதே ஆகிவிட்டதே? ரவி ஒரு வயசு. நான் அஸ்ஸாமில் இருந்த பெண். இவர் என் தாயார்...''

சின்னத்துரை இன்னும் கொஞ்சநேரம் எதை எதையோ குறித்துப் பேசிவிட்டு எழுந்தான்.

அப்போது வாசற் கதவைத் திறந்து கொண்டு சிவப்பு சைக்கிளில் ஆரோகணித்துக் காக்கி உடுப்புக்காரன் ஒருவன் வந்தான்.

காந்திமதியின் முகத்தில் திடீரென்று இருள் படர்ந்தது. தந்தியை வாங்கிக் கொண்டு கையெழுத்துப் போடும் போது அவளுக்குக் கைகள் நடுங்கின. சின்னுவுக்கே ஏதோ இனமறியாத ஒரு படபடப்பு. தந்தி என்ற உணர்விலோ என்னவோ?

இதற்குள் அவர்கள் இருவரும் கூடக் கவலையோடு தங்கள் முகத்தை நீட்டிக் கொண்டு ரேழிக்கு வந்து விட்டனர்.

காந்தி பர்ரென்று உறையைக் கிழித்தாள். நடுக்கத்துடன் பார்த்தாள். அப்பாடி! முகம் மலர்ந்தது.

காகிதத்தை மடித்துக் கொண்டு, '' நல்ல சமாசாரம்தான் '' என்று அவர்களைக் குறிப்பாகப் பார்த்து விட்டு உறைக்குள்ளிட்டாள்.

சின்னத்துரை அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டான்.

தெரு முனை வரையிலும் கையை வீசிக் கொண்டு வந்து விட்ட சின்னுவுக்கு அப்போதுதான் சட்டென்று நினைவு வந்தது. அந்த இரவல் பையை அங்கேயே வைத்து மறந்துவிட்டானே?



அவன் திரும்பி நடந்தான். முன் போலவே கதவைத் திறந்து கொண்டு செருப்பைக் கழற்றிவைத்தான். அவன் திண்ணையில் கால் வைத்ததும் உள்ளே காந்திமதி பேசிய குரல் அவன் செவிகளில் தெளிவாக விழுந்து, சிந்தையை உலுக்கியது.

''தாத்தா இங்கிருந்து கிளம்பும்போது பூந்துறைக்குத் தான் போயிருப்பாள் என்று நிச்சயமாகத்தானே சொன்னார்? எனக்குத் தந்தியைக் கண்டு முதலில் வெலவெலத்துப் போயிற்று. அப்புறம் 'பூந்துறையில் அகப்பட்டு விட்டாள்' என்ற செய்தி பார்த்த பிறகே நிம்மதி பிறந்தது'' என்ற காந்திமதி, சின்னு வந்த அரவம் கேட்டுச் சட்டென்று நிறுத்தித் திரும்பிப் பார்த்தாள்.

சற்றும் எதிர்பாராத நிலையில் அவனைக் கண்டதாலோ என்னவோ, காந்தி மதிக்கு 'என்ன' என்றுகூடக் கேட்கத் தோன்றவில்லை.

அவனே சமாளித்துக் கொண்டான். ''பையை மறந்து வைத்து விட்டேன். தெருக்கோடி போய்த்தான் நினைவு வந்தது. பூந்துறையில் என்ன?'' என்றான் தட்டுத் தடுமாறிக் கொண்டே.

''ஒன்றுமில்லையே! உங்களைப் பற்றித் தான் சொல்லிக் கொண்டிருந்தேன். மாமி பூந்துறை அண்ணா என்று அடிக்கடி சொல்லுவார். எங்களுக்கும் நினைவில்லை, பை'' என்று சிரித்து மழுப்பிக் கொண்டு, சுவர் மூலையில் சாத்தியிருந்த பையை அவன் எடுத்துத் தந்தாள். 'பழத்தை எடுத்துக் கொண்டு வெறும் பையைத் தாருங்கள்' என்று சொல்லக் கூட அவனுக்கு நிதானமில்லை.

அவன் செருப்பை மாட்டிக் கொண்டு வெளியே வந்தான்.

'தாத்தா இங்கிருந்து கிளம்பும் போதே பூந்துறைக்குத்தான் போயிருப்பாள் என்று நிச்சயமாகத்தானே சொன்னார்? பூந்துறையில் அகப்பட்டாள்!...' மனம் திரும்பத் திரும்ப இவ்வார்த்தைகளை நீட்டிப் பார்த்தது.

இதற்கு என்ன அர்த்தம்? பானு முன்பு ஒரு நாள் மனம் கசந்து அங்கு ஓடி வந்தாளே, அப்படி இப்போதும் ஓடிப் போனாளோ?

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும் கொட்டாவியும் அசதியுமாக இருந்தது. கணபதிபாளையம் வந்து சேரும்வரை அவன் மனம் எண்ணச் சுழல்களிலே சிக்கித் தவித்தது.

நாட்கள் மலர்ந்துமலர்ந்து தேய்ந்து உதிர்ந்தன. வைகாசி, ஆனி ஓடி ஆடியும் இறுதிக்கு வந்து விட்டது. பற்றற்ற கர்ம யோகிக்குச் சமமாக ஓடும் காலத்தைப் போலவே சின்னுவும் தன் தொழிலை நடத்திக் கொண்டு வந்தான்.

கோவையிலிருந்து வரும் மூன்று மணி பஸ் ஹார்ன் ஒலி கட்டியம் கூற வந்து நின்றது. பஸ்ஸிலிருந்து முதன் முதல் இறங்கியவர் மார்க்கபந்து; சரிகை அங்கவஸ்திரம் கழுத்தை அலங்கரிக்க அவர் அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே உள்ளே வந்தார். அவருடன் இன்னொரு நரைத்தலைப் பெரியவரும் தொடர்ந்து வந்தார்.

சின்னு ஒருவித பரபரப்புடன் அவர்களைப் பார்த்துக் கோணல் சிரிப்பை நெளிய விட்ட போது, ''உன் வியாபாரத்தைக் கவனி. நாங்கள் உன்னோடு பேசத்தாண்டா வந்திருக்கிறோம். பஸ்ஸை அனுப்பு முதலில்!'' என்று அவன் வியப்பையும் திகைப்பையும் மார்க்கபந்து உச்சநிலைக்கு ஓடவிட்டார்! ஒரு வழியாய்ப் பஸ் அந்த இடத்தை விட்டுக் கிளம்பியது.

''......ம், அன்றைக்கு நீ வந்திருந்தாயாமே? காந்தி சொன்னாள்.''

''ஆமாம். பார்க்கலாம் என்று வந்தேன். நீங்களும் இல்லை. பானுவுக்கும் கூட உடம்பு சரியாக இல்லை. ஊரில் இல்லை என்று சொன்னார்கள்.''

''ஆமாண்டா! எதிர்பாராத பயணம். இங்கிருந்து போனேனா? ஒரு கல்யாணக் கடிதாசு வந்திருந்தது. ரொம்ப வேண்டியவர்கள். அவன் எனக்குக் கீழ் முப்பது வருஷம் வேலை செய்திருக்கிறான். கூனூரில் கல்யாணம். பானுவும் என்னவோ உடம்பு கிடம்பு அங்கே டாக்டர் இருக்கிறான், காட்டிக் கொள்ளவேண்டும் என்று வந்தாள். ஆமாம், குளுகுளுவென்று அகண்ட காவேரிக் கரை, கிளி கொஞ்சும் ஊர், அந்தப் பூந்துறையை விட்டு இந்த வறட்சிக்கு ஏன் வந்தாய்?''

மூச்சு விடாமல் அவர் சொன்ன கதை சின்னுவைத் தலைசுழல வைத்தது.

எது உண்மை?..தந்தி?..பூந்துறையில் அகப்பட்டவள்...?

கேட்டுவிட அவனுக்கு உதடுகள் துடித்தன.

''ஏண்டா! கேட்கிறேன், பதிலைக் காணோமே? அந்தப் பசுமையைப் பார்த்தாலே பசி தீரும். இந்த வறட்சிக்கு எங்கே வந்தாய்?'' என்றார்.

''..அம்மா செத்துப் போன பிறகு எனக்கும்அங்கே இருக்கப் பிடிக்கவில்லை, மாமா! ஐயாசாமி வேறு பிள்ளையோடு போய் விட்டார். நானும் இதை உதறி விட்டு ஏதேனும் வேலை பார்க்கலாம் என்று அலையும்பொழுது ஒருவன் இங்கே மில்லில் வேலை வாங்கித் தருகிறேன் என்று அழைத்து வந்தான்......அந்தக் கதையெல்லாம் இப்போது எதற்கு, ஸார்?'' என்று கூறிவந்த சின்னு, பேச்சை மாற்ற எண்ணி, ''இப்போது பானுவுக்கு உடம்பு தேவலையில்லையா?'' என்று மெள்ளக் கேட்டு வைத்தான்.

''தேவலை. உடம்பென்ன? பலஹீனம் தான். இருக்கட்டும், இனி மேல் நாம் வந்த காரியத்தைச் சொல்லலாமா?'' என்று அருகிலிருந்தவரைப் பார்த்தார் மார்க்கபந்து.

கணகணவென்று எதிர்க் கடையில் சைக்கிள் மணியை யாரோ அடித்தார்கள். விஷயம் விளங்காத சின்னுவுக்கு வியப்பும், அவர்கள் சொல்லப் போவது நல்ல செய்தியாக இருக்கக் கூடாதா என்ற எண்ணமும் ஒருங்கே தோன்றின. (அடுத்த இதழில் முடியும்)

# செய்திகளைச் சேர்த்தளிப்பது எஃகே

நீங்கள் தினந்தோறும் படிக்கும் செய்தித்தாள்களைத் தயாரிப்பது எது தெரியுமா? எஃகு தான். காகிதத்தைத் தயாரித்து, செய்திகளைத் திரட்டி அச்சிடுவதும் எஃகு இயந்திரங்களே. நம்முடைய தினசரி வாழ்க்கையில் எஃகானது ஒரு இன்றியமையாத அம்சமாகி விட்டது.

## டாடா ஸ்டீல்

நாட்டின் நன்மைக்கே

இன்று எஃகு நாட்டின் கவனத்தில் முதன்மையுற்றிருக்கிறது. இந்தியாவின் முன்னேற்றத்திற்கு உறுதியான அஸ்திவாரம் நிறுவ, எஃகு உற்பத்தி விரைவாக விஸ்தரிக்கப்பட்டு வருகிறது.






குறிப்பு: இந்த விஷயத்தைத் தங்களிடம் நேரில் சொல்வது இங்கிதமாயிருக்காது என்று எண்ணியே கடிதம் எழுதுகிறேன். தங்களால் ஏற்பட்ட இந்தத் தபால் செலவைத் திருப்பித் தந்துவிடுவீர்கள் என்று எதிர்பார்க்கிறேன். —பா. பாஸ்கரன்

★

மிஸ்டர் பாஸ்கரன்,

நீங்கள் ஒரு கலையுணர்ச்சி இல்லாத கட்டையாக இருக்க வேண்டுமென்று

திரு சாம்பமூர்த்தி அவர்களுக்கு,

பக்கத்து வீட்டில் இருக்கும் தங்களுக்குக் கடிதம் எழுதிப் பணத்தை வீணாக்க வேண்டிய நிலை ஏற்பட்டதற்கு வருந்துகிறேன். ஆனால் அப்படிச் செய்யாமலும் இருக்க முடியவில்லை. தங்கள் வீட்டிலிருக்கும் இசைக் கருவி, அதாவது தங்கள் கிராமபோன், எடிசன் காலத்தில் செய்ததாக இருக்க வேண்டுமென்று நம்புகிறேன். அதுதான் இல்லையென்றாலும் தங்களிடம் கைவசம் இருக்கும் இசைத் தட்டுகள் மௌனப்படக் காலத்தில் தயாரிக்கப்பட்டவை என்பதையாவது நிச்சயமாகச் சொல்லலாம். தாங்கள் அவற்றைத் தினமும் இரவு வேளைகளில் உபயோகிப்பது தங்களுடைய தைரியத்தையே காட்டுகிறது. பக்கத்து வீட்டிலிருந்துகொண்டு இரண்டொரு நாள் கேட்ட எனக்கே பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறது. ஆனால் அதே வீட்டிலிருந்து கொண்டு வருஷக்கணக்காகக் கேட்டுக் கொண்டிருக்கும் தங்களுக்கு இன்னும் அப்படி ஏற்படாதது குறித்து ஆச்சரியப் படுகிறேன். தயவுசெய்து இதை நிறுத்தி எங்களைக் காப்பாற்றும்படி வேண்டுகிறேன்.

இப்படிக்கு
அன்புள்ள பக்கத்து வீட்டுக்காரர்,
**பா. பாஸ்கரன்**

யூகிக்கிறேன். பழைய பொருள்கள் என்றாலே இளப்பமாகக் கருதும் இந்தக் காலத்து இளைஞர் கூட்டத்தைச் சேர்ந்த நீங்கள் அப்படி இருப்பதிலும் ஆச்சரியமில்லை. அரசாங்கத்தார், புதைபொருள் ஆராய்ச்சி இலாகா என்று ஒன்றை வைத்திருப்பதிலிருந்தே பழம் பொருள்களின் பெருமையை உணர்ந்துகொள்ளலாம். ராமாயணம், பாரதம் எத்தனை வருஷங்களுக்கு முற்பட்டவை? அவற்றை யாராவது ஒதுக்கிவிட்டார்களா? அதுபோல்தான் நான் வைத்திருக்கும் இசைத்தட்டுகளும்.

முப்பது வருஷங்களாக இதே வீட்டில் இதே இசைத் தட்டுகளைப் போட்டுக் கொண்டு வருகிறேன். சுற்றியுள்ளவர்களில் ஒரு பயல் மூச்சுக் காட்டினதில்லை. முந்தா நாள் பக்கத்து வீட்டுக்குக் குடி வந்த நீங்கள் என்னை மிரட்டுகிறீர்கள். இந்தப் பூச்சாண்டிகளுக்கெல்லாம் நான் பயந்தவனில்லை. உம்முடைய சௌகரியத்துக்காக என்னுடைய சௌகரியத்தை இழக்க நான் தயாராயில்லை.

இப்படிக்கு,
**சா. சாம்பமூர்த்தி**

குறிப்பு: உம்முடைய பின்குறிப்பைப் படித்தேன். சிக்கன சிகாமணி என்ற பட்டம் உமக்கே தரும்! — சா. சாம்பமூர்த்தி

# கிராமபோன் காதல்

திரு. சாம்பமூர்த்தி,

முப்பது வருஷங்களாகவே இதே இசைத் தட்டுகளை நீங்கள் கேட்டுக் கொண்டு வருகிறீர்கள் என்பதைப் படித்த பொழுது மூர்ச்சையடைந்து விட்டேன். அதன்பலனைத் தங்கள் மூளைக்கு ஏற்பட்ட கதியைக் குறித்து வருந்துகிறேன். பழமை பழமை என்று பஞ்சாங்கம் படிக்கும் உங்களைப் போன்ற பத்தாம்பசலிகளால்தான் நம் நாடு இன்று குட்டிச்சுவராய்ப் போயிருக்கிறது. மேலும் இத்தகைய பொருள்களை இந்தக் காலத்தில் யாரும் ஏறிட்டுப் பார்ப்பதில்லை. மியூஸியத்தில்தான் வைத்திருப்பார்கள். உங்களுடைய கிராமபோனையும் நல்ல விலைக்குத் தள்ளி விடுவதற்கு ஒரு வழி சொல்லுகிறேன். அதாவது மியூஸியத்தின் டைரக்டருக்கு இதைப் பற்றி ஒரு கடிதம் எழுதிப் போடுங்கள். அடுத்த நாள் கதறிக் கொண்டு வந்து ஆயிரக் கணக்கில் கொட்டிக் கொடுத்து விட்டுக் கிராமபோனைக் கொண்டு போவார்கள். இந்த மாதிரி செய்யாவிட்டால் அப்புறம் நீங்களே மியூஸியத்தில் போய் இருக்க வேண்டி நேரிடும்.

இப்படிக்கு,
பா. பாஸ்கரன்

குறிப்பு: உங்களைவிட நான் அப்படியொன்றும் சிக்கன சிகாமணி அல்ல என்பதை நீங்கள் வைத்திருக்கும் இசைத் தட்டுகளிலிருந்தே அறிந்து கொள்ளலாம்.
பா. பாஸ்கரன்

★

மிஸ்டர் பாஸ்கரன்!

நீங்கள் வார்த்தைகளை அளந்து எழுதக் கற்றுக்கொள்ள வேண்டும். உம்முடைய கடிதத்தை வைத்துக்கொண்டே இருபதினாயிரம் ரூபாய்க்கு உம்மேல் மானநஷ்டவழக்கு போட முடியும் என்பதை அறிவீரா? ஜாக்கிரதை! என்னுடைய மூளையெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. உம்முடைய மூளையில்தான் ஏதோ கோளாறு இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பழமை சம்பந்தமாக இவ்வளவு முட்டாள்தனமாக உளறியிருக்க மாட்டீர். எந்த ஒரு நாடு தன்னுடைய பழம் பெருமையை எண்ணிப் பார்க்கத் தவறிவிட்டதோ அந்த நாடு முன்னேறாது என்று ஒரு அறிஞர் கூறி யிருப்பதை உமக்கு ஞாபகப்படுத்துகிறேன். அந்த வகையில் இன்று நாடு குட்டிச்சுவராகப் போவதற்குக் காரணம் உம்மைப் போன்ற இன்னார் கூட்டம்தான். அது நிற்க.

என்னுடைய கிராமபோனை நான் உபயோகிப்பதோ அல்லது ஒழித்து விடுவதோ என் சொந்த விஷயம். அதில் நீங்கள் தலையிடுவது அநாகரிகம். இனிமேலாவது அப்படிச் செய்ய மாட்டீரென்று நம்புகிறேன்.

இப்படிக்கு,
சா. சாம்பமூர்த்தி

★

மிஸ்டர் சாம்பமூர்த்தி!

வார்த்தைகளை அளந்து உபயோகிப்பதற்கு அவை என்ன மணிலாக் கொட்டை என்று நினைத்தீரா? என்னிடம் அப்படி வார்த்தைகள் அளக்கும் கருவி இல்லாததால் உம்முடைய வேண்டுகோளுக்கு இசைய முடியவில்லை. மேலும் நான் எப்படி நடக்கவேண்டும் என்பது எனக்குத் தெரியும். அது என் சொந்த விஷயம். அதில் நீங்கள் தலையிட வேண்டியதில்லை. பிரமாதமாக வழக்கைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டீரே. நீங்கள் உம்முடைய கிராமபோன் மூலம் பிறருக்குத் தொல்லை கொடுப்பதற்கு உங்கள் மேல் ரூபாய் எண்பதினாயிரத்துக்கு வழக்குப் போட முடியும் என்பதை நீங்கள் அறிவீரா? மரியாதையாகச் சொல்கிறேன், உமது கிராமபோனைத் தொலைத்து விட்டு மறு காரியம் பாரும். இல்லாவிட்டால் நான் நேரடி நடவடிக்கை



அன்புமணி




"ஹலோ......ஹலோ......நான் நான் டாக்டர் பேசறேன்!"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

களில் இறங்க நேரிடும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பா. பாஸ்கரன்

★

மிஸ்டர் பாஸ்கரன்!

முற்பிறவியில் நீங்கள் என்ன சோளக் கொல்லைப் பொம்மையாகப் பிறந்தீரோ, பயம் காட்டுவதற்கு? ஆனால் இது பனங்காட்டு நரி. சலசலப்புக்கு அஞ்சாது. சுற்றியிருக்கும் அத்தனை பேருக்கும் இடைஞ்சலாக இல்லை. உமக்கு மட்டும்தான் என்னுடைய கிராமபோன் இடைஞ்சலாக இருக்கிறதாக்கும்? என்னுடைய கிராமபோனை நான் கை விட முடியாது. உம்மாலானதைப் பார்த்துக் கொள்ளும்!.

சா. சாம்பமூர்த்தி

★

ஐயா, சாம்பமூர்த்தி!

இனிமேல் பொறுக்க முடியாது. ஒன்று உமது கிராமபோன் இருக்க வேண்டும். அல்லது நான் உயிருடன் இந்த வீட்டில் இருக்க வேண்டும். சட்டத்தைப் பற்றி ரொம்பப் பேசுகிறீர். உம்மைப்போல் உயிரைக் குடிக்கும் கிராமபோன் வைத்திருப்பவர்கள் இந்த உலகத்திலேயே இருக்கக்கூடாதென்று ஒரு சட்டம் புதிதாக இயற்றலாம் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். மக்களுக்காகச் சட்டமே அன்றி, சட்டத்துக்காக மக்கள் அல்ல. சமாதானமாகச் சிக்கலைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று பார்த்தால் பிடிவாதத்தில் நீங்கள் எடிஸனையும் மிஞ்சிவிட்டீர். இனிமேல் கடிதங்கள் எழுதுவதால் பிரயோசனமில்லை. நேரமும் பணமும் வீணாவதுதான் மிச்சம்; ஆகையால் இக்கடிதம் கண்ட இரண்டு நாட்களுக்குள் உமது கிராமபோன் தொலையாவிட்டால் நானே உமது வீட்டுக்கு வந்து அதைத் தொலைத்து விடுகிறேன். இதுவே என் கடைசி எச்சரிக்கை!

பா. பாஸ்கரன்



அன்புள்ள சாம்பமூர்த்தி அவர்களுக்கு,

முதலில் என்னை மன்னித்துவிடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். எது உண்மையான சங்கீதம் என்பதை அறியும் வாய்ப்பு நேற்றுத் தான் எனக்குக் கிடைத்தது. தாங்கள் வைத்திருக்கும் அத்தனை இசைத் தட்டுகளும் இசைப் பொக்கிஷங்கள். என்னுடைய அறியாமையால் அவற்றை இகழ்ந்தேன். அதற்காக வருந்துகிறேன்.

நேற்று நான் உங்கள் வீட்டுக்கு வந்திருந்த போது நீங்கள் வீட்டில் இல்லாமல் போய் விட்டீர்கள். தங்கள் புதல்வி சீதா என்னைத் திணற அடித்து விட்டாள், உபசாரத்தால்! உங்கள் கடிதத்திலிருந்து நீங்கள் கொஞ்சம் கடுமையானவராக இருப்பீர்கள் என்று நினைக்கிறேன். ஆனால் சீதாவின் அடக்கத்தைப் பார்த்தபொழுது எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது.

நிற்க. உங்களிடம் ஒரு விஷயம் தனியாகப் பேசவேண்டும். தங்களுக்கு எப்போது சௌகரியப்படும் என்று தெரிவித்தால் நல்லது.

பா. பாஸ்கரன்

குறிப்பு: இதற்கு முன் நான் ஏதாவது தெரியாத்தனமாக எழுதியிருந்தால் அவற்றை மறந்து மன்னித்து விடும்படி மீண்டும் கேட்டுக் கொள்ளுகிறேன். —பா. பா.

★

அன்புள்ள பாஸ்கரனுக்கு,

உன்னை நேற்று சந்தித்ததிலிருந்து எனக்கு ஒரே மகிழ்ச்சியாயிருக்கிறது. இப்படி ஒரு அமைதியான பையன் எப்படி அவ்வளவு காரசாரமான கடிதங்கள் எழுதினான் என்று ஆச்சரியப்பட்டேன். நிச்சயம் அவை தமாஷாய்த்தான் இருக்க வேண்டும் என்றும் ஊகித்துக் கொண்டேன். கையில் வெண்ணையை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைந்ததைப்போல் ஆகிவிட்டது என் கதை. சீதா பாக்யசாலி என்று நான் மட்டும் சொல்லவில்லை. அவளே ஒப்புக் கொண்டாள்.

வருகிற சித்திரை மாதம் ஒரு நல்ல முகூர்த்தம் இருப்பதாக அறிகிறேன். உன் சம்மதம் வேண்டும்.

சா. சாம்பமூர்த்தி

குறிப்பு: அந்தக் கிராமபோன் உனக்குப் பிடிக்காவிட்டால் விற்று விடும்படி சீதா சொல்கிறாள். உன் விருப்பம் என்ன? —சா. சா.

★

அன்புள்ள மாமா அவர்களுக்கு,

கிராமபோனை விற்க வேண்டாம் என்று சீதாவிடம் சொல்லுங்கள். அது ஒரு பெரிய கலைப் பொக்கிஷம் என்று நான் கருதுகிறேன். எனக்குக் கலை உணர்ச்சியை ஏற்படுத்தியதே அதுதானே?

பாஸ்கரன்

குறிப்பு: முகூர்த்தத்தை அவ்வளவு தள்ளிப் போட வேண்டாம் என்று எண்ணுகிறேன். என்றாலும் தங்களுக்கு எது உசிதமென்று தோன்றுகிறதோ, அதன்படி செய்யுங்கள். தங்கள் விருப்பத்துக்கு விரோதமாக நான் எதுவும் சொல்ல மாட்டேன் என்பது தங்களுக்குத் தெரிந்ததுதானே! —பா. பா.

## 'அனஸின்'

## ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளது

1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்
3. பினைஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விசேஷமான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாகவும் அபாயமின்றியும் நிச்சயமாகவும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனஸினுக்கு நிகரொன்றில்லை... அனஸினைப் போல தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது இருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டுபண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
'அனஸின்'
வேண்டுமென்றே
கேளுங்கள்






## 4. நாற்கால் மண்டபம்!

**வா**ழ்க்கையில் கட்டுதிட்டங்கள் வேண்டும். கட்டுதிட்டமில்லாத வாழ்க்கையைத் 'தான்தோன்றிப் போக்கு' எனலாம். இதனால் விளையும் இன்னல்கள் எத்தனை எத்தனையோ.

உணவு, உறக்கம், உணர்ச்சி வசப்படாமை, ஒழுக்கம் இவற்றில்தான் கட்டும் இட்டமும் வேண்டியது. மனத்துக்கும் சரீரத்துக்கும் உள்ள சம்பந்தத்தைத்தான் ஏற்கெனவே விளக்கியாயிற்றே? ஆகவே, மனம் சிதைந்தாலும் சரீரத்தின் ஆரோக்கியம் கெடும். சரீரம் நலிவுற்றாலும் மானஸிக ரோகங்கள் உண்டாகும். இரண்டுமே நல்ல நிலையிலிருக்க வேண்டியது அவசியம். இதற்கு அனுகுணமாக நாம் கட்டு திட்டங்களை நிறுவிக் கொள்ள வேண்டும்.

அதிகம் வளர்த்துவானேன்? ஒவ்வொரு நாளும் நமது வாழ்க்கை இன்ன தரத்தில்தான் இருக்க வேண்டும் என்ற ஒருவிதத் திட்டம் வேண்டும். காலையில் எழுந்திருப்பது முதல் இரவு படுக்கப் போகும் வரையில் நாம் என்னென்ன செய்ய வேண்டும், என்னென்ன செய்யக் கூடாது என்று வரையறுக்கப்பட்ட ஒரு திட்டம்,—அதாவது தினசரி நடக்க வேண்டிய முறை, அவசியம். இதைத்தான் நமது வைத்திய நூல்களில் "தினசரியை" என்று வகுத்துள்ளனர். சமய நூல்களில் இதை "நித்யம்", "ஆன்ஹிகம்" என்ற பெயர்களால் அழைத்துள்ளார்கள். இரு கோஷ்டியாரும் வலியுறுத்துவது ஒரே விஷயத்தைத்தான். சொற்களில் வித்தியாசம் இருக்கலாம். சொல்லும் வகையில் வேறுபாடுகள் இருக்கலாம்; பாஷையில் வித்தியாசம் இருக்கலாம். ஆனால் விஷயமும் அதன் அடிப்படை உண்மையும் ஒன்றேதான்.

ஆகாரம், சயனம், பிரம்மசர்யம் இம்மூன்றும் சரீரத்தை ஆரோக்கிய நிலையில் தாங்கி நிற்கும் தூண்களைப் போன்றவை. அட! வேடிக்கையாயிருக்கிறதே! மூன்று கால் மண்டபம்கூட உண்டா என்று கேட்கிறீர்களா? இல்லை, இல்லை. நாலாவது தூணும் இருக்கிறது மண்டபத்துக்கு. அது தான் ஒழுக்கம். அதை நல்லொழுக்கம்—நெறி—நன்னெறி—சீலம்...நற்சீலம் என்றெல்லாம் பெயரிட்டு அழைப்பார்கள். இதுவே மனத்தை ஆரோக்கிய நிலையில் தாங்கி நிற்கும் தூண். நாற்கால் மண்டபம் பூர்த்தியாயிற்றல்லவா? சரீரமும் மனமும் ஒன்றுக்கொன்று துணைபுரியவும் இரண்டுமே ஆரோக்கிய நிலையில் திடம் பெற்றிருக்கவும், நாம் நல்வாழ்வு வாழவும் அனுசரிக்கத்தக்கத் தினசரி வாழ்க்கைத் திட்டமொன்று இருக்கிறது. அதைத்தான் "தினசரியை" என்பர்.

நம் நாட்டு வைத்திய விஷயமான எந்த நூலை எடுத்துக் கொண்டாலும் அதில் முதன் முதலாக வலியுறுத்திச் சொல்லப்படுவதுஇந்தத் "தினசரியை" தான். இதில் சொல்லப்பட்ட ஆகாராதிகளின் நியமம் எல்லாக் காலங்களுக்கும் ஏற்றதாக ஆகுமா? பருவங்கள் மாறுகின்றன. அவற்றின் காரணமாகச் சரீரத்தின் நிலையிலும் மாற்றங்கள் ஏற்படத்தான் செய்யும். ஆகவே "தினசரியை"யில் வகுக்கப்பட்ட ஆகாரம், ஓய்வு, உறக்கம், ஒழுக்கம் ஆகியவற்றின் திட்டங்கள் ஒருவகை பொது விதிகளாகும். பருவங்களின் மாற்றங்களை யனுசரித்து அந்தந்தக் காலத்துக்குத் தக்கபடி இந்த உணவு வகைகளை மாற்றிக் கொள்ளவும் வேண்டும். இவ்விதம் பருவ காலங்களை

அனுசரித்து நமது ஆகாராதிகளையும் வரையறுத்து விளக்கும் விஷயத்தை நமது வைத்திய நூல்கள் ''ருதுசரியை'' என்று அழைக்கின்றன. ஆரோக்கிய வாழ்வையும் நீண்ட ஆயுளையும் பெற வேண்டுமென்றால் முதன் முதலில் நாம் தெரிந்து தெளிந்து கொள்ள வேண்டியது இந்தத் 'தினசரியை'யும் 'ருதுசரியை'யுமாகும்.

மனமானது எப்பொழுதும் இயங்கிக் கொண்டே இருக்கும் இயல்பு பெற்றது. நமது இந்திரியங்கள் இழுத்த வழியி லெல்லாம் மனம் செல்லுமானால்.....? மனத்தின் ஆரோக்கிய நிலை கெடத் தான் செய்யும். மனத்தின் ஆரோக்கிய நிலை கெடுமானால் தேகத்தின் ஆரோக் கியமும் கெடத்தானே வேண்டும்!

ஆகவே மனசை இந்திரியங்கள் இழுக் கும் வழியில் செல்ல விடாமல் நன்னெறி நல்வழிகளைப் பின்பற்றி இயக்க வல்ல சில சிறந்த கட்டு திட்டங்கள் கட்டா யம் இருக்க வேண்டும். இவ்வகையில் மனசுக்குச் சரீரமும் துணைபுரிய வேண் டும். மனத்தை நல்வழிப் படுத்தி ஆரோக்கிய நிலையில் நிறுத்தத் துணை புரியும் ஆகாரங்களை ஏற்பது, பேச்சு செயல்களிலும் இதற்கு ஹிதமான கட்டு திட்டங்களை அறிந்து அவற்றை நடைமுறையில் புகுத்துவது மிக மிக அவசியம். இவற்றையும் ஒன்றுபடுத் தித் தான் இந்தத் 'தினசரியை' 'ருது சரியை'களை வகுத்துள்ளார்கள் நம் நாட்டு வைத்திய நூல்களை இயற்றிய பெரியோர்கள்.

நம்மையுமறியாமலே அல்லவா மனம் இயங்குகிறது? இதை நாம் எப்படிக் கட்டு திட்டங்களுக்குக் கொண்டு வருவது? இது பெரிய கேள்வி தான். சரீரத்தை ஒரு ரதமாகவும், இந்திரியங்களை அதில் பூட்டிய குதிரைக ளாகவும், ஒப்பிட்டு அறிவு என்னும் கடிவாளத்தைப் பிடித்து நேரான வாழ்க்கைப் பாதையில் செலுத்த வேண் டும் என்று கூறியுள்ளான் கீதாசாரி யன். கீதாசாரியனின் உபதேசங்களுக்கு எத்தனையோ பெரும் மேதைகள் பாஷ் யம் எழுதியுள்ளார்கள். இவ்விஷயத் தில் நானும் நடுவில் குறுக்கிட்டு ஏதா வது எழுதுவது, அந்துப் பூச்சி தானும் ராஜாளி இனத்தைச் சேர்ந்ததாகக் கூறிக் கொண்ட கதையாகத்தான் முடி யும். ஆனால் வைத்திய நூல்களில் மனத்தைப் பற்றியும், மானஸிகரோகங் களின் காரணங்களைப் பற்றியும் விளக் கும் பொழுது இதே உதாரணத்தைக் கையாண்டிருப்பதால் நானும் இங்கு இதைச் சுருக்கமாக நினைவூட்ட நேரிட் டது. இந்திரியங்களாகிற குதிரைகளின் கடிவாளத்தை விட்டு விட்டாலோ...? நெறிகெட்டு அக்குதிரைகள் கண்டபடி ஓடித் தமக்கும் தேருக்கும் சாரதிக் கும் படுநாசத்தையே தேடி விடும். அவ்வாறின்றி மனத்தையும் நெறி கெடாதபடி கட்டு திட்டங்களுக்குட் படுத்திப் பழக்க வேண்டும். இந்தப் பழக்கம் நாளடைவில் இயல்பாகிவிடும். எனவே, இது சம்பந்தமான ஒழுக்க சீலங்களையும் 'தினசரியை' 'ருதுசரி யை'களுடன் சேர்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும். மனோ வேகங்களுக் குப் பணியலாகாது.

மனோ வேகங்களைப் போலவே காயிக மான, அதாவது உடல் சம்பந்தமான சில வேகங்களும் உண்டு. மல ஜலங் களைக் கழித்தல், தும்மல், இருமல், பசி, தாகம் — போன்றவை இவ்வித வேகங் களுக்கு உதாரணங்கள். ஆரோக்கி யத்தை உத்தேசித்து இவ்வகை வேகங் களுக்குத் தடை போடலாகாது. இவ் வேகங்களின் விஷயத்தையும், தின சரியை ருதுசரியைகளுக்கு அடுத்தபடி யாகத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

பிறகுதான், வந்துற்ற வியாதிகளுக்கு வைத்தியத்தைத் தெரிவித்தல் முறை. ''சுக்கும் திப்பிலியும் புராண மிளகும் காயம் கறுஞ் சீரகம்...'' என்பவை எல்லாம் மேற்சொன்ன விஷயங்களை விளக்கிய பிறகுதான் எடுத்துக் கொள்ளப்படும்.

அப்போது ஒருவாரம் வைத்திய விஷய மான கட்டுரை; ஒரு வாரம் வாசகர் களின் கேள்விக்குப் பதில் என்ற விதத் தில் எழுதுவதென உத்தேசம். இது தான் இக்கட்டுரைகளை எழுதும் வகை பற்றிய திட்டம்.

வாசகர்களின் கேள்விகளுக்குப் பதில் என்ற வகையில்—ஒரு விஷயத்தை இப் போதே தெரிவித்துவிடுகிறேன். ஒருவர் கேட்ட கேள்வியைப் பலபேர்கள் திரும் பத்திரும்பக் கேட்க நேரிடலாம். ஆனால் ஒரே பதிலை மீண்டும் மீண்டும் எழுதிக் கொண்டிருக்க முடியுமா? ஒருதரம் ஒருவர் கேட்ட கேள்வியைப் பிறகு கேட்கும் நேயர்களுக்குப் பதிலெழுதிப் பிரசுரிக்கும்படி 'கல்கி'யைக் கேட்க இயலாது. தனிப்பட்ட தபாலில் பதில் எழுதலாம். ஆனால் இவ்வகையில் பதில் எழுத வேண்டிய தபால்கள் அளவுக்கு மீறி விடுகின்றன. இதைக் கட்டுப் படுத் தவும் ஒரு திட்டம் வேண்டுமல்லவா? இதற்கு என்ன செய்யலா மென்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பை நேயர்களே தான் ஏற்றுக்கொள்ளட்டுமே! (தொடரும்)

# நீங்கள் செய்யும் தொழில் என்ன?

வியாபாரம் . . . தச்சுவேலை . . . எலக்டிரிஷியன் . . .
மெகானிக் . . . இஷ்டமான பொழுது போக்குத்தொழில்?




எதுவாகிலும், இதுவரை விற்பனை செய்யப்படாததும், ஒவ்வொருவராலும் வாங்கக்கூடிய விலையில், கச்சிதமான, சக்திநிறைந்த 'உல்ப் கப்' ¼" எலக்டிரிக் டிரில், உங்களுக்கு மிகவும் அத்தியாவசியம்.
முதன் முதலில் 'உல்ப் கப் டிரிலுடன்' தொடங்கி, உங்கள் தொழிற்சாலை முழுவதும், மின்சார சக்தியால் செலுத்தப்படும் ஆயுதங்களால் முன்நிரப்பு செய்யுங்கள்.
இதுவரை கை ஆயுதங்களால் செய்யப்பட்டுவரும், துவாரமிடுதல், பாலிஷ் செய்தல், ரம்பம் அறுப்புபோன்ற ஜோலிகளிலுள்ள பிரயாசம், தாக்கம், இவைகளை 'உல்ப் கப்' ஏற்கொண்டு, உங்களுக்கு சௌகரியத்தை அளிக்கும். இலகுவாய் திருப்பக்கூடிய மட்டுதன்மையில் இலேசானதும் கூட. மிகவும் சுலபமாக வேலை செய்யலாம்.
சிரமமின்றி உங்களால் அதிகப்படியான வேலைகள் செய்யமுடியும்.











P3RL.1

ராலிஸ் இன்டியா லிமிடெட்,

320, லிங்கச்செட்டித் தெரு, மதராஸ். பம்பாய் • கல்கத்தா • டெல்லி

---

தேவியின் கடிதம்

# பெண்களின் எதிர்காலம்

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சுஜாதா,

பெண்களுடைய கல்வியைப் பற்றி நான் எழுதுவதற்குள் நீ உத்தியோகம் பார்ப்பதைப் பற்றிக் கேட்டு எழுதி விட்டாயே.

பெண்கள் உத்தியோகம் பார்ப்பதில் சாதகம், பாதகம் இரண்டும் இருக்கின்றன. மதிப்புக்குரிய ஆசிரியை ஒருவர் என்னிடம் வருத்தப்பட்டுச் சொன்னார். பள்ளியில் படிக்கும் ஒரு பெண் பரீட்சையில் தேறவில்லையாம். அந்தப் பெண்ணின் தாயார் ஆசிரியையிடம் ''உங்களைப் போல் என் பெண் உத்தியோகம் பார்க்க வேண்டிய அவசியமில்லை. என் பெண்ணுக்கு அதிக மார்க்கு போட்டுப் பாஸ் போடுவதற்கு என்ன?'' என்றாளாம். இது மிகவும் தவறான பேச்சு. நம்முடைய பெண் குழந்தைகளைப் புதுமைப் பெண்களாக உருவகப் படுத்தும் ஆசிரியைகள் பெண் குலத்துக்கே சேவை செய்பவர்கள். தெய்வம் போன்றவர்கள். அதைப் போலவே பெண் டாக்டர்களும் பெண் குலத்துக்கு இன்றியமையாத தொண்டாற்றுகிறார்கள்.

காலம் என்பது வேகமாக உருளும் சக்கரம். அதன் மேல் நாம் பிரயாணம் செய்கிறோம். சில செயல்கள் நாம் விரும்பியோ, விரும்பாமலோ செய்ய வேண்டி வருகின்றன. அப்படி இல்லா விட்டால் சக்கரத்தின் அடியில் அகப்பட்டு நசுங்கி விடுகிறோம்.

கணவனுடைய ஆதரவைஇழந்த பெண்கள், விதியின் சோதனையில் பாதிக்கப்பட்ட பெண்கள், தங்கள் மனதை மாற்றிக் கொண்டு சமூகத்துக்குப் பணிகள் ஆற்றுவதுடன் தங்கள் நிலையையும் கௌரவமாக உயர்த்திக் கொள்ள உத்தியோகம் அவசியமாகும். அவர்கள் ஆற்றல் அவிந்து போய், சதா வருந்தி ஆத்மாவைத் துன்புறுத்திக் கொள்வதில் யாருக்கும் பயனில்லை அல்லவா? குழந்தைகள் என்ற பொறுப்பு இல்லாதவர்களும் உத்தியோகம் பார்ப்பது சுலபமாகும்.



மத்தியதரக் குடும்பத்துப் பெண்கள் வருமானத்துக்கும் செலவுக்கும் சரிக்கட்ட முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் நிலை மிகவும் துக்ககரமானது. அவர்களில் தேர்ச்சி பெற்று ஆற்றலுடைய பெண்கள் உத்தியோகம் பார்ப்பதில் குடும்ப வருவாய் அதிகரிக்கும்; சமாளிக்கலாம்.

கூலி வேலை செய்பவர்களைப் பற்றிக் கவலை இல்லை. குடும்பத்தில் ஐந்து நபர்கள் பெண்களோ, ஆண்களோ, குழந்தைகளோ இருந்தால் அனைவரும் சம்பாதிக்கிறார்கள். அவர்கள் வருவாய் அதிகரித்து வாழ்க்கைத்தரம் உயர்ந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. இவைகள் எல்லாம் சாதகமான அம்சங்கள்.

ஆனால் சில பெண்களுக்கு, நாம் சம்பாதிக்கிறோமென்ற கர்வமும் உண்டாகி விடுகிறது. இந்தக் கசப்பான உண்மையை நாம் அலட்சியம் செய்வதற்கில்லை. ஒரு பெரிய கஷ்டத்தை நிவர்த்திக்க முற்பட்டால் வேறு சில சில்லறைக் கஷ்டங்கள் இருக்கத்தான் இருக்கும்.

அடுத்தபடி குடும்பத்தைப் பார்த்து. குழந்தைகளை வளர்த்து எல்லாம் செய்வது முழுநாள் வேலை ஆகும். கணவன் போதுமான வருமானமுள்ளவனாக இருந்தாலும் அல்லது சொத்து உள்ளவனாக இருந்தாலும் பெண்கள் உத்தியோகத்தைத் தேட வேண்டாம். அறிவு ஆற்றலை விருத்தி செய்வதுடன் வீட்டின் பொறுப்பை ஏற்று அழகாக நடத்தினால் போதுமானது. இரண்டு பேரும் வீட்டை விட்டுப் போனால் அந்த அளவில் வீட்டின் நிர்வாகம் பாதிக்கப்படும்.

முன்னேறிய நாடுகளில் செல்வச் சீமாட்டிகளைத் தவிர அனைவரும் படித்து உத்தியோகம் தேடிக் கொண்ட பிறகுதான் கல்யாணத்தைப் பற்றிச் சிந்திக்கிறார்கள். ஆனால் நம் நாட்டுச் சமூக நிலை அப்படி இன்னும் மாறவில்லை. பழைய கொள்கைகளிலோ புதுமையான கொள்கைகளிலோ உள்ள நன்மைகளை நாம் விட்டுவிட வேண்டாம்.

மத்தியதர குடும்பத்துப் பெண்கள் வீட்டிலிருந்து கொண்டே கிடைத்த அவகாசத்தில் தையல், சங்கீதம், கை வேலைகள் இவைகளைப் பிற சகோதரிகளுக்குக் கற்றுக் கொடுப்பது நன்மைதான். நாட்டின் முன்னேற்றத்தில் குடிசைத் தொழில் விருத்தியாகும்போது இம்மாதிரி பெண்களுக்கு நல்ல எதிர்காலம் என்று நம்பலாம்.

கடைசியாக, பெண்களுக்கு எல்லா உத்தியோகங்களும் ஏற்றதல்ல என வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். போலீஸ் உத்தியோகம், தபால் சேவகம், ராணுவ உத்தியோகம், பஸ் கண்டக்டர் இவைகளெல்லாம் பெண்களுக்கு ஏற்ற வேலைகள் அல்ல. அவை பெண்மையைக் குறைக்கும் உத்தியோகங்களாகும்.

ஒரு அகல் விளக்கை உள்ளங்கையில் ஏற்றிக்கொண்டு மற்றொரு கையால் மூடிக் கொண்டால் காணப்படும் அடக்கமான ஜோதியைப் போன்றவள் பெண். சிறந்த ஆபரணத்தின் நவரத்தினக் கற்கள் போன்றவை பெண்ணுடைய சகிப்புத் தன்மை, அறிவுத்திறன், பொறுமை, மேதா விலாசம் போன்ற குணங்கள். ஆனால் அந்த ஆபரணத்துக்கு மெருகு பெண்மைதான் என்பதை மறந்து விடக் கூடாது.

இப்படிக்கு,

பூமாதேவி

# தமிழ் அன்னையின் ஆட்சி

கே. எஸ்.

தமிழ் அன்னை ஆட்சிக்கு வந்து விட்டாள். நம் அன்னையின்சக்தி அமிதமானதே. ஆயினும் அவள் ஆட்சி முறையைப் பலப்படுத்த மக்கள் வீண் குழப்பங்களை விட வேண்டும்.

முதுமொழிகளில் ஒன்று நம் தமிழ் மொழி. ஜீவ நதி போல ஒடிக் கொண்டிருக்கிறது. இதில் இப்போது உள்ள தண்ணீர் ஆயிரம் வருடங்களுக்கு முன் ஒடிக் கொண்டிருந்த அதே நீர்தானு என்று கேட்கலாமா? நீர் மட்டும் வற்ருமல் ஒடிக் கொண்டே யிருக்கிறது. ஜனங்களுக்கு வேண்டியது நீர்தானே? தாகத்தைத் தீர்த்து வாழ்க்கைக்கு உதவும் தண்ணீர் அன்றே அது! ஜீவநதியான கங்கையின் தொன்மையும், ஆழமும், விசாலமும், கம்பீரத் தோற்றமும் கோமள நடையும், எல்லாவற்றிலும் மேலாகப் புனிதத் தன்மையும் வாய்ந்தது அல்லவா நமது தாய்மொழி!

தமிழில் நாம் உபயோகிக்கும் சர்வசாதாரணமான வார்த்தைகளை ஆராய்ந்தால் உண்மை விளங்கித் தெளிவு உண்டாகும். நம் நாட்டின் வட மொழிகளான பிராகிருதம், சம்ஸ்கிருதம் போன்ற சொற்களைத் தவிர வெளி நாட்டு பாஷைகளான அரபி, பார்ஸி, ஈரான், மிஸிரம் போன்ற வார்த்தைகளும் எத்தனை எத்தனையோ தமிழில் கலந்து, தம் உருமாறித் தமிழாகவே வழங்கி வருகின்றன. சில சொற்களைக் கவனிப்போம்.

'அஸ்திவாரம்' அல்லது 'அத்திவாரம்' என்ற சொல் பாரசீக தேசத்தின் சொல். பார்ஸி பாஷையில் 'உஸ்தவார்' என்ருல் 'திடமானது' 'சமதளம்' என்று பொருள்: 'வீட்டுக்கு வானம் தோண்டி அஸ்திவாரம் போட்டாகி விட்டது' என்று நாம் பேசிக் கொள்வதில்லையா?

வான வில்லில் ஊதா, மஞ்சள் பச்சை, சிவப்பு முதலிய நிறங்கள் தெரிகின்றன. இதில் ஊதா என்ற சொல் எந்த மொழியைச் சேர்ந்தது, தெரியுமா? அரேபியா தேசத்திலிருந்து வந்திருக்கிறது. அரபி பாஷையில் இந்தச் சொல்லுக்குக் 'கறுப்புக் கலந்த சிவப்பு நிறமான ஒருவித வாசனைக் கட்டை' என்று பொருள். ('ஊது' என்ருல் 'அகர்' அதாவது ஒரு வாசனைக் கட்டை) இச்சொல்லிலிருந்து 'ஊதுபத்தி' என்ற வார்த்தை உண்டாகியுள்ளது.

புஸ்தகம்: புத்தகம்: என்ன, இதுகூடவா அன்னிய மொழியைச் சேர்ந்தது! ஆமாம், என்ருல் நம்புவீர்களா? இது ஈரான் தேசத்தைச் சேர்ந்தது. நமது தேசத்துக்கு வந்து சுமார் 1400 வருடங்கள் ஆகிவிட்டன. கதையைக் கேளுங்கள் :— சுமார் ஐந்தாவது நூற்ருண்டின் மத்தியில்தான் இச் சொல் நம் தேசத்துக்கு வந்தது. அதற்குமுன், அதாவது வேத காலத்தில், 'கிரந்தம்' என்ற சொல் வழங்கி வந்தது. இச்சொல்லை முதலில் உபயோகித்தவர் பாணன் என்ற பிரசித்தி பெற்ற வடமொழிக் கவிஞர் என்பது மொழி ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

ஈரானி பாஷையில்—'பஹலவி'யில்—'புஸ்த்' என்ருல் தோல் என்று பொருள். அக்காலத்தில் அங்கே பதனிட்ட தோலில்தான் கிரந்தங்கள் எழுதப்பட்டனவாம். இவ் வார்த்தைகளை, அன்னிய தேசத்தவை என்ற காரணத்துக்காக விலக்கி விடுவது புத்திசாலித்தனமாகுமா?

"கந்தையானாலும் கசக்கிக் கட்டு!" இது யார் சொன்னது என்பது ஞாபகமிருக்கிறதா? இதில் உள்ள 'கந்தை' என்ற சொல்லைக் கவனியுங்கள். இது நம் நாட்டு சமஸ்கிருதச் சொல். "கந்தா" என்னும் இச்சொல்லுக்கு ஒட்டுப் போட்டுத் தைத்த உடை என்று பொருள். இம்மாதிரி உடைகளை முன் காலத்தில் யோகிகள் அணிந்திருந்தார்களாம்.

"தச்சன்" என்ற சொல்லும் வடமொழிச் சொல்லேயாம். சம்ஸ்கிருதம், பிராகிருதம், பஞ்சாபி, டோக்ரி போன்ற மொழிகளிலிருந்து நூற்றுக் கணக்கான சொற்கள் தமிழில் கலந்து தமிழ் மயமாகித் தினசரி உபயோகத்தில் வழங்கி வருகின்றன.

மாடி வீடு; கொத்துக் கரண்டி; என்பதில் மாடி; கரண்டி என்ற சொற்களுக்கு நம் தமிழ்மொழியில் என்ன பொருளோ, அதே தான் 'டோக்ரி' பாஷையிலும்.

'டோக்ரி' மொழி காஷ்மீரத்தில் பேசப்படுகிறது. சிறிது கவனியுங்கள்: காஷ்மீரம் எங்கே! தமிழ்நாடு எங்கே! இந்த இரண்டு மொழிகளிலும் சொல் ஒற்றுமை உண்டாகக் காரணம் யாது?

தவிர, ஹிந்தி மொழியில் வழங்கிவரும் ஆயிரக் கணக்கான சொற்கள் நம் தமிழ் மொழியிலும் வழங்கி வருகின்றன. இப்பொழுதுள்ள மொழிப் பிரச்னைக்கு வெகு காலத்துக்கு முன்பே இக்கலப்பு ஏற்பட்டு விட்டது. எத்தேசத்துச் சொல்லாயினும் அதைத் தனதாக்கி வழக்கத்தில் கொண்டு வரும் சக்தி நம் தொன்மையான தமிழ் மொழியின் தனிப் பெரும் குணமாகும்.

23—9—56 'கல்கி' இதழில் ஸ்ரீ ராஜாஜி "மொழிக் குழப்பம்" என்ற கட்டுரையில் குழப்பத்தைத் தெளிவாக்கியுள்ளார்.

"மோட்டாரில் என்ஜின் சரியாக வேலை செய்யவில்லை. கார்பரேட்டர் சரியாகவே யிருக்கிறது" என்ற உதாரண வாக்கியத்தைப் போலவே, "முசாபரி பங்களாவில் தாசில்தார் இருக்கிருர். ஜமாபந்தி நடக்கிறது. தர்காஸ்துப் போட வேண்டும்" என்பதையும் கவனியுங்கள். இதுவும் தமிழ் தானே! இங்குள்ள அன்னிய மொழிச் சொற்களுக்குப் பதில் சங்க காலத்துச் சொற்களைப் புகுத்திக் குழப்பம் செய்வது தேவையா?

கங்கை ஜீவநதி. அன்றும் இன்றும் என்றுமே. ஆனல் அதில் உள்ள தண்ணீர் மட்டும் மாறிக் கொண்டிருக்கவில்லையா? நம் தமிழ்த் தாயும் அப்படியே. அவள் என்றும் கன்னியாகவே தோற்றம் அளிப்பவள்.

பற்கள்
சொத்தை
யாவதை
தடுக்க

ஆக்டிவ்
க்ளோரோபில்
சேர்ந்த அற்புத
மான பச்சை
'கோலினாஸ்'
டூத்பேஸ்ட்

* பற்களை சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது
* பற்களைச் சுத்தமாயும் பிரகாசத்துடனும் வைக்கிறது
* வாய் நாற்றத்தை அகற்றுகிறது
* ஈறுகளுக்குப் பலமளிக்கிறது



'கோலினாஸ்'
நுரை
தனிச் சிறப்பு வாய்ந்தது

GK. 3028




(சென்ற வாரத் தொடர்ச்சி)

கடைசியில் மதுபார்க்க சாஸ்திரியின் இயல்பான அறிவு அவரோடு ஒத்துழைக்க முன் வந்தது. ஸர் மோகன்லாலின் ரசிகத்தன்மையைக் காப்பாற்றிக் கடைத்தேற்றுவதற்காகவே கடவுளாகப் பார்த்துத் தம்மை அவரிடம் அனுப்பியிருக்கிறார் என்ற முடிவுக்கு வந்தார். எந்த எந்த வித்துவான்களுக்கிடையே, தாம் முதல் ஸ்தானம் வகிக்கப் போவதாக அவர் கனவும் கற்பனையும் செய்து வந்தாரோ, அவர்களது பெருமைகளையெல்லாம் மனத்துள் ஒன்று கூட்டி நிறுத்திக் கொண்டார். தமக்கு வெற்றி கட்டாயம் கிட்ட வேண்டும் என்று ஆனைமுகனை வேண்டிக் கொண்டு, பிள்ளையார் சுழியையும் போட்டுக் காகிதத்தில் பேனாவை ஓட்டலானார்.

' அன்புள்ள மனோரமாவுக்கு.

உன் கடிதம். விஷயம் தெரிந்து கொண்டேன். எனது வாடிய மனம் மறுபடியும் மலர்ந்தது. என் அன்பே! நீ எப்பொழுது நோய்ப் படுக்கையிலிருந்து எழுந்திருப்பாய்? இரவு-பகல் எந்நேரமும் எனக்கு இதே சிந்தனைதான். உன்னைக் காண என் உள்ளம் எப்படித் துடிக்கிறது என்பது உனக்கு என்ன தெரியும்? இன்னும் சில தினங்களுக்குள்ளேயே வந்து என் உள்ளத்தின் நிலையை உன்னெதிரே விண்டு வைப்பேன்.

இப்படிக்கு,
உன்னைக் காணத் துடிக்கும்,

.............................

மதுபார்க்க சங்கர சாஸ்திரி நூறுதடவை படித்து, திருத்தி இந்தக் காதற் கடிதத்தைத் தயாரித்தார். ஆனால் அவருக்கு ஒரே ஒரு சந்தேகம். வறண்ட இதயம் படைத்த ஸர் மோகன்லால் இந்தக் கடிதத்தில் கொட்டியிருக்கும் மென்மலர் போன்ற உணர்ச்சிகளுக்கு ஒரு மதிப்பு வைப்பாரோ, மாட்டாரோ என்று! உணர்ச்சியை அவர் கசக்கி எறிந்து விட்டால்......? உள்ளம் இதை எண்ணித் துடித்துக் கொண்டிருந்தது.

ஸர் மோகன்லால் கனிந்த தியாக உள்ளே வந்தார். தலால் ஸேட்டைக் கூப்பிட்டு என்னவெல்லாமோ உத்தரவிட்டார். வேறு சிலரைக் கூப்பிட்டுப் பல கடுமையான உத்தரவுகள் போட்டார். பிறகு மதுபார்க்க சாஸ்திரியின் பக்கம் திரும்பி, ''சாஸ்திரி!'' என்றார் அதிகார மிடுக்குடன்.

''சார்!''

''டும்மஸுக்குப் போக வேண்டிய கடிதம் எழுதியாகி விட்டதா?''

''தயாரா யிருக்கிறது, சார்!''

''சரி. அதோ குஜராத்தி டைப்ரைட்டர் இருக்கிறது, பாரும்! அதில் டைப் அடித்து அனுப்பிவிடும். என் கையெழுத்தையும் டைப் செய்தே அனுப்பிவிடும். மாலையில் என் கார் வரும். அதில் உமது பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டு பாலகேசுவரத்துக்கு வந்து சேரும்!''

இந்தச் சொற்களின் பொருள் சாஸ்திரிக்கு விளங்குவதற்கு முன்னாலேயே ஸர் மோகன்லால் அறையிலிருந்து வெளியேறி விட்டார். அவரது உத்தரவின் பொருள் விளங்கிய பொழுது மதுபார்க்க சங்கர சாஸ்திரிக்கு அவர்மேல் உண்டான ஆத்திரத்தையும் எரிச்சலையும் சொல்லி முடியாது.

3

மதுபார்க்க சங்கர சாஸ்திரி தங்குவதற்கென்று ஸர் மோகன்லாலின் கடற்கரை மாளிகையிலே ஒரு பகுதி ஒதுக்கப்பட்டது. அங்கிருந்த வண்ணமே அவர் எழும்பி விழும் கடலலைகளின் இனிய இசை ஒலியைக் கேட்க முடிந்தது; குதித்தெழும் அலைகளின் விளையாட்டைக் காண முடிந்தது. புறக் காட்சி

யைக் கண்டு ஆனந்திக்கும் அதே வேளையில் அவரது அகத்திலும் அதே நிகழ்ச்சிகள் நிகழத் தொடங்கி விட்டன. என்ன என்னவோ எண்ணங்கள் 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டி போட்டுக்கொண்டு ஒன்றை ஒன்று முந்திக் கொண்டு எழலாயின.

மனோரமாவுக்கு வயது இருபது இருக்கலாம். அவள் ஸர் மோகன்லாலுக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டவள். நோய் வாய்ப்பட்டு விட்டது காரணமாக அவள் கடந்த ஓராண்டாக டும்மலயில் வசித்து வந்தாள். என்ன வியாதி, ஏது வியாதி என்பது யாருக்குமே சரிவரத் தெரியாது. வேலைக்காரர்கள்கூட அது சம்பந்தமாக உரக்கப் பேச முடியாமல் தடை விதிக்கப்பட்டிருந்தனர். அதோடு சிறிது காலமாக ஸர் மோகன்லாலின் முதல் மனைவியின் மகன் பிருந்தாவனனும் தன் சிற்றன்னைக்குக் காவலாக அங்கேயே இருக்கலானான்.

மாலையில் பாலகேசவரத்துக்கு வந்த மதுபர்க்க சாஸ்திரி கருக்கமாக இவ்விவரங்களைத் தெரிந்து கொண்டார். தமது அறையில் போய் உட்கார்ந்து கொண்ட அவர் கடல் அலைகளின் சேஷ்டைகளைக் கண்டு களிப்பதில் ஈடுபட்டார். அப்பொழுது அவரது கற்பனைக் குதிரையும் கட்டுத் தெறித்துக் கொண்டு ஓடத் தொடங்கி விட்டது.

ஸர் மோகன்லாலின் மனைவி எழிலரசியாகவும் ரசிக உள்ளம் படைத்தவளாகவும் இருக்க வேண்டும். இவ்விஷயத்தில் மதுபர்க்க சாஸ்திரிக்குச் சம்சயமே உண்டாகவில்லை. ஆனால் ஸர் மோகன்லாலோ வறட்சியே உருவானவராகவும் சிறிதும் ரஸிகத் தன்மையே அற்றவராகவும்தான் அவர் கண்களுக்குத் தோற்றம் அளித்தார்.

அவள் எத்தகைய எழிலரசியாக இருப்பாள்? இந்தக் கேள்வி மனத்தில் எழுந்தது தான் தாமதம்; மகாகவி காளிதாஸனின் சுலோகம் ஒன்றை அவர் உதடுகள் முணுமுணுத்தன. கண்கள் அதை ஓவியமாகத் தீட்டி, மனோரமாவை அதில் ஆவாகனம் செய்து, கண்டு களித்தன. கண்களை மூடினாலும் அவள் மதிமுகம்; கண்களைத் திறந்தாலும் அவள் மதிமுகம். இந்த இன்ப போதையிலே நினைவிழந்து அவர் எப்பொழுது தூங்கினாரோ, அவருக்கே தெரியாது.



ஆமாம், அவர் கடிதம் எழுதினாரே, என்ன ஆகும்? அங்கிருந்து என்ன பதில் வரும்? அதைப் படித்துவிட்டு ஸர் மோகன்லால் என்ன சொல்வார்? கடவுளே! அவர் எழுதிய கடிதத்துக்கு வரும் பதில் கடிதம், அவர் வேலைக்கு உலை வைக்கக் கூடியதாக வந்து முடியக்கூடாதே!

இதே சிந்தனைதான் இரவு பகல் எந்நேரமும். ஒருவிதமாக மூன்றுநாட்கள் ஓடி மறைந்தன. கடிதமும் வந்து சேர்ந்தது. ஸர் மோகன்லால் அந்தக் கடிதத்தைத் திறந்து பார்க்காமலே மதுபர்க்க சாஸ்திரியின் மேஜைமீது வைத்தார். ''சாஸ்திரி! இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு இன்றைக்கே பதில் எழுதி விடுங்கள். தாமதிக்க வேண்டாம்!'' என்றும் கட்டளையிட்டார்.

சாஸ்திரிக்கு உயிர் வந்தது. அதோடு அடங்கியிருந்த ஆத்திரமும் கோபமும் கூடவே வந்தன. ஸர் மோகன்லால் மீது ஏற்பட்ட வெறுப்பு உணர்ச்சி கடுங்கோடையின் உஷ்ணமானிபோல் ஏறியது. இவரும் ஒரு மனிதரா? என்ன அரக்க குணம்! ஒருவேளை ஆண்டவன் இவருக்கு இருதயத்தை வைக்கவே மறந்து விட்டாரோ? இல்லாவிட்டால் இப்படி உணர்ச்சியற்ற பிண்டமாயிருக்கக் காரணம்?

ஸர் மோகன்லால் வெளியே சென்றதும் சாஸ்திரி கடிதத்தைப் பிரித்தார்:

'அன்பே!

தங்கள் கடிதம் கிடைத்தது. உள்ளத்து உணர்ச்சியை வெள்ளமாகக் கொட்டியிருப்பதைக் காண எந்தப் பெண்தான் விரும்பமாட்டாள்? ஏன், இந்தக் கடிதம் உங்கள் உள்ளத்து வேதனையை அதிகப்படுத்தி விடாமல் இருக்க வேண்டுமே என்பதுதான் என் கவலை. இத்தனை பெரிய வர்த்தகத் துறையில் உழன்று கொண்டிருந்த பொழுதிலும், தாங்கள் அடியாளை மறக்கவில்லை என்பதைக் காணும்பொழுது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியே உண்டாகிறது. தாங்கள் எப்பொழுது வந்து தரிசனம் தந்து என்னை ஆட்கொள்ளப் போகிறீர்கள்?

இப்படிக்கு,

தங்கள் பிரிவால் வாடும்

மனோரமா'

மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் சின்னஞ்சிறு விழிகளில் வெற்றியின் ஒளி பளிச்சிட்டது. அவர் நினைத்தது சரியாகி விட்டது; மனோரமாவைப் பற்றிக் கட்டிய முடிவு முற்றிலும் உண்மையாகி விட்டது: அவர் நினைத்தது போல் அவள் தீர்ந்த ரசிகை, உணர்ச்சிக்கு ஒரு மதிப்புக் கொடுப்பவள் என்பதும் தெள்ளென விளங்கி விட்டது. ஆனால் அவளது அதிர்ஷ்டத்தை என்னவென்பது? ரசிகத்தன்மை என்றால் என்னவென்றே அறியாத உணர்ச்சியற்ற ஒரு ஜடத்தின் கையில் சிக்கி அல்லலுற்று அவதியுற்று மனம் வெதும்பிச் சாக வேண்டும் என்றல்லவா அவள் தலையில் எழுதியிருக்கிறது!......

ஆனால், நல்ல வேளை! ஆண்டவனைப் பார்த்து, வாடி வதங்கும் அப்பூங்கொடிக்கு உயிர் ஊட்டுவதற்காகவே, சரியான தருணத்தில் அவரை அனுப்பிவைத்திருக்கிறார். இல்லாவிட்டால் என்ன ஆகும்? நினைக்கவே அவருக்கு மனம் கூசியது.

உலகத்தின் துயரைத் துடைப்பதற்காகத்தானே ஏசுநாதர் சிலுவையில் ஏறினார்? அப்புறம்தானே அவர் மனத்துக்கும் ஒரு

நிம்மதி உண்டாயிற்று? இந்த நினைவு மது பார்க்க சாஸ்திரியின் நினைவில் எழுந்தது. சின்னஞ் சிறு சாத்விகமான நற்பணிக்காகக் கூடப் பெரும் தியாகங்கள் புரியச் சித்தமாயிருக்கவேண்டும் என்ற சாணக்கிய நீதியை எண்ணி மனத்தைத் திடம் செய்து கொண்டார். பிறகு நடியாத்தைச் சேர்ந்த பிரபல இலக்கியப் பிரும்மாக்களை மனத்துள் வணங்கி விட்டுப் பதில் எழுது வதற்காகப் பேனாவைக் கையில் எடுத்தார்.

'ஆருயிரே!

உன் கடிதம் கண்டேன்; ஆனந்தம் கொண்டேன். கடிதமா அது? வர்த்தகத் துறையின் தொல்லைகளில் சிக்குண்டு தவிக்கும் ஒரே காரணத்தினால், உன்னைப்போன்ற ரத்தினத்தைப் பரிட்சிக்காமலே போட்டு விட்டேன். இப்போது தான் தெரிகிறது, ஈடு இணையற்ற இன்பத்தை இத்தனை நாளும் அநுபவிக்காமலே இருந்து விட்டோமே என்று? இனி வருந்தி என்ன பயன்? அந்த வருத்தத்தைக் கடிதத்தில்தான் வடிக்க முடியுமா? பொறுமையே பூஷணமான உன் குணம்தான் எனக்கு ஆறுதல் அளித்து ஒரு நம்பிக்கையை ஊட்டுகிறது.

இன்னும் சில தினங்கள் பொறுத்துக் கொள். நான் கட்டாயம் உன்னை வந்து காண்பேன். அப்புறம் நாம் இருவரும் இணைந்தே வாழ்வோம். காதற் பொய்கையில் ஆனந்த நீராடுவோம்; களி நடம் புரிவோம். என் பேச்சைப் பரிபூரணமாக நம்பு. பிரிவு என்பது ஓர் புதுமைப் பாலம்—அதைப் பேணி நிற்கும் ஆசைக் கட்டைகள் ஏராளம் பனிமலர் பெய்திடும் பால்நிலவாம்—அதில் பிரேமையை வளர்த்திடுமாம் அந்தப் பாலம்

உன் அன்புள்ள, மோகன்.'

இந்தக் கடிதத்தை அனுப்பிய பின் மது பார்க்க சாஸ்திரியின் மனம் ஒரு நிலையில் இல்லை. எத்தனையோ சிந்தனைகளுக்கு உள்ளாகி அவரையும் வாட்டி எடுத்தது. உட்காரும் பொழுதும் எழுந்திருக்கும் பொழுதும், தூங்கும் பொழுதும் விழித்துக் கொள்ளும் பொழுதும் அவருக்கு மனோரமாவின் நினைவே தான். அந்த நினைவில் பிறர் நலம் பேணிக் காக்கும் நன் நோக்கம் மேலோங்கி யிருந்ததே ஒழியத் தன்னல நோக்கம் சிறிதும் இல்லை.

மூன்றாவது நாள் மறுபடியும் பதில் வந்தது.

' அன்பே!

கடிதம் கிடைத்தது. நான் சுகமாக இருக்கிறேன். அநேகம் தடவைகள் நான் தங்கள் கடிதத்தைப் படித்தேன். படிக்கப் படிக்கத் தெவிட்டவில்லை. சாதக பட்சிக்குச் சுவாதி நீர் கிடைத்தது போன்ற இன்பத்தைப் பெற்றேன். தங்கள் சொற்களில் மண்டிக் கிடக்கும் இனிமையும் உணர்ச்சியின் தூய வேகமும் என்னை மதி கிறங்க வைத்து விட்டன. சுத்தமான சாத்துவிக அன்புக்காக ஏங்கி நிற்கும் இந்த அடியாளை இத்தனை நாட்களும் ஏன்தான் இப்படிச் சோதித்தீர்களோ, புரியவில்லை? சரி, ஏதோ நடந்தது நடந்து விட்டது. இனிமேலாவது சோதிக்காமல் இருப்பது உங்கள் கையில் இருக்கிறது.

என் அன்பே! அரும்பே! கட்டிக் கரும்பே! நாம் எப்பொழுது நேரில்சந்திப்போம்? கடிதத்தின் வறட்டுச் சொற்களைப் படிப்பதைக் காட்டிலும், நேர்முகமாக உங்கள் இனிய சொற்களையே கேட்க ஆசை கொள்கிறேன். அந்த அரிய வாய்ப்பை எப்பொழுது அளிக்க உத்தேசித்துள்ளீர்கள்?

பொறுமை இழந்து
தவித்து உருகும்
மனோரமா'

இதைப் படித்தவுடன் மதுபார்க்க சங்கர சாஸ்திரியின் உள்ளத்தில் ஆனந்தப் புயலே உருவாகி விட்டன. பதினைந்து நிமிஷ நேரத்துக்கு அவரது அபிப்பிராயங்களை ஆட்டம் கொடுத்து விட்டன. உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த சிந்தனைச் சுடர் பைக்கென்று அணைந்து விட்டது. இன்ப வாரிதியின் சலசலப்பு மட்டும் சிறிது நேரம் அவரது நரம்புகளுக்குள்ளே கேட்டுக் கொண்டிருந்தது. அவர் வைத்த கண் வாங்காமல் கடிதத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் நாவில் மனோரமாவின் பெயர் நடனமாடியது.

புயலின் வேகம் சற்றுத் தணியவே, அவரது உள்ளத்தில் என்ன என்னவோ எண்ண அலைகள் ஒன்றை ஒன்று அடித்து அழித்துக் கொண்டு எழலாயின. இந்தக் கடிதப் போக்குவரத்தின் விஷயம் ஸர் மோகன்லாலுக்குத் தெரிந்துவிட்டால்....? அவரது உத்தியோகத்துக்கே ஆபத்து நேர்ந்து விட்டால்....? இது போன்ற எத்தனையோ 'விட்டால்?' கேள்விகள் அவர் மண்டையைத் துளைத்துவிட்டன. அதோடு இன்னொரு கேள்வியும் அவர் மனத்தைக் குடைந்தது.

'பிறர் மனைவியுடன் இதுபோன்ற கடிதப் போக்குவரத்து நடத்துவது உசிதமாகுமா?'

விடை காண முடியாத இந்தக் கேள்வி அவரை வெகு நேரம் திக்குமுக்காட வைத்து விட்டது. கடைசியில் கடிதம் எழுதும் நேரம் வந்து விடவே, எல்லாக் கேள்விகளையும் ஒரே அமுக்காக அமுக்கிவிட்டுக் கடமை உணர்ச்சி மேலிட்டு நின்றது. 'நாம் நமக்காகவா எழுதுகிறோம்? நம் உள்ளத்தில் தீய நோக்கத்துக்குச் சிறிதும் இடம் இல்லை. ஸர் மோகன்லாலிடம் ஊதியம் பெறும் ஊழியன் நாம். அவர் சொல்வதைக் கேட்கவேண்டி




''வெளிவந்த எல்லாப் புத்தகங்களையும் இனிமாவாக எடுத்து விட்டாங்க சார்!''

''இல்லை! இன்னும் ஒரு புத்தகத்தை மாத் திரம் எடுக்கவில்லை!''

''அது எந்தப் புத்தகம்?''

''அகராதியைத்தான் சொல்கிறேன்!''

யது நம் கடமை. கடமையைச் செய்யும் பொழுது தவறு எங்கிருந்து வந்தது?' இவ்வாறு மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்ட அவர் கடமையிலே கண்ணானார்.

**ப**ம்பாய்க்கும் டும்மலாக்குமிடையே இனிய காதற் கடிதங்கள் வளர்ந்தன; அன்புப் பரி வர்த்தனை அமோகமாக நடந்தது. மதுபர்க்க சாஸ்திரி ஏழாவது வானத்திலே மிதக்கத் தொடங்கி விட்டார். காலையில் எழுந்ததும் அவர் வந்த கடிதங்களைப் பாராயணம் செய் வார். பகல் வேளைகளில் அவற்றைச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு தமது ஞாபக சக்தியை வளர்ப்பதில் முனைவார். மாலை வேளைகளில் மறுபடியும் ஒரு முறை பாரா யணம் செய்துவிட்டு இரவு வேளைகளில் அரை குறைக் கனவில் அவற்றையே உருப்போட்டு உரக்கப் படிப்பார்.

மதுபர்க்க சாஸ்திரிக்குத் தமது கடமை உணர்ச்சியில் அசைக்க முடியாத ஒரு நம் பிக்கை இருந்தது. அந்த நம்பிக்கைக்கு வெற்றி கிட்டுவதாகத் தோன்றவே, அவரது உள்ளம் ஆனந்த நர்த்தனம் புரியத்தொடங்கி விட்டது. கல் அணை உடைத்துக் கொண்டு விட்டால் நீர்ப்பிரவாகம் வெகு வேகமாகப் பீறிக் கொண்டு வெளி வருகிறதல்லவா? அதே போல் ஸர் மோகன்லாலின் வறட்சி மனப் பான்மை யெல்லாம் இருந்த இடம் தெரியா மல் மறைந்துவிட்டது என்ற எண்ணம் ஏற் படவே, மனோரமாவின் உள்ளமும் எழுது கோலும் ஒருங்கே சேர்ந்து நாற்புறங்களையும் இனிமை தோய்ந்ததாகச் செய்து விட்டன என்றே எண்ணினார் மதுபர்க்க சாஸ்திரி.

ஒரு சாதாரண குஜராத்திப் பெண்மணி வெகு அழகாகவும் பண்பு தோயவும் காதற் கடிதங்கள் எழுதுவதில் கைகாரியாக இருக் கிறாள் என்பதை எண்ணியபொழுது, இலக் கிய உள்ளம் படைத்த மதுபர்க்க சாஸ்திரி யின் கண்கள் ஆனந்தக் கண்ணீரையே சொரியலாயின. அதோடு அவளது கடைசிக் கடிதம் எல்லாவற்றையும் தூக்கியடிக்கக் கூடியதாக அமைந்து விட்டது.

'உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மோகன்,

தங்கள் பிரிவால் வாடும் இந்த மனோரமா வின் வணக்கங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். என் ஒவ்வொரு மயிர்க்காலும் உங்கள் பெய ரையே நாமஸ்மரணை செய்து கொண்டிருக் கின்றன. இலக்கிய வல்லுநர்களது குரலோடு குரல் சேர்த்து என் உள்ளமும் ஒத்துப் பாடிக் கொண்டிருக்கிறது.

தடாகத்தில் மலர்ந்திருக்கும் தாமரையைத்
தவிக்கவிட்டுப் பறந்துசெல்லும் வண்டு—
போலே
கானகத்தில் கதறி அழும் கோபியர்களைக்
கலங்கவைப்பது ஞாயமா, கண்ணா,
ஞாயமா?

என் உள்ளம் உருப்போடும் இந்த ஆசை எப்பொழுது நிறைவேறும்? உள்ளத்துப் புயல் எப்பொழுது ஓயும்? அடுத்த சனிக்கிழமை வருவதாகத் தாங்கள் வாக்களித்துள்ளீர்கள். கட்டாயம் வருவீர்கள் அல்லவா? என் மனம் பொறுமை இழக்கிறது. நீங்கள் வரா விட்டால் நானே நேரில் வந்து விடுவேன்.

பொறுமை இழந்துவிட்ட
மனோரமா'

இந்தக் கடிதத்தைப் படித்துக் கொண் டிருந்தபொழுது மதுபர்க்க சங்கர சாஸ்திரி யின் கையிலிருந்த உறையிலிருந்து இன்னொரு காகிதம் விழுந்தது. அதில் எழுதியிருந்தது:

'வாடத் தொடங்கி விட்ட என் உள்ளப் பூங்காவுக்குப் புத்துயிர் ஊட்ட முற்பட்டிருக் கும் ரசிக சிகாமணியான தோட்டக் கலை ஞரே! நீங்கள் எத்தனை நாட்கள்தான் என் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் மறைமுக மனமோகனனாக இருக்கத் திட்டமிட்டிருக் கிறீர்கள்? போதும், இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டு. அடுத்த சனிக்கிழமை யன்று உள்ளத்தோடு உள்ளம் ஒட்டவும், கண்ணோடு கண் நோக்கவும் வேண்டும்; நம்மிருவருக்கும் இடையே நெருங்கிய அறிமுகமும் கிட்ட வேண்டும். அதற்கான வழிவகைகோலுங்கள். நான் நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு முதல் மாடியில் உள்ள என் அறையில் உங்கள் பெயரை உருப்போட்டுக் கொண்டே உங்க ளுக்காக வழிமேல் விழிவைத்தவாறு காத் திருப்பேன், காத்திருப்பேன்..'

இந்தக் கடிதத்தைப் படித்ததும் மதுபர்க்க சாஸ்திரிக்குத் தலை சுற்றியது. நஞ்சுள்ள நாகத்தைக் காலால் மிதித்து விட்டது போன்ற உணர்ச்சியில் ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தார். ஆனால் அடுத்த கணமே அதற்கு நேர்மாறான நிலையை அடைந்தார். பழைய ஓட்டைக் குடிசை, ரத்தினம் பதித்த மாளிகை








Asha
FACE POWDER





யாகக் காட்சி அளித்தபொழுது அவளுக்கு என்ன உணர்ச்சி உண்டாகியிருக்குமோ, அதுவே அவர் உள்ளத்தை நிறைத்தது. இனிமை நிறைந்த இத்தனை இன்பக் கடிதங்களும் ஸர் மோகன்லாலுக்காகவா எழுதப்பட்டன? அவரைக் காண்பதற்காகவா அத்தனை துடிதுடிப்பும் பரபரப்பும் அக்கடிதத்தில் தொனித்தன? ஆவலுந்த அந்தத் தாமரையாள் மகரந்தத்தை நாடி வரும் மலர் வண்டுக்கல்லவா அந்த அழைப்பை விடுத்திருந்தாள்! இந்த எண்ணம் உதித்ததும், உடலோடு அவர் உள்ளமும் ஆனந்தக் கூத்தாடத் தொடங்கி விட்டது.

ஆனால் மதுபர்க்க சாஸ்திரி நல்ல அறிவாளி, சாமர்த்தியசாலியுங்கூட. தமக்கும் மனோரமாவுக்கும் ஏற்பட்டுள்ள இந்த உறவு ஒரு புதிய பயங்கர உருவம் தரித்துக் கொண்டு விடக் கூடாதே என்ற கவலையும் அவருக்கு இல்லாமல் இல்லை. எனவே, ஸர்மோகன்லாலின் மனைவியோடு தாம் தனித்துத் தெரியாமல் சந்திக்கலாமா கூடாதா என்ற கேள்வி அவர் உள்ளத்தில் எழுந்தது. அதைத் தொடர்ந்தாற்போல் நடிகோத் கிராமத்தில் கிணற்றிலிருந்து தண்ணீர் மொண்டு செல்லும் இல்லக் கிழத்தி கண்ணெதிரே வந்து நின்றாள்.



ஒரு புறம் ரசனை நிறைந்த காதலன் கிடைக்காமையினால் உருகி உருகிச் சாகும் பம்பாய் அழகி; இன்னொரு புறம் கணவனே கதி, அவனே தெய்வம் என்றிருக்கும் கிராமப் பெண். ஒரு புறம் காவியம், ரசனைத்திறன்; ஈடு இணையற்ற ஆத்மானந்தம். இன்னொரு புறம் கற்பு நிலையின் பெருமை, நன்மை தீமைகளை ஆய்ந்தறியும் விவேகம்; வருங்காலச் சந்ததிகள் மீது மாசுபடியுமோ என்ற பயம். இப்படியாக ஒன்றை ஒன்று போட்டி போட்டுக்கொண்டு கண்ணெதிரே வந்து நின்றன.

ஆனால் மனோரமா களங்கமே சிறிதும் அற்றவளாக ஏன் இருக்கக்கூடாது என்ற எண்ணமும் எழுந்தது. ரசிக உள்ளத்தின் ஊற்றுப் பெருக்கு வறண்டு விடக்கூடாது என்பதற்காகவே அவள் ஒரு ரசிக சிரோமணியைக் காண விரும்பியிருக்கலாம் அல்லவா? இதில் என்ன தவறு? பாவம்தான் ஏது?

அதுமட்டும் அல்ல; மதுபர்க்க சாஸ்திரியின் உள்ளங்கூடத்தான் சுத்தமாகவும் சாத்விகமானதாகவும் இருந்தது. அவருக்கு ஒரு பற்றுதலும் கிடையாது. பலன் ஏதும் விரும்பாமலே கர்மயோகத்தில் ஈடுபடத் தயாராயிருந்தார். மனோரமாவைச் சந்தித்து அவர் இரண்டொரு வார்த்தைகள் பேசுவாரானால், மனோரமாவுக்கும் நன்மை ஏற்படும்; அவர் மனத்துக்கும் அமைதி கிட்டும். இதில் அவர் தமது சகதர்மிணிக்கு என்ன துரோகம் செய்யப் போகிறார்? அவர் தம் சகதர்மிணியைச் சேர்ந்தவர்தான்; என்றென்றும் சேர்ந்தவராகவே இருக்கப் போகிறவர்தாம்.

இத்தகைய எண்ணப் போராட்டங்களுக்குப் பிறகு, அவரது தளர்ந்த மனம் உறுதிப்பட்டது. இதே சமயம் ஸர் மோகன்லாலும் ''சாஸ்திரி! நாளை மறுநாள் சனிக்கிழமை நீங்களும் என்னோடு டும்மஸுக்கு வரவேண்டியிருக்கும்!'' என்று சொல்லிப் போனார்.

## 4

சனிக்கிழமை அன்று மதுபர்க்க சங்கர சாஸ்திரி போட்ட திட்டப்படி ஸர் மோகன்லாலுடனும் டும்மஸை அடைந்தார்.

அவர், மாளிகையின் வாசலிலேயே படைப்புக் கடவுளின் அற்புத சிருஷ்டியான புதிர்ப் பெண்ணைக் காணப்போகிறோம் என்று எண்ணியிருந்தார். ஆனால் அவருக்குப் பதிலாக ஸர் மோகன்லாலின் முதல் மனைவியின் மகனை பிருந்தாவனத்தைத்தான் காண முடிந்தது.

அவருக்குக் கீழ்த் தளத்திலேயே மாடிக்குப் பக்கத்திலேயே ஒரு அறை ஒழித்துக் கொடுக்கப் பட்டது. முதல் மாடியில் ஒருபுறம் மனோரமாவின் அறை இருந்தது. மறுபுறம் நர்ஸின் அறை இருந்தது. ஸர் மோகன்லாலும் பிருந்தாவனனும் இரண்டாவது மாடியில் தூங்குவதாகத் திட்டம்.

பேச்சு வாக்கில், உடல் நிலை சரியில்லாததனால் மனோரமா தன் அறையிலிருந்து வெளியே வரவேயில்லை என்றும், அன்று இரவு நர்ஸ் தன் சொந்த வேலையாகச் சூரத்துக்குப் போகப் போகிறாள் என்பதும் சாஸ்திரிக்குத் தெரிய வந்தன. சூழ்நிலை தமக்குச் சாதகமாக அமைவதைக் கண்டு மதுபர்க்க சங்கர சாஸ்திரிக்கு ஆனந்தம் நிலைகொள்ளவில்லை. யார் என்ன பேசுகிறார்கள் என்பதைக்கூட அவர் காதுகளில் வாங்கிக் கொள்ளவில்லை.

மணி ஒன்பது அடிக்கவில்லை. அதற்குள்ளாக மதுபர்க்க சாஸ்திரி நிமிஷங்களை எண்ண ஆரம்பித்து விட்டார். நேரம் நெருங்க நெருங்க அவர் உள்ளத் துடிப்பு அடங்கி ஒடுங்கலாயிற்று.

ஆனால் அவரது ரசிகத்தன்மை படைத்த உள்ளம் அவரைத் தூங்கவும் விடவில்லை; சும்மா ஓய்ந்திருக்கவும் விடவில்லை. மனோரமாவைப் பார்த்துப் பேசும் சந்தர்ப்பம், அவளைப் போன்ற ரசிகத்தன்மை நிறைந்த பெண்ணோடு பேசுவதனால் ஏற்படக்கூடிய பயன், தமது பாண்டித்தியத்தையும் ரசிகத்தன்மையையும் காட்டுவதற்காகக் கிடைத்திருக்கும் பொன்னான தருணம் ஆகியவற்றைக் கை நழுவ விடுவது கூடாது என்று எச்சரித்துக் கொண்டிருந்தது. அப்படிச் செய்வதானது வருங்காலச் சந்ததியர்களுக்குத் தீங்கிழைப்பதாக முடியும் என்றும் அறிவுறுத்திக் கொண்டிருந்தது. ரசிகத்தன்மை வாய்ந்த பெண் ஒருத்தி தன் வெட்கம் மானத்தை விட்டுவிட்டு, அவரை அழைத்திருக்கிறாள். அவர் அதை மறுத்தால் பயங்கொள்ளித்தனமாக முடியாதா?

அறையில் இருந்த கடிகாரம் பதினொன்றரை அடித்தது. மதுபர்க்க சங்கர சாஸ்திரி எழுந்து நின்றார். வெகுநேரம் 'போவதா, வேண்டாமா?' என்று யோசித்தார். 'தாம் தன்னவ

நோக்கத்தோடு முன்னேறவில்லை' என்ற எண்ணம் அவருக்கு மனோதிடத்தை அளித்தது.

அவர் வராந்தாவைப் பார்த்தார். அங்கு யாரும் இல்லை. மாடிப்படியை ஒரு நோட்டம் விட்டார். அங்கும் யாரும் இல்லை. இடம், பொருள், ஏவல் எல்லாம் அவருக்கு அநுகூலமாக இருந்தன. அவர் மெதுவாக மாடிப்படி ஏறலானார்.

அவர் கால்கள் எழும்ப மறுத்தன. உள்ளம் தளர்ந்தது. வெட்கம் வேறு சேர்ந்து கொள்ளவே, அவர் உடல் முழுவதும் வியர்த்து விறுவிறுத்து விட்டது. அவருக்கு இருந்த மனக் கலவரத்தில் ஒன்றும் புரியவில்லை.

அவர் தம் மனத்தை ஒருமைப்படுத்த முனைந்தார். அவர் முனைய முனைய அது பல முனைகளிலும் பரவி அவரை அச்சத்துக்கு ஆளாக்கியது. அப்புறம் அவர் கண்களுக்கு ஒரே வழிதான் தோன்றியது. 'நல்லவனாகக் கீழே இறங்கிப் போய் விடுவதுதான் நலம்' என்பதுதான் அந்த வழி.

ஆனால் கால்கள் முன்னுக்கும் போகமாட்டோம், பின்னுக்கும் போகமாட்டோம் என்று சத்தியாக்கிரஹம் செய்யத் தொடங்கி விட்டன. நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துண்டினால் துடைத்துக் கொண்டார். பிறகு துணிவையெல்லாம் ஒன்று கூட்டிக் கொண்டு மீண்டும் படியேறினார். மெதுவாகக் கதவைத் தள்ளினார். அது திறந்து கொண்டது. நிலைப்படியில் நின்று கொண்டு மேலே, கீழே நாற்புறமும் ஒரு முறை பார்த்தார். எங்கும் பூர்ண அமைதி நிலவியிருந்தது. அவர் அறைக்குள் நுழைந்தார். ஒருபுறம் விடிவிளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அழகான மெத்தையில் யாரோ படுத்துக் கொண்டிருந்தார்கள்.

மதுபர்க்க சாஸ்திரிக்கு இரக்கம் உண்டாயிற்று. 'பாவம், எத்தனை நேரம் நமக்காக வழி மேல் விழி வைத்த வண்ணம் காத்துக் கிடந்தாளோ? கடைசியில் களைத்துத் தூங்கிப் போயிருக்கிறாள்! பிறரைக் கல் நெஞ்சர் என்று சொல்லிவிட்டு, நாம் எத்தனை கல் நெஞ்சினராக ஆகிவிட்டோம்?' என்று தம்மைத் தாமே நொந்து கொண்டார்.

அறையில் அமைதியின் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. கட்டிலிலிருந்து மூச்சுவிடும் மெல்லிய தொனி மட்டுமே கேட்டது.

கட்டிலை நெருங்கிய மதுபர்க்க சாஸ்திரி கண நேரம் பேசாமல் நின்றார். பிறகு துணிவை வரவழைத்துக் கொண்டு போர்வையைத் தொட்டு 'மனோரமா!' என்று கூப்பிட வாய் எடுத்தார். அதற்குள் கட்டிலிலிருந்து யாரோ குதித்து எதிரே வந்து நின்றார்கள்.

நின்று கொண்டிருந்தது ஆண் அல்ல; பெண். அந்தப் பெண் உருவம்தான் என்ன கோரம்! நோயினால் கறுத்துக் கன்னிப் போன தோல், உலர்ந்து ஒட்டிப் போன உடல், பைத்தியக்காரர்களைப் போல் பேந்தப் பேந்த விழிக்கும் கண்கள், இத்தகைய பயங்கர அழகைப் பெற்றிருந்த மனோரமாவைப் பார்த்ததும் மதுபர்க்க சாஸ்திரிக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது.

"ஏண்டா! உன் சிற்றன்னைக்கு விஷமா கொடுக்க வந்திருக்கிறாய்? உன் உயிரை வாங்கி விட்டு மறு காரியம் பார்க்கிறேன், பார்!" என்று ஆவேசத்துடன் கூறினாள் அவள்.

அவ்வளவுதான், மதுபர்க்க சாஸ்திரிக்கு உதறல் எடுத்தது. அவர் உடல் வியர்வையினால் சொட்டச் சொட்ட நனைந்து விட்டது. மனோரமா பெண் புலியாகி அவர் மீது பாய்ந்தாள். நிலைமை மிகவும் இசகேடாகி விட்டது. உதவிக்கு யாரையாவது கூப்பிடலாம் என்றால் எப்படிக் கூப்பிடுவது? அவரது ரகசியங்கள் அம்பலமாகி விடாதா? எனவே, சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் திக்குமுக்காடினார். தமக்கும் மனோரமாவுக்கும் நிகழப் போகும் பெரும்போர் அவரது கண்ணெதிரே விசுவரூபமெடுத்து நின்றது.

நிகழப்போகும் இந்தப் போரின் பொழுது, அவர் வணங்கி வழிபடும் இலக்கியப் பிரம்மாக்கள், அமரர்கள் வாழும் வானுலகத்திலிருந்து பார்த்து ரசிப்பார்களா? அவரது யுத்த சாதுரியத்தைப் புகழ்வார்களா? இதையெல்லாம் அவரால் அப்பொழுது கற்பனைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. சொர்க்கவாசிகளான தேவர்கள் மகாபாரதம் நிகழும் பொழுது பூமாரி பொழிவார்களாமே. அப்படி இங்கேயும் நிகழுமா? இதையும் அவரால் சிந்தித்துப் பார்க்க இயலவில்லை.

ஒரே பாய்ச்சலில் மதுபர்க்க சாஸ்திரி அறைக்கு வெளியே வந்தார். திரும்பிக்கூடப் பாராமல் கடகடவென்று இறங்கிக் கீழ்ப்படிக்கு வந்தபின்தான் மூச்சேவிட்டார். வந்த வேகத்தில் வேட்டியும் சொக்காயும் நாதாங்கியில் மாட்டிக் கொண்டு கிழிந்தது கூடத் தெரியவில்லை. தலைதெறிக்க ஓடிவந்த வேகத்தில் மதுபர்க்க சாஸ்திரி உயிர்ப்பிணமாகவே படியருகில் உட்கார்ந்து விட்டார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் இரண்டாம் மாடியிலிருந்து இனிய குரலில் பிருந்தாவனன் தெம்மாங்கு மெட்டில் பாடுவது கேட்டது.

"நள்ளிரவின் அமைதியிலே
காரிருள் மண்டிக்கிடக்கையிலே
கண்ணிரண்டும் இமைக்காத
காதலர் கதை கேளுமையா!"

பாட்டைக் கேட்டதும் மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் மனத்திலே ஒரு மின்னல் பளிச்சிட்டது. மனோரமாவுக்கு என்ன ரகசிய நோய் ஏற்பட்டிருந்ததென்றும், கடிதங்கள் எல்லாம் யார் சொல்லி யார் எழுதியிருக்க வேண்டும் என்ற விவரங்களும் அதன் ஒளியில் தெள்ளென விளங்கின. மேலே இரண்டாவது மாடியிலே உட்கார்ந்து பாடிக் கொண்டிருந்த பிருந்தாவனன்தான், நர்ஸைக் கொண்டு இந்த நாடகம் நடத்தியிருக்க வேண்டும் என்பதைக்கூடப் புரிந்து கொள்ளவில்லையென்றால் மதுபர்க்க சாஸ்திரி தம்மை இலக்கிய பிரம்மாக்கள் கோஷ்டியில் ஆதாரப் புள்ளியாக எப்படி நினைத்துக் கொள்ள முடியும்?

விடியற்காலையில் சூரத் ஸ்டேஷனில் ஒரு இளைஞர் பம்பாய்க்கு டிக்கட் வாங்கிக்கொண்டிருந்தார். இரவு தூக்கமில்லாத காரணத்தினால் மிகவும் களைப்புற்றுக் காணப்பட்ட அந்த இளைஞர் வேறும் யாரும் இல்லை; மதுபர்க்க சங்கர சாஸ்திரியேதான்!

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

# மீனுக்குத் தண்ணீர் அவசியம்போல உங்கள் காருக்கு **மோபிலாயில்** அவசியம்

...கார் சுகமாக ஓட அத்தியாவசியமான ஒரு ஸ்டான்வாக் தயாரிப்பு

மோபிலாயில் எங்கள் மோட்டார் எண்ணெயின் வர்த்தகம் பெயரேயன்றி, மோட்டார் எண்ணெய்களைக் குறிப்பிடும் பொதுவான பதமல்ல. இது பறக்கும் செங்குதிரை அடையாளமுள்ள இடத்தில் மட்டுமே கிடைக்கும்.






ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது: கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon